# இலக்கிய நோக்கில் திருவந்திபுரம்






THIS BOOK IS

PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

UNDER THEIR SCHEME

AID TO PUBLISH RELIGIOUS BOOKS

திருமதி. கோ. ஜெயசித்ரா, எம்.ஏ., எம்.ஃபில்.,

# இலக்கிய நோக்கில் திருவந்திபுரம்

திருமதி. **கோ. ஜெயசித்ரா,** எம்.ஏ., எம்.ஃபில்.,
விரிவுரையாளர் (மாலைநேரக் கல்லூரி)
சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி
கடலூர் - 607 001.

**ஸ்ரீ தேவநாதன் பதிப்பகம்**
106, பாரதிதாசன் தெரு,
ஜோதி நகர், கோண்டூர் அஞ்சல்
கடலூர் - 607 002

## நூல் குறிப்பு

| | |
|---|---|
| நூலின் பெயர் | : இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் |
| ஆசிரியர் | : திருமதி. கோ. ஜெயசித்ரா |
| பதிப்பு | : முதல் பதிப்பு, டிசம்பர், 2006 |
| பதிப்புரிமை | : ஆசிரியருக்கே |
| தாள் | : 11.6 சேஷாயி மேப்லித்தோ |
| வெளியீடு | : ஸ்ரீ தேவநாதன் பதிப்பகம்<br>106, பாரதிதாசன் தெரு<br>ஜோதி நகர்<br>கோண்டூர் அஞ்சல்<br>கடலூர் - 607 002 |
| பொருள் | : திருவந்திபுரம் கோயில் பற்றிய<br>இலக்கிய நோக்கில் திறனாய்வு |
| விலை | : ரூ. **65**/- |
| நூலின் அளவு | : க்ரவுன் 1/8 |
| பக்கங்கள் | : 224 |
| அச்சிட்டோர் | : சுபம் ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>சுப்பிரமணியம் தெரு, சிதம்பரம்.<br>✆ 232544 |

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஆசியுரை

**செய்ய பரத்துவமாய், சீரார் வியூகமாய்**
**துய்ய விபவமாய்த் தோன்றிவற்றுள் - எய்துமவர்க்கு**
**இந்நிலத்தில் அர்ச்சாவதார மெளிதென்றான்**
**பன்னுதமிழ் மாறன் பயின்று - ஸ்ரீ மணவாள மாமுனிகள்**

உலகைப் படைத்து, காத்தளிக்கும் திருமால், உலகோர்களை உய்விக்க, பயிர்த்தலையில் குடிசை போட்டு பயிர்களைக் காத்தருளுவதுபோல தானே பதிகள் தோறும் கோயில் கொண்டு அனைவரையும் வாழ்வித்தருளுகிறான். அப்படிப்பட்ட நவகோடி நாராயண க்ஷேத்ரங்களுள், 108 திவ்ய தேசங்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. ஆழ்வார்களால் போற்றிப் பாடப் பெற்ற பெருமையை உடையவை இப்பதிகள்.

இந்த 108 திவ்ய தேசங்கள் வடநாட்டுத் திருப்பதிகள் (11), தொண்டை நாட்டுத் திருப்பதிகள் (22), நடு நாட்டுத் திருப்பதிகள் (2), சோழநாட்டுத் திருப்பதிகள் (40), பாண்டிநாட்டுத் திருப்பதிகள் (18), மலை நாட்டுத் திருப்பதிகள் (13), திருநாடு திருப்பாற்கடல் (2) என

அமைந்துள்ளன. இவற்றுள் நடுநாட்டு திருப்பதிகள் திருக்கோயிலூரும் திருவஹிந்திரபுரமும் ஆகும். திருக்கோவலூர் முதலாழ்வார்கள் திருவிளக்கு ஏற்றி திருமாலைக் கண்டு நாலாயிர திவ்ய பிரபந்தத்தின் முதல் மூன்று அந்தாதிகள் பாடிய திருத்தலம் ஆகும். திருவயிந்திரபுரம் திருமங்கையாழ்வாரும், ஸ்ரீ வேதாந்த தேசிகரும் பனுவல் பாடிய திருத்தலமாகும்.

மிகப் பழமையான இத்தலத்தின் சிறப்புகளை இலக்கிய நோக்கிலும், புராணங்கள், கல்வெட்டுச் சான்றுகள் ஆகியவை அடிப்படையிலும், இக்கோயிலின் வரலாறு, திருக்கோயில் அமைப்பு, வழிபாடும் விழாக்களும், திருப்பணிகள், நிர்வாகம் ஆகியவை பற்றி, முழுமையான ஆய்வு நோக்கில் பகுப்பாய்வு முறை, விளக்க முறை, மதிப்பீட்டு முறை, சான்றுவழி முறை, நேர்முகம், ஆகிய ஆய்வு முறைகளை இந்நூலின் ஆசிரியை திருமதி கோ. ஜெயசித்ரா அவர்கள் பயன்படுத்தி இத்திருக்கோயில் பற்றி முழுமையான நூலைத் தயாரித்துள்ளார்கள்.

இலக்கியங்களில் திருவந்திபுரம் என்ற இயலில், இத்தலம் பற்றிய அனைத்து இலக்கியங்களும் கூறும் செய்திகளை ஒருங்கே திரட்டிக் கொடுத்துள்ளது புதிய அணுகுமுறையாகும். வழிபாடும் விழாக்களையும் விவரிக்கும் ஆசிரியை விழாக்களின் விபரங்களை மட்டும் கொடுக்காமல் ஒவ்வொரு விழாவின் நடைமுறைச்

சிறப்புகளைக் கொடுத்துள்ளது அரிய பெரிய முயற்சியாகும். கோயில் அமைப்பில் ஒரு பெரிய திருக்கோயிலுக்கு அமைய வேண்டிய அனைத்து ஆவரணங்கள், மண்டபங்கள், கடவுளர்களின் திருவுருவ அமைதி, அவற்றின் பயன்பாடு ஆகிய விவரங்களைத் தொகுத்து கொடுத்துள்ளது ஆசிரியையின் உழைப்பிற்குச் சான்று பகருகின்றது.

திருக்கோயிலின் வளர்ச்சியை வரலாற்று நோக்கில் அத்தனை சிலாசாஸனங்களையும் படியெடுத்து, பல்லவ, சேர, சோழ, பாண்டிய, இராட்டிர கூட, நாயக்கர்கள் மற்றும் ஊர் பெருமக்கள் அவ்வப்போது செய்துள்ள திருப்பணிகள், திருவிழாக்கள் பற்றிய அனைத்து செய்திகளையும் திறம்பட ஆய்வு செய்துள்ளது மிகவும் பாராட்டுதலுக்குரியது. தலவிருட்சம் பற்றி ஆசிரியை அளித்துள்ள செய்தி மிகவும் பயனுள்ளதாக உள்ளது.

ஆக இந்நூல் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவை பற்றி வழக்கமாக கூறப்படும் செய்திகளை தொகுத்தளிப்பதோடு நில்லாமல், இலக்கியங்கள், கல்வெட்டுகள் ஆகியவை மூலமாகக் கிடைக்கும் அரிய செய்திகளை ஆய்வு செய்து, இலக்கிய நடையில் அளித்திருப்பது, திருக்கோயில் பற்றிய ஆராய்ச்சியில் ஒருசாதனையாகும். இவ்வகையில் இந்நூல் ஆசிரியை புதுமை படைத்து வழிகாட்டியுள்ளார். எனவே இந்நூலாசிரியை இந்நூல் முதல்நூலாகக் கொண்டு மற்ற

திவ்ய தேசங்களின் வரலாறு மற்றும் வளர்ச்சிகளையும் ஆய்வு செய்து வைணவத் திருக்கோயில்களின் களஞ்சியத்தைப் படைத்து உலகுக்கு வழங்குமாறு வாழ்த்துகிறேன்.

அ.நகர்
15.12.2006

முனைவர். ***அ.வே. ரங்காச்சாரி***
முன்னாள் பொருளாதாரத்துறை பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
அண்ணாமலைநகர்.

..................

# அணிந்துரை

''**இலக்கிய நோக்கில் திருவந்திபுரம்**'' என்னும் இந்த நூல் 108 திவ்ய தேசங்களுள் ஒன்றான நடுநாட்டுத் திருவந்திபுரம் கோயிலைப் பற்றியது. தமிழும் சமயமும் வளர்த்த வைணவக் கோயிலின் அமைப்பும், சிறப்பும், இலக்கியங்களில் அவை இடம்பெற்றுள்ள திறமும் வழிபடும் முறைகளும், கோயிலின் நிர்வாக வரலாறும் சிறப்பாகத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன.

இந்நூல் ''திருவந்திபுரம்'' கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கோர் வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

தமிழின் அருமையையும் சமயப் பண்பையும் அறிந்து கொள்ளக் கோயில்கள் உதவுகின்றன. ஆனால் இலக்கியங்களில் கோயில்கள் இடம்பெற்றுள்ள திறத்தினை இந்த நூலில் காணமுடிகிறது.

நூலின் அமைப்பும் பகுப்பும் சிறப்பாக அமைந்துள்ளது. கோயிலின் தோற்றத்தைப் பிரம்மாண்ட புராணம் போன்ற புராணங்களில் தொடங்கி, மன்னர்களுக்கும் கோயில்களுக்கும் உள்ள தொடர்பைச் சுட்டிக் காட்டியதோடு திருப்பணி செய்தவர்களையும்

கல்வெட்டை அடிப்படையாகக் கொண்டு எடுத்தியம்புகிறது. சோழர் காலக் கோயிலாகிய இக்கோயில் தீர்த்தச் சிறப்பும், தலவிருட்சமும், பலகுடமுழுக்கும் பெற்றுத் திகழ்கிறது.

பிரம்மாதி தேவர்களால் தவஞ்செய்து உண்டாக்கப்பட்ட தைவம் என்னும் வகையைச் சேர்ந்த திராவிடக் கோயில் ஆகும் என்று இக்கோயிலின் வகையை விளக்குவது சிறப்பானது.

கோயிலின் அமைப்பு அட்டவணையில் காட்டப்பட்டுத் தெளிவுபடுத்தப்பட்டிருப்பது கோயிலை நம்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறது.

திவ்வியபிரபந்தம் முதலாக 108 திருப்பதித் திருப்புகழ் ஈறாகப் பல இலக்கியங்கள் இதன் சிறப்பைப் பாடுகின்றன என்பது நூலாசிரியன் ஆய்வுப் பரப்பையும் அது கொண்டு அவர் கூறும் செய்திகள் அவரது நுண்மாண்நுழைபுலத்தையும் காட்டுகின்றன. வழிபாடும் விழாக்களும் என்ற பகுதி எல்லோர்க்கும் பயனுள்ளதாய் அமைந்துள்ளது. இந்நூலைப் படித்தால் திருவந்திபுரக் கோயிலில் நடைபெறும் விழாக்களில் எந்த விழாவிற்கு எப்பொழுது செல்லலாம் என்னென்ன காணிக்கைகள் செலுத்தலாம் என்பன போன்றவற்றைத் தெரிந்து

செயற்பட முடியும். பன்னிரண்டு மாதங்களும் திருவிழாக்கள் உண்டு என்றாலும் சித்திரை, ஆடி, மார்கழி, தை, பங்குனி போன்ற மாதங்களில் விழாக்கள் மிகுதி என்பது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு விழாவிற்கும் கொடுக்கப்பட்டுள்ள விளக்கம் சிறப்பானதாகவும், பொருத்தமானதாகவும் அமைந்துள்ளது.

இறைவனுக்கு, இறைவிக்கு அணியப்படும் அணிகலன்களின் பெயர்களை அறிந்து கொள்ள இந்த நூல் சிறப்பாகப் பயன்படுகிறது. பெரும்பாலும் இவைகளைப் பிறநூல்கள் வழி அறிய இயலாது. பதினாறு வகைத் தீபங்களின் பெயர்களையும் நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளது பாராட்டத்தக்கது.

கோயிலின் நிர்வாகமும், வளர்ச்சியும், கோயிலை நிர்வகிக்க ஆகும் வரவு செலவுக் கணக்குகளும் தெளிவாகக் கொடுக்கப்பட்டு நாளொன்றுக்கு ஆகும் செலவும் சராசரியாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

பாடல் பெற்ற தலங்களில் அத்தலத்திற்குரிய பாடல்களைப் பாடுவதே தனிச்சிறப்பானது. ஆ
தலங்களுக்குச் செல்வோர் அனைவருச
அப்பாடல்களைப் பாடும் வாய்ப்புக் கிடைப்பதில்
சில கோயில்களில் கல்வெட்டுக்களாக அத்த

பாடல்கள் செதுக்கி வைக்கப்பட்டிருக்கும். ஆனால் பொறுமையாக நின்று அதைப்பாடும் நிலை கிடைக்காது.

இந்த நூலின் இறுதியில் தலத்திற்குரிய பாடல்கள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளமை இந்த வாய்ப்பைத் தர வழிவகுக்கும்.

இந்த வகையில் ஒரு புதுவிதமான ஆய்வாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலாசிரியராகிய என் மாணவி கோ.ஜெயசித்ராவின் பக்தி உணர்வும், எழுத்தாற்றலும், உள்ளத்தெளிவும் தெற்றெனப் புலப்படுகிறது. இறைவன் மீது பக்தி செலுத்துவது மட்டும் பக்தியல்ல, அறியாதாரை ஆற்றுப்படுத்துவதும் பக்தியே என்ற நிலையில் இந்நூல் ஆன்மீக அன்பர்களுக்குப் பயன்படும். இந்நூல் செய்த கோ. ஜெயசித்ரா இன்னும் பல நூல்களை எழுதி திருமால் திருவடிகளில் சமர்ப்பிக்க இறைவேண்டுவன். இந்நூலைத் தமிழுலகம் வரவேற்று வாழ்த்தும் என நம்புகிறேன்.

அ.நகர்
20.12.2006

முனைவர். திருமதி. ***மு. வள்ளியம்மை***
பேராசிரியர்,
தமிழியல் துறை,
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர் - 608 002.

....................

# வாழ்த்துரை

பழங்காலம் முதல் தமிழகத்தின் பெருமையை உலகு அறியச் செய்வது கோயில்களே. அவை நமது கலை பண்பாட்டை - வெளிப்படுத்துவனவாக உள்ளன. தமிழகத்தில் தொன்று தொட்டு பல சமயங்கள் நிலவி வருகின்றன. அவற்றுள் இந்துசமயம் சைவம், வைணவம் என இரு பெரும் பிரிவுகளைக் கொண்டது. இதில் வைணவ சமயம் சார்ந்த கோயில்கள் திவ்விய தேசம் எனப்படும் 108 ஆகும். அவற்றுள் புராணச் சிறப்புமிக்க திருவந்திபுரமும் ஒன்றாகும்.

இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் என்னும் இந்நூல் திருவந்திபுரத்தை புதிய கண்ணோட்டத்தில் ஆராய்ந்துள்ளது. இக்கோயில் பற்றி பலர் ஆய்ந்திருப்பினும் இலக்கிய நோக்கில் செல்வி. கோ. ஜெயசித்ரா ஆய்வு செய்திருப்பது பாராட்டுக்குரியது.

அகீந்திரன் எனப்படும் ஆதிசேடன் வழிப்பட்ட ஊராதலின் அகீந்திரபுரம் என அழைக்கப்பட்டது. இப்பெயர் மருவி அயிந்தையாயிற்று என இலக்கியங் கூறுகின்றன. பல்லவர், சோழர், பாண்டியர், சேரர், மது சுல்தான்கள், விஜயநகர பேரரசர், கர்நாடக நவாட

போன்றவர்களின் தொடர்பு இக்கோயிலுக்கு இருந்திருக்கிறது. அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையின் போது வழிப்பட்ட தலம் இது என்பதால் இதன் பழமை அறியப்படுகிறது.

பொதுவாக சிவன் கோயில்களில் தான் தலவிருட்சமாக வில்வமரம் காணப்படும். ஆனால், வைணவத் தலமான திருவந்திபுரத்தில் வில்வமரம் தலவிருட்சமாக அமைந்திருப்பது வியப்புகுரிய செய்தியாக கூறப்பட்டுள்ளது. இக்கோயிலில் உள்ள இறைவன் தேவநாதன் சுதையுருவம் கொண்டவர் என்பதன் மூலம் சிற்பக்கலையின் தன்மை யுணரர்ப்பாலது. கல்விக் கடவுள் ஹயக்ரீவர் எனப்படும் பரிமுகப் பெருமாள் இத்தலத்தில் குடிகொண்டிருப்பது சிறப்பான செய்தியாகும். இலக்கியங்கள் காலத்தைக் காட்டும் காலக் கண்ணாடி என்பர். திருவந்திபுரம் கோயில் பிரம்மாண்ட புராணம். ஸ்கந்த புராணம், பிரகந்நாரதீய புராணம் போன்ற புராணங்களால் பேசப்படுவது. திவ்விய பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார் இத்தலத்து இறைவன் மீது பத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார். வேதாந்த தேசிகர் இங்கு நாற்பதாண்டுகள் வாழ்ந்தார். அதுமட்டுமின்றி இவ்விறைவன் மீது இவர் மும்மணிக்கோவை, நவமணிமாலை என்னும் நூல்களையும் பாடியுள்ளார். நூற்றெட்டுத் திருப்பதிக்கோவை, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ் போன்ற இலக்கியங்கள் இத்தலம் பற்றிய செய்திகளைக்

கூறுகின்றன. திருப்புகழ்ச் சுவாமிகள் முருகன் அருளினால் பல கவிகள் பாடியுள்ளார். இவர் திருவஹீந்திரபுரம் தோத்திரப் பாமாலை என்னும் நூலை இத்தலத்து இறைவன் மீது இயற்றியுள்ளார். இதன் மூலம் இவர் சமய பேதமற்றவர் என்பது அறிய முடிகிறது.

வழிபாடு என்பது மனித சமூகத்துடன் இணைந்த ஒரு செயல். இது துன்பம் துடைத்து இன்பம் தரவல்லது. தனிமனித வழிபாடு பிற்காலத்தில் கோயில் வழிபாடாக மாறியது. வழிபாடுகளில் மிகவும் சிறப்பு வாய்ந்தது. கோயில் வழிபாடாகும். திருவந்திபுரம் திருக்கோயிலில் வைகானச ஆகம விதிப்படி வழிபாடு செய்யப்படுகிறது. இங்கு ஆறுகால பூசை செய்யப்படுகிறது.

விழை என்னும் வேர்ச் சொல்லிலிருந்து விழா என்னும் சொல் பிறந்தது. விழா என்பது காதல், விருப்பம், அவா, உற்சவம், விளையாட்டு, களிப்பு, விழைவு, மகிழ்ச்சி எனப் பலபொருள் தரவல்லது என்பது அறியத்தக்கது. மக்களை இன்பத்தில் ஆழ்த்த வரும் ஒரு நல்ல நாள் விழாவாகும். விழா நாளன்று மக்கள் தம் மனதில் உள்ள வேற்றுமைகளைக் களைந்து ஒற்றுமையுடன் இருப்பர். திருவந்திபுரம் கோயிலில் பன்னிரண்டு மாதங்களும் திருவிழாக்கள் நடைபெறுகிறது. சித்திரை, ஆடி, மார்கழி, தை, பங்குனி போன்ற மாதங்களில் நடைபெறும் விழாக்கள் சிறப்புமிக்கது. இவற்றுள்ளும் மார்கழி மாதம் நடைபெறும் தைலக்காப்பு விழா சிறப்பு வாய்ந்த ஒன்றாகும்

திருவந்திபுரம் திருக்கோயில் இந்து அறநிலையத் துறைக்கட்டுப்பாட்டின் கீழ் உள்ளது. இக்கோயிலுக்குச் சொந்தமான நிலங்கள், மனைகள், நிறை உள்ளன. இக்கோயிலின் செலவு அதிகமாக காணப்பட்டாலும் அதைவிட பன்மடங்கு வருவாய் வருவது குறிப்பிடத்தக்கது. மும்மூர்த்திகளும் ஒருவடிவாய் அமைந்து மத ஒற்றுமையைக் காட்டக் கூடியதாக இத்தலம் அமைந்துள்ளது.

இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் எனும் தலைப்பிலான இந்நூல் தமிழுலகிற்கு நல்ல வரவு. ஆன்மீகவாதிகளுக்கு பயனுள்ள நூல். தமிழர் தம் கரங்களில் எல்லாம் தவழ வேண்டும் என்பது எனது விருப்பம்.

**15.5.2005** **வி. சுகுமார் பாபு,** எம்.காம்., பி.எல்.,
சென்னை நிலைக்குழுத் தலைவர் (பணிகள்)
ஆளுங்கட்சித் தலைவர் அ.இ.அ.தி.மு.க.
சென்னை மாநகராட்சி
பச்சையப்பன் அறக்கட்டளை அறங்காவலர்
சென்னை.

................

# சிறப்புரை

திருமதி. கோ.ஜெயசித்ரா அவர்கள் ஆய்வு செய்து உருவாக்கிய இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் என்ற ஆய்வேடு இப்போது நூலாக வெளிவருவது பெரிதும் மகிழ்ச்சிக்குரியது. கோயில்கள் பற்றிக் கடந்த பல ஆண்டுகளாக அறிவுலகம் போற்றத் தக்க நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றுள்ளும் ஆய்வு நூல்களாக வெளிவந்துள்ள நூல்களில் இது ஒரு குறிப்பிடத்தகுந்த நல்ல ஆய்வு நூல்.

இந்நூலில் சமயசான்றோர்களின் கருத்துகளும் உணர்ச்சிகளும் அனுபவங்களும் எப்படி இலக்கியப்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதை ஆசிரியர் நுட்பமாகவும் முறையாகவும் ஆராய்ந்து விளக்கி யிருக்கிறார்.

முன்னுரையில் ஆய்வுப் பொருளை விளக்கி ஆய்வு ஆதாரங்கள், ஆய்வுதிட்டம் முதலானவற்றையும் விளக்கியிருக்கிறார். முதல் இயலில் கோயிலின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி கூறியுள்ளார். அடுத்து வரும் இயல்களில் கோயிலின் அமை இலக்கியங்களில் திருவந்திபுரம், வழிபா விழாக்களும், திருக்கோயில் நிருவாகம் பற்றிய சிறப்ட செய்திகளை விளக்கியிருக்கிறார்.

முடிவுரையில் இந்த ஆய்வில் கண்ட இன்றியமையாத முடிவுகளைத் தொகுத்துக் கூறியிருக்கிறார். இறுதியில் ஆய்வுக்குப் பயன் பட்ட துணைநூல்களின் பட்டியல் இடம் பெறுகிறது.

ஆன்மீக அனுபவங்களை வியப்புக்குரிய அளவுக்குப் புலப்படுத்தி வெற்றி கண்டவர்கள் சமயச்சான்றோர்கள். சமயம் பற்றி நன்கு புரிந்து கொள்ளவும் இறைவழிபாட்டில் மனம் நெகிழ்ந்து ஈடுபடவும் சமயப் பாடல்களால் முறையாகப் பயன்பெறவும் இத்தகைய நூல்கள் பெரிதும் துணைநிற்கும் என்று நாம் உறுதியாக நம்பலாம். சமய உலகில் திருக்கோயில் வழிபாடு பற்றியும் சமயச்சான்றோர் தம் பக்தித்திறம் பற்றியும் புரிந்து கொள்ள இத்தகைய நூல்கள் மேலும் மேலும் வெளி வர வேண்டும்.

ஆன்மீக உலகமும் இலக்கிய உலகமும் இத்தகைய பணிகளின் அருமைப் பாட்டை உணர்ந்து போற்றும் என்று நம்புகிறோம். திருமதி.கோ. ஜெயசித்ராவின் பணியைத் தமிழுலகம் மகிழ்ச்சியோடு வரவேற்றுப் பாராட்டி அவருக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்க வேண்டும்.

கடலூர் முனைவர். திருமதி. ***ரெ. வள்ளி,***
17.11.2006 முதல்வர்,
சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி,
கடலூர்.

................

# மதிப்புரை

அறியாமையில் உழன்று கொண்டிருக்கும் மனிதனை அறிவுடையவனாக மாற்ற கல்வி துணை செய்யும். அதைப்போலவே சமயங்களும் மனிதர்களுக்கு ஒழுக்க நெறியுடனும் பக்தி சிந்தனையுடனும் கூடிய துணை செய்வதாகக் குறிப்பர். இதன்மூலம் உள்ளத்திற்கு நிறைவை அளிப்பதும் முழுமனிதனாக்குவதும் சமய ஈடுபாட்டில் உள்ள பக்தியே எனக் கொள்ளலாம்.

தமிழகம் கல்வி, கலை, பக்தி எனும் மூவகைக் கூட்டில் கனிந்த பண்பாட்டை வளர்த்து வாழ்ந்து வருகின்றது. சங்க இலக்கியங்கள், அறஇலக்கியங்கள், காப்பிய இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள் முதலிய தமிழ்ச் செல்வங்களின் பேரொளியில் தமிழ் மக்களின் கலை, பண்பாடு, பக்தி ஆகியவை செழித்து வளர்ந்துள்ளது.

பல நூற்றாண்டுகளில் இத்தமிழ் நாடும் தமிழ்மக்களும் பற்பல வளர்ச்சியும் மாற்றமும் ஏற்றமும் அடைந்து வந்துள்ளனர்.

தமிழகத்தில் இடம்பெற்ற அரண்மனை கோயில்கள், மாளிகைகள் முதலியன தமிழ

கட்டடக்கலைச் சிறப்பிற்குக் காரணமாக உள்ளன. சங்க இலக்கியம் உயர்ந்த சுவர்களாலும் மரவிட்டங்களாலும் தாங்கப்பெற்ற கோயில் பற்றிக் குறிப்பிடுகின்றது. பழங்காலத்தில் செங்கற்களால் கோயில்கள் கட்டப்பட்டமையைப் பண்டைய இலக்கியங்கள் காட்டுகின்றன. பிற்காலத்தில் கற்றளிகள் என்னும் கற்கோயில்கள் முறை வளர்ந்தது. பல்லவர்கள் ஆட்சியிலும் சோழர்கள் ஆட்சியிலும் கோயில்கள் மிகச்சிறந்த நிலையினை அடைந்தன. இக்கோயில்கள் மக்கள் தம் மன அமைதியின் பொருட்டு வழிபடும் பொது இடமாகத் திகழ்கின்றன.

பல்லவர்கள் ஆட்சியிலும் சோழர்கள் ஆட்சியிலும் கோயில்கள் மிகச்சிறந்த நிலையினை அடைந்தன. தமிழகத்தின் இருபெரும் சமயங்கள் சைவமும் வைணவமும் ஆகும். வைணவர்கள் கோயிலை திவ்விய தேசம் என்பர். அவை 108.

''கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்பது முதுமொழி இதனையுணர்ந்த ஆழ்வார்கள் திவ்விய தேசங்களையும், அங்கு உறைந்துள்ள இறைவனையும் தம் இலக்கியங்களில் புகழ்ந்து பாடியுள்ளனர். நடுநாட்டு திருப்பதிகள் இரண்டில் ஒன்று திருவந்திபுரம் ஆகும். இதனை இலக்கிய நோக்கில்

ஆராய்ந்துள்ள ஆராய்ச்சியாளரின் நோக்கமும் ஊக்கமும் பாராட்டப்படவேண்டியன.

அர்ச்சுனன் தீர்த்தயாத்திரையின் போது திருவந்திபுரம் வந்தான் என்பதால் இக்கோயிலின் பழமை வெளிப்படுகிறது. இங்கு காணப்படும் கல்வெட்டுக்கள் மூலம் சோழ பாண்டியரின் திருப்பணிகள் பற்றிய தெள்ளத் தெளிவான கருத்துக்கள் வெளிப்படுகின்றன. மூலவர் தேவநாதன் சுதை உருவினர் என்பதால் சோழர் காலத்தது என்பதை அறிய முடிகிறது.

பல புராணங்களில் கூறப்பட்ட இத்தலம் பெரிய திருமொழி மூன்றாம் பத்தில் திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டுள்ளது. நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதி திருப்புகழ், மதுரகவி சேரநாட்டுத் திருப்புகழ், திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம், தண்டபாணிவிஜயம் போன்றவை இத்தலம் பற்றிய செய்தியை வெளியிட்டுள்ளன. வேதாந்த தேசிகர் மும்மணிக் கோவை, நவமணி மாலை என்பவற்றை இவ்விறைவனுக்காகவே இயற்றியுள்ளார். பி இலக்கியங்களில் இத்தலம் பற்றி ஒரு சில பாடல் மட்டுமே பாடப்பட்டுள்ளன. சைவக் கடவுளை அதி பாடிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமி

இத்தலத்திற்கென தனித்தோத்திரப் பாமாலை பாடியுள்ளார் என்ற வியப்பான செய்தி சிலிர்ப்பூட்டுவதாகும்.

பக்தியுடன் கலைகள் வளரும் நிலையங்களாக உருவாக்கப்பட்டுள்ள நமது திருக்கோயில்களின் பெருமை நன்கு உணரப்பட வேண்டும். அறநெறியும், அன்பு வாழ்வும், கலைகளும் வளர இத்தகைய சிறந்த நூல்கள் பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

திருமதி. கோ. ஜெயசித்ரா அவர்களால் உருவாக்கி வெளியிடப்பெறும் இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் என்னும் இந்நூல் கோயிற்கலையின் பெட்டகம்; இலக்கிய நோக்கில் காலத்தைக் காட்டும் காலக்கண்ணாடி; தமிழ்ப் பெருமக்கள் இந்நூலைப் படித்துப் பயன் பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

கடலூர் - 607 001 திருமதி. ***ஆவுடைத்தாய்ஜெயராமன்,***
3.12.2006 எம்.ஏ., எம்.ஃபில்
முன்னாள் முதல்வர்
சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி
கடலூர்

..................

# நன்றியுரை

இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளவும், நூலாக்கம் பெறவும் அனுமதி வழங்கிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும், இணைவேந்தர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றிகள்.

என் உள்ளத்தில் இருந்து இந்நூலை எழுத வழிகாட்டி என்னுள் என்றும் நிலைத்து இருந்து எனக்கு எல்லா நலன்களையும் ஈந்து வரும் திருவந்திபுரம் தேவநாத சுவாமியின் திருவடிகளுக்கு என் உயிரும் உணர்வும் கலந்த நன்றியைக் காணிக்கையாக்குகின்றேன்.

இவ்வாய்வேடு நூலாக வெளிவருவதற்குத் தேர்வு செய்து சிறப்பித்த வேங்கடம் மேவிய விளக்காகிய எம்பெருமான் வீற்றிருக்கும் திருப்பதி தேவஸ்தானத்திற்கு எம்மனமார்ந்த நன்றிகள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழியல் துறையில் இளம் முனைவர் பட்டம் பயில்வத இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் என்ற தலைப்பின கொடுத்து ஆய்வேடு நூல் வடிவம் பெறுவதற்கு அமைத்தும் நெறிப்படுத்தி ஊக்கமளித்து அணிந்

நல்கிய என்நெறியாளர் முனைவர். திருமதி. மு.வள்ளியம்மை அவர்களுக்கு என் இதயங்கனிந்த நன்றிகள் பலப்பல.

என் ஆய்விற்கு வேண்டிய புத்தகங்களையும், குறிப்புக்களையும் அளித்து உதவிய முன்னாள் பொருளாதாரத்துறை பேராசிரியர் முனைவர் அ.வே.ரங்காச்சாரி அவர்கள் இவ்வாய்வேடு நூலாக வெளிவருவதற்கு வேண்டிய அறிவுரைகள் பல வழங்கியதோடு ஆசியுரையும் அளித்து சிறப்பித்தமைக்கு எனது இதயப் பூர்வமான நன்றி.

என் ஆய்வுப்பணி சிறக்கவும் ஆக்கச் சிந்தனைகளைத் தந்தும் ஊக்கப்படுத்தி வாழ்த்துரை நல்கிய திரு. வி. சுகுமார் பாபு அவர்களுக்கு என்றென்றும் நன்றியுடையேன்.

ஆய்வு தொடர்பான நூல்களையும் கட்டுரை களையும் கொடுத்து எனக்கு ஆய்வு பணியிலும் வாழ்விலும் ஊக்கமூட்டி மதிப்புரை அளித்த சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரியின் முன்னாள் முதல்வர் திருமதி. ஆவுடைத்தாய் ஜெயராமன் அவர்களை என் நெஞ்சம் உள்ளளவும் மறவேன்.

எம் கல்விப் பணியும் ஆய்வுப் பணியும் சிறக்க அவ்வப்போது அறிவுரைகளையும் ஊக்கத்தையும் அளிப்பதோடு சிறப்புரையும் தந்து சிறப்பித்த சி. கந்தசாமி

நாயுடு மகளிர் கல்லூரியின் முதல்வர் முனைவர். திருமதி.ரெ.வள்ளி அவர்களை எந்நாளும் இதயத்தில் நிறுத்துவேன்.

மேலும் எனது ஆய்வுப் பணிக்கும் நூல் வெளியீட்டுப் பணிக்கும் ஊக்கமூட்டிய கடலூர் சி.கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும், நூலகருக்கும், ஆங்கிலத் துறை பேராசிரியை முனைவர். திருமதி. குழந்தை தெரசா பாத்திமா அவர்களுக்கும் என் நன்றியை உரிதாக்கி மகிழ்கிறேன்.

என்னை ஆளாக்கி அறிவமூதூட்டிய என் பெற்றோர் வே. கோவிந்தராஜன், கோ. கஸ்தூரி அவர்களுக்கும், நூல் வரத் துணையாத் தூணாய் நின்ற என் கணவர் க. பாலாஜி அவர்களுக்கும் இதயங்கனிந்த நன்றி. எனது பணிகள் யாவிற்கும் உற்றதுணையாக இருந்து உதவிய எனது உடன் பிறப்புகளான கோ. ஜெயபிரியா, கோ.ஜெயபாலமுருகன் ஆகியோர் எந்நாளும் என் ஆக்கப் பணிக்கு உடன் வர இறை வேண்டுகிறேன்.

இந்நூல் வெளிவருவதற்குத் துணைநின்ற அனைத்து இனிய உள்ளங்களுக்கும் என் மனப்பூர்வமான நன்றியைச் சமர்ப்பிக்கின்றேன்.

கடலூர் - 607 002 நன்றியுடன்

8.11.2006 **கோ. ஜெயசித்ரா**

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழர்கள் தங்கள் கலைத்திறனை வெளிப்படுத்த பல கோயில்களைக் கட்டினர். தமிழகம் என்றாலே அயல்நாட்டவருக்கு நினைவுக்கு வருவது கோயில்கள்தான் என்றால் மிகையாகாது. இக்கோயில்கள் அக்கால மக்களின் சமூக, அரசியல், பண்பாடு, பொருளாதாரம் ஆகியவற்றை விளக்கும் காலக்கண்ணாடிகளாகத் திகழ்கின்றன. மக்கள் இயற்கையின் மீது கொண்ட ஈடுபாட்டினைச் சிற்பங்களாகச் செதுக்கினர். இச்சிற்பங்களை இறையுருவமாக எண்ணித் துன்பகாலத்தில் துணையிருக்குமாறு வேண்டினர். பின்பு இவ்வழிபாடு கூட்டு வழிபாடாயிற்று. இப்படியாகத் திருக்கோயில் வழிபாடு என்பது மனித வாழ்வில் பிரிக்க முடியாத ஓர் அம்சமாக மாறியது. இதனால் பல கோயில்களை மன்னர்கள் கட்டினர். அவற்றில் கல்லிலும், செம்பிலும், ஐம்பொன்னாலும் ஆன சிலைகளைக் கலைநுணுக்கத்துடன் செய்தனர்.

பல அரசர்கள் கோயிற்கலைக்கும், கட கலைக்கும் அதிக அளவில் ஆதரவு கொடுத் இவர்களில் பல்லவர் சேர, சோழ, பான

இராட்டிரகூடர், நாயக்கர் போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர். இவர்கள் சமயப்பாகுபாடு இன்றி சைவ, வைணவக்கோயிலகள் பலவற்றைக் கட்டினர். அக்கோயில்கள் புயல் வெள்ளம் ஏற்படும் போது மக்களைப் பாதுகாக்கும் அரண்களாக இருந்தன. அவ்வப்போது இங்கு பல திருவிழாக்களும் எடுக்கப்பட்டன. இதனால் மக்கள் தங்கள் கவலையை மறந்து மகிழ்ச்சியுடன் பொழுதைக் கழித்தனர். இவை மக்களுக்கு ஆன்மீகத்தோடு கூடிய மகிழ்ச்சியான வாழ்வை நல்கின. இப்படி எழுந்த கோயில்களைப்பற்றி ஆழ்வார்களும், நாயன்மார்களும் பாடினர். இதனால் பல இலக்கியங்கள் புதியதாகத் தோன்றின. தமிழ்வளர்ச்சிக்கு இவ்விலக்கியங்கள் உறுதுணையாக இருந்தன. 108 வைணவதிவ்விய தேசங்களில் ஒன்றான திருவந்திபுரம் கோயிலைப் பற்றிய செய்திகளைப் பல புராணங்களும் இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன.

## ஆய்வுத் தலைப்பும் பொருளும்

இலக்கிய நோக்கில் திருவந்திபுரம் என்பது ஆய்வேட்டின் தலைப்பாகும். தேவநாதரும் செங்கமலவல்லியும் அமர்ந்து அருள் கொழிக்கும் இவ்வாலயம் கலை அழகும் தெய்வீகநலனும் ஒருங்கு கூடிய திருத்தலமாகும். நடுநாட்டில் உள்ள இரண்டு

தலங்கள் திவ்விய பிரபந்த பாடல்பெற்றவையாகும். அவற்றில் ஒன்றே திருவந்திபுரம். இக்கோயிலை திருமங்கையாழ்வாரும் வேதாந்த தேசிகரும் பாடியிருக்கிறார்கள். இத்தலத்தின் தல புராணத்தை வடமொழி புராணங்கள் மூன்று எடுத்துரைக்கின்றன. சங்க காலம் முதல் பல மன்னர்கள் ஆட்சிசெய்த இப்பகுதியை திருவஹீந்திரபுரம் எனவும் அழைப்பர். இங்ஙனம் இலக்கியம் போற்றிய இத்தலம் ஆய்வாளர் மனம் கவர்ந்தது. அதனால் இத்தலம் ஆய்வுப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டது.

## ஆய்வு எல்லை

இங்கு இக்கோயில் பற்றிய ஆய்வே பல இயல்களாகப் பிரிக்கப்பெற்றுச் செய்திகள் திரட்டப்பட்டிருக்கின்றன. இலக்கியங்களில் திருவந்திபுரக் கோயில் பற்றிக் கூறும் பாடல்கள் மட்டும் இங்கு ஆராய எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இலக்கியங்கள் இறைவனைப்பற்றிப் பாராட்டிப் பேசும்பொழுது, அக்கோயிலைப் பற்றிய விளக்கமும் இருந்தால் சிறப்புப் பெறும் என்ற நிலையிலேயே இங்கு கோயில் முழுமையாக ஆய்வு எல்லையாகக் கொள்ளப்பட்டது.

## ஆய்வு நோக்கம்

பல இலக்கியங்களில் சிதறிக் கிடக்கும் ஒருகோயில் பற்றிய செய்திகள் ஓரிடத்தில் அமையும் நோக்கத்தாலும், சைவக் கோயில்கள் ஆய்வு செய்யப்படுவது போன்று வைணவக் கோயில்கள் அதிக அளவில் ஆய்வு செய்யப்படவில்லை என்பதாலும் வைணவக்கோயில் ஆய்வினை மேற்கொள்ள வேண்டும். அது இலக்கியத்தோடு தொடர்புடையதாக அமைய வேண்டும் என்பதற்காகவும் இத்தலைப்புத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்டது.

## ஆய்வு வகையும் முறையும்

பல ஆய்வுமுறைகள் இவ்ஆய்வில் கடைப்பிடிக்கப் பட்டுள்ளன. பகுப்பாய்வு முறையில் கருத்துக்களைத் தொகுத்தும் பகுத்தும் இவ்ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளது. விளக்கமுறையிலும், மதிப்பீட்டு முறையிலும், சான்றுவழிமுறையிலும், நேரடிப் பேட்டியின் மூலமாகவும் ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளது. சமயநம்பிக்கைகள் செவிவழிச்செய்திகள் போன்றவை கோயில்களுடன் மிகுதியான தொடர்புடையனவாகையால் அவைகளும் ஒதுக்கப் பெறாமல் ஏற்றுக்கொள்ளப்பெற்றுள்ளன.

## துணை ஆதாரங்கள்

இக்கோயில் பற்றி இலக்கியங்கள் கூறும் செய்திகளின் துணைகொண்டும், கோயில் நிர்வாகத்தினர், கோயில்அர்ச்சகர், வேதபாராயணம் செய்பவர், சிலாசாசன பரிசோதகர் ஆகியோரிடம் கேட்டறிந்த செய்திகளைக் கொண்டும் மற்றும் பொதுமக்களின் பக்தி அனுபவத்தைப் பற்றிக் கேட்டறிந்த செய்திகளின் துணைகொண்டும் இவ்ஆய்வு மேற் கொள்ளப்பட்டது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களையுடையது.

## 1. கோயிலின் தோற்றமும் வளர்ச்சியும்

இக்கோயில் யார் காலத்தில் கட்டப்பெற்றது என்று வரையறுத்துக் கூற இயலாது. கோயில் எவ்வாறு தோன்றிது என்பதை பிரம்மாண்ட புராணம். ஸ்கந்தபுராணம், பிரகந்நாரதீயபுராணம் போன்றவை கூறுகின்றன. முதலாம் ராஜாதிராஜன், முதலாம் குலோத்துங்கச் சோழன், விக்ரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் ராஜாதிராஜன், மூன்றாம்

குலோத்துங்கன், மூன்றாம் ராஜராஜன் போன்ற மன்னர்களின் தொடர்புபெற்றது. இதற்குப் பலரும் திருப்பணிசெய்துள்ளனர். இதனைக் கல்வெட்டுக்கள் எடுத்துரைக்கின்றன. இக்கோயில் பிற்காலச் சோழர்காலக் கோயிலாகும். தீர்த்தச் சிறப்பு, தலவிருட்சம், மின் இணைப்பு, குடமுழுக்கு விழா ஆகியன விளக்கப் பெறுகின்றன.

## 2. திருக்கோயில் அமைப்பு

மூர்த்திகள் அமைந்துள்ள இடமும் திறமும் கூறப்படுகிறது. அவற்றில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், நூற்றுக்கால் மண்டபம், நாலுக்கால் மண்டபம், பதினாறுகால் மண்டபம் போன்ற பல மண்டபங்கள் காணப்படுகின்றன. திருவந்திபுரம் திருக்கோயிலில் வீற்றிருக்கும் கடவுளரின் திருவுருவ அமைதிபேசப்படுகிறது. இங்கு உள்ள தேவநாதப் பெருமான் சுதையுருவம் கொண்டவர். மற்றைய கடவுளர்கள் உலோகத்தாலும் கல்லாலும் ஆனவர்கள் என்ற செய்திகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

## 3. இலக்கியங்களில் திருவந்திபுரம்

பிரம்மாண்டபுராணம், ஸ்கந்தபுராணம், பிரகந்நாரதீய புராணம் போன்றவைகளில் இத்தலம்

பற்றிக்கூறும் செய்திகள் இடம்பெறுகின்றன. வில்லிபாரதம் இத்தலம் பற்றிப்பேசுகிறது. ஆழ்வார்களால் பாடப்பட்ட திவ்விய பிரபந்தத்தில் பெரியதிருமொழி இவ்விறைவனைப் பற்றிப் பாடியுள்ளது. பிற இலக்கியங்களில் திருவந்திபுரம் என்பதில் தேசிகப்பிரபந்தம், நூற்றெட்டுத் திருப்பதிக்கோவை, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ் போன்ற பல இலக்கியங்கள் இத்தலத்தைப் பற்றிப் பேசுகின்றன.

## 4. வழிபாடும் விழாக்களும்

திருவந்திபுரம் திருக்கோயிலில் வைகானச ஆகம முறைப்படி பூசைகள் நடைபெறுகின்றன. தேவநாதருக்கு ஆகமமுறைப்படி ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன. சித்திரை, வைகாசி, மார்கழி போன்ற மாதங்களில் சிறப்பு வழிபாடு பற்றி எடுத்துரைக்கப் பெறுகின்றன. தேவநாதருக்கு கருப்புநிற ஆடையைத் தவிர மற்ற அனைத்து நிற ஆடைகளும் அணிவிக்கப்பெறும். இறைவனுக்குப் பயன்படுத்தப்படும் அணிகலன்கள், மலர்கள் பற்றியும், நைவேத்தியப் பொருட்கள் பற்றியும் பேசப்படுகிறது.

## 5. திருக்கோயில் நிருவாகம்

இக்கோயில் ஆதிகாலத்தில் இருந்து பாரதவாஜிபட்டர் பரம்பரையினரால் நிருவகிக்கப்பட்டது. அதன்பின்பு இந்து அறநிலையத்துறைக் கட்டுப்பாட்டின் கீழ் உள்ளது. இக்கோயிலில் மொத்தம் பதினாறு பணியாளர்கள் இருக்கின்றனர். நிலம், தோப்பு, மரங்கள் போன்றவை உள்ளன. இக்கோயிலின் வரவும், செலவும் திருப்தி தரும் வகையில் உள்ளது.

## முடிவுரை

அனைத்து இயல்களிலும் தொகுத்துத் தரப்பட்ட தொகுப்புக்களின் மூலம் சொல்லப்படும் ஆய்வு முடிவுரையில் தரப்படுகின்றது.

## துணை நூற்பட்டியல்

## பின்னிணைப்பு

....................

# கோயிலின் தோற்றமும் வளர்ச்சியும்

## முன்னுரை

தமிழகத்தின் பெருமையை இன்று அகிலமெல்லாம் பறைசாற்றி நிற்பன தமிழகக் கோயில்களே ஆகும். இறைவழிபாடு தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலவி வருகிறது. தமிழகத்தில் இந்து, கிறித்தவ, இசுலாமிய, சமண, பௌத்த மதங்கள் இருக்கின்றன. பெரும்பான்மையான மக்கள் இந்து மதத்தையே பின்பற்றுகின்றனர். இந்து சமயத்தின் இருகண்களாகச் சைவமும், வைணவமும் திகழ்கின்றன. சைவசமயத்தைச் சேர்ந்தவர்கள் இறைவன் உறையும் கோயில்களை, ''திருத்தலங்கள்'' என்பர். வைணவசமயத்தைச் சேர்ந்தவர்கள் கோயில்களை, ''திவ்வியதேசங்கள்'' என்பர். திவ்வியதேசங்களை 108 ஆகக் கொள்வர். இவற்றில் பெரும்பான்மையானவை தமிழகத்திலேயே காணப்படுகின்றன.

> **''ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்பதாம் பாண்டி**
> **ஓர்பதின்மூன்றாம் மலைநாடு ஓரிரண்டாம் சீர்நடுநாடு**
> **ஆறோடு ஈரெட்டுத் தொண்டை அவ்வடநாடு ஆறிரண்டு**
> **கூறுதிருநாடு ஒன்றாகக் கொள்''**[1]

என்னும் வெண்பா மூலம் 108 திவ்விய தேசங்களை அறியலாம். இந்நூற்றெட்டுத்திருப்பதிகளுள்

திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம், தோத்தாந்தரி, சாளக்கிராமம், நைமிசம், பதரிகாசிரமம் (திருவந்திபுரம்), காஞ்சிபுரம், வேங்கடாசலம் போன்ற எட்டுப்பதிகளும் போற்றத்தக்க பெருமையுடையன. நடுநாட்டுத் திவ்வியதேசங்கள் இரண்டில் ஒன்று திருவந்திபுரம். இதுவரலாற்றுச்சிறப்புப் பெற்றதலம்.

## பெயர் விளக்கம்

''அகீந்திரன் எனப்படும் திருவனந்தாழ்வான் பூசித்த இடம் ஆதலால் அகீந்திரபுரம் எனப் பெயர்பெற்றது. இது அயிந்திரபுரம் என்றாகியது''[2] காலந்தோறும் திருவந்தி புரம் என்றபெயர் பல மாற்றங்களைப் பெற்றதுடன் பலவகையாகவும் அழைக்கப்பட்டுள்ளது. ''ஊரின் பெயர் நாலாயிரப்பிரபந்தத்தில் ''திருவயிந்திரபுரம்'' எனக் கூறப்பட்டுள்ளது. இப்பெயர் இன்று திருவந்திபுரம் எனச்சுருங்கிவிட்டது. இதனையே மக்கள் தமது திருந்தாகொச்சை வழக்கில் 'திருந்திபுரம்' எனக் கூறுகின்றனர். புராணங்களில் ''திருவகீந்திரபுரம்'' எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. அயிந்திரன் - அகீந்திரன் என்றால் ஆதிசேடன் என்று பொருளாம். ஆதிசேடன் வழிபட்ட ஊராதலின் 'அயிந்திரபுரம்' 'அகீந்திரபுரம்' என அழைக்கப்பட்டதாம். அயிந்திரபுரம் என்னும் பெயர் சுருங்கி மருவி 'அயிந்தை' என இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளது. சில கல்வெட்டுகளில் 'திருவேந்திபுரம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதிசேடன் திருமாலின் தாகத்தைத் தீர்க்க நிலத்தை வகிண்டு நீர் கொணர்ந்தமையால் இவ்வூர் 'திருவகிண்ட + புரம் = திருவகீந்திரபுரம்' என்னும் பெயர்

பெற்றிருக்கலாம். அயிந்திரம் என்பது கிழக்குத் திசையைக் குறிக்கும். கெடில நதியின் கிழக்குக்கரையில் இத்தலம் அமைந்திருப்பதால் இதனை "அயிந்திரபுரம்" என அழைத்திருக்கலாம்.

## மன்னர் தொடர்பு

முற்கால மக்கள் வரலாற்று உணர்வு இல்லாதவர்களாக இருந்தனர். அதனால் தங்கள் வரலாற்றை அவர்கள் முறையாகக் குறித்து வைக்க எண்ணவில்லை. இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் மூலம் நாம் வரலாற்றை ஒருவாறு அறிந்து கொள்ள முடிகிறது. இவை அக்கால வரலாற்றை மட்டுமின்றி பண்டைய சமூக பொருளாதார, அரசியல், நாகரிகம் கொடை, வீரம் என்று அனைத்தையும் காட்டும் காலக்கண்ணாடியாகத் திகழ்கின்றன.

கல்வெட்டுக்கள் மூலம் அரசியல் அமைப்பையும், அரசாட்சி செய்யும் அரசர்களின் எல்லைகளையும் அவர்கள் செய்த போர்களையும் பற்றி அறியலாம்.

திருவந்திபுரம் கோயிலில் சுமார் நூற்றிஇருபத்திஏழு கல்வெட்டுக்கள் உள்ளன. இவை பல்வேறு அரசர்களின் வரலாற்றை எடுத்துக்கூறுவனவாய் உள்ளன. இந்த கல்வெட்டுக்களில் நூற்றி ஒன்பது கல்வெட்டுக்கள் தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் படியெடுக்கப் பட்டுள்ளன. மற்றவை இன்னும் படியெடுக்கப் படவில்லை.

திருவந்திபுரம் திருமுனைப்பாடி எனும் நாட்டில் அடங்கியது இந்நாட்டைப் பல்வேறு அரசர்கள்

ஆண்டுள்ளனர். "இலக்கியங்களின் துணைகொண்டு வரலாற்றுக்கு எட்டியுள்ள வரைக்கும் தொடக்க காலத்தில் திருமுனைப்பாடி நாட்டை ஆண்டவர்களாக அறியப் படுபவர்கள் சோழமரபினராவர். கி.மு. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதிவரை அதாவது கி.பி.250 வரை, சோழப் பேரரசர்கள் சோழநாட்டுடன் திருமுனைப்பாடிநாடு எனப்படும் நடுநாடு, தொண்டைநாடு ஆகியவற்றையும் இணைத்துத் தம் தலைமையின் கீழ் ஆண்டு வந்தனர். இவர்களுள் கி.மு. முதல் நூற்றாண்டில் ஆட்சி தொடங்கியவனாகக் கருதப்படும் கரிகாற்சோழன் மிகவும் இன்றியமை யாதவன். ஆட்சிசிறப்பில் இவனுக்கு அடுத்த பங்குடையவனாயிருந்தவன் நெடுமுடிக்கிள்ளியாவான் சோழர்கள் நாட்டைப் பல கோட்டங்களாகப் பிரித்து ஆங்காங்குத் தம் ஆணையரை அமர்த்தி காடு திருத்தியும், நீர்ப்பாசன வசதி செய்தும் நன்கு மேற்பார்வையிட்டு ஆண்டு வந்தனர்"[4] என்பதன் மூலம் திருவந்திபுரம் முதன் முதலில் சோழர்களின் தொடர்புடையதாக இருந்திருக்கலாம் என்பது தெளிவாகிறது.

சோழர்களின் மேலாட்சியின் கீழ் சிற்றரசர்கள் பலர் திருமுனைப்பாடி நாட்டை ஆண்டுவந்தனர் "சோழரின் மேலாட்சி இருக்க கி.பி. முதல் மூன்று நூற்றாண்டு கால அளவில் மலையமான் என்னும் மரபைச் சேர்ந்த குறுநில மன்னர்கள் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு திருமுனைப்பாடி நாட்டை ஆண்டு வந்தார்கள்"[5].

திருமுனைப்பாடி நாட்டை பல்லவர்கள் ஆட்சி செய்த காலத்தில் நாடு பொருளாதாரம் மிக்கதாகவும் கலை வளர்ச்சி மிக்கதாகவும் இருந்தது. ''ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து திருமுனைப்பாடி நாடு பல்லவப் பேரரசின் கைக்குச் சென்றுவிட்டது. இந்நாட்டை ஒன்பதாம் நூற்றாண்டு வரையும் பல்லவப் பேரரசர்களே ஆட்சி புரிந்தனர். ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் அபராசிதன் என்னும் வலிமையற்ற பல்லவ மன்னன் ஆண்டான். அவனோடு பல்லவப் பேரரசு வீழ்ச்சியடைந்தது''[6] பல்லவர்களின் வீழ்ச்சி சோழர்களின் ஆட்சிக்கு வழிவகுத்தது.

பிற்காலச் சோழர்கள் ஆட்சி சீரும் சிறப்புமாக திருமுனைப்பாடி நாட்டில் நடைபெற்றது. அவர்களில் முதலாம் ராஜாதிராஜன், முதலாம் குலோத்துங்க சோழன், இரண்டாம் குலோத்துங்கசோழன், விக்ரம சோழன், இரண்டாம் ராஜராஜன், இரண்டாம் ராஜாதிராஜன், மூன்றாம் ராஜராஜன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களின் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் சிலதிருவந்திபுரத்தில் உள்ளன. இவை திருவந்திபுரத்திற்கும் மன்னர்களுக்கும் இடையே உள்ள தொடர்பைப் புலப்படுத்துகின்றன.

## குலோத்துங்கசோழன் கல்வெட்டுக்கள்

இந்தக்கோயிலின் முதல் பிரகாரத்தின் தெற்குச் சுவரிலும், வெளிப்பிரகாரத்தின் வெளிப்புறச் சுவரிலும் குலோத்துங்கசோழனின் ஆட்சியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இம்மன்னனின் 23வது ஆட்சியாண்டு கல்வெட்டு அவன் பெற்ற

வெற்றிகளையும், இக்கோயிலுக்கு இறையிலியாக நிலம் விட்டமைபற்றியும் குறிப்பிடுகிறது. "நாற்பத்தி ஒன்றாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு திருவந்திபுரத்து ஆழ்வாருக்கு வைத்த சந்திவிளக்குப்பற்றியும் அதற்காக விடப்பட்ட பன்னிரெண்டு ஆடுகளைப்பற்றியும் குறிப்பிடுகிறது"[7]

## மூன்றாம் ராஜராஜன் கல்வெட்டு

இந்தக் கோயிலின் வெளிப்பிரகாரத்தின் மேற்புறச்சுவரில் மூன்றாம் ராஜராஜனின் 15-வதின் எதிராமாண்டு கல்வெட்டு ஒன்று உள்ளது. இந்த ஆட்சியாண்டு 16ஆம் ஆட்சியாண்டு என்று கல்வெட்டுகுறிக்கிறது. கோப்பெருஞ்சிங்கன் மூன்றாம் ராஜராஜனைச் சேந்தமங்கலத்தில் சிறைவைத்ததையும் அவனை மீட்டதையும் பற்றிக் குறிப்பிடுகிறது. இந்த கல்வெட்டு ஒன்பது வரிகளை உடையது."8

இதேபோன்று சோழர்களின் கல்வெட்டுக்கள் பல திருவந்திபுரத்தில் உள்ளன. இவை மன்னர்களுடனான உறவினைத் தெள்ளத் தெளிவாக விளக்குகின்றன. சோழர்களுக்குப்பின் திருமுனைப்பாடி நாட்டை இராட்டிர கூடர்கள் ஆண்டனர். அவர்களுக்குப் பின்பு காடவராயர் எனும் பிற்காலப் பல்லவர்கள் ஆண்டனர். இவர்களுள் குறிப்பிடத்தக்கவன் கோப்பெருஞ்சிங்கன் ஆவான். இவனுடைய ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் உட்பிரகாரத்தின் தெற்குப் பகுதியிலும், மேற்குப் பகுதியிலும் காணப்படுகின்றன.

ஸ்வஸ்திஸ்ரீ அவனி - ஆளப்பிறந்தான் - கோப்பெருஞ் சிங்க தெவர்தி - ருமெனிக்கு நன்றாக செங்கனிவாயன் - சொழ கொன் த(ம்) - பி பெருமாளவெ - (ண) டுடையான் செ(ய்) வித்ததிருக்கோபுரம் எனக்குறிப்பிடுகிறது. கோப்பெருஞ்சிங்கனின் அரசியல் விவகாரங்களை இக்கல்வெட்டுக்கள் தெளிவாக உணர்த்துகின்றன.

''ஹாய்சாள தண்டநாதர்களின் படையெடுப்பை திருவேந்திபுரம் கல்வெட்டு விவரமாகச் சொல்லுவதுடன், இராஜராஜனைத் தாக்கி சிறைப் பிடித்து பிறகு அவனை விடுதலை செய்த காடவச்சிற்றரசன் புகழ் பெற்ற கோப்பெருங்சிங்கனே என்று திருவேந்திபுரம் கல்வெட்டு தெரிவிக்கிறது. (சமஸ்கிருதத்தில் இவன் பெயர் மஹாராஜசிம்ம எனப்படும்) இந்தக்காலப் பகுதியின் வரலாற்றில் இவனுக்கு நிறைந்த இடம் உண்டு. தமிழ்நாட்டிலும் கன்னடநாட்டிலும் கிடைக்கும் ஏனைய கல்வெட்டுகளும் இந்தச் செய்திகளை உறுதிப் படுத்துகின்றன''[9]. என்பதன்மூலம் கோப்பெருஞ் சிங்கனுடனான தொடர்பினை நன்கு அறியலாம்.

கோப்பெருங்சிங்கனிடம் இருந்து திருமுனைப்பாடி நாட்டை பாண்டியர்கள் ஆட்சிக்கு உட்படுத்தினர். இவர் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஆண்டனர். இவர்களில் 2ஆம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன், முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன், மாறவர்மன் விக்ரமபாண்டியன் ஆகியோர் குறிப்பிடத்

தக்கவர்கள் இவர்களின் கல்வெட்டுக்கள் திருவந்திபுரத்தில் மிகுதியாக உள்ளன.

## விக்ரமபாண்டியன் கல்வெட்டு

''இக்கோயிலின் நம்மாழ்வார் சன்னிதிக்கு மேற்குப்புறச்சுவரில் விக்கிரம பாண்டியன் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. இது 36 வரிகளை உடையது. இக்கல்வெட்டு இக்கோயிலுக்குத் தேவையான உப்புக்காக உப்பளதானம் விட்டமை பற்றி விளக்குகிறது''[10].

## சுந்தர பாண்டியன்

''தாயார் சன்னதிக்குக் கிழக்காகவும் தெற்குப் பிரகாரத்தின் மேற்குமுனையிலிருந்து கிழக்கு நோக்கிய இடத்தில் அதாவது நிருதிபலிபீடமூலையில் சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்று உள்ளது. இது 7 வரிகளை உடையது. இவனது 13வது ஆட்சியாண்டை பற்றிய கல்வெட்டு இது''[11] இதில் எல்லாக் கோயில்களிலும் செய்கின்றபடியே வழிபாடு செய்ய வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி புதிய முறைகளைப் பின்பற்றக்கூடாது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## மாறவர்மன் வீரபாண்டியன் கல்வெட்டு

''கோயிலுக்குள் காணப்பெறும் இக்கல்வெட்டு விஷ்வக்ஸேநர் சன்னதிக்கு மேற்கு பக்கம் உள்ள வெளிப்புறச்சுவரில் காணப்படுகிறது மாறவர்மன்

வீரபாண்டியனின் 10வது ஆட்சியாண்டு கல்வெட்டு என்பது குறிப்பிடத்தக்கது. இது 24 வரிகளை உடையது. தானமாக கொடுக்கப்பட்ட நிலங்களைப்பற்றி கூறுவதாக அமைந்துள்ளது.''[12]. இப்படி பல மன்னர்களின் கல்வெட்டுக்கள் அங்கு காணப்படுகின்றன.

14ஆம் நூற்றாண்டிற்கு பின்பு போசனர், சேரர், உடையார்கள், மதுரை சுல்தான்கள், விசயநகர பேரரசர், மராத்தியர், மொகலாயர், செஞ்சிசிங்குகள், கர்நாடக நவாப்புகள் என்று 18ஆம் நூற்றாண்டுவரை பல அரசர்கள் தென்னாற்காடு மாவட்டத்தினை (திருமுனைப்பாடி நாடு) ஆட்சி செலுத்தியுள்ளனர். இறுதியாக இவ்வரசு ஆங்கில ஆட்சியின் கீழ்வந்துவிட்டது. ''திருவயிந்திரபுரச்சீமையை ஆங்கிலேயர்கள் 1749 ஆம் ஆண்டு ஆர்க்காடு நவாபிடமிருந்து 28000 ரூபாய்க்கு வாங்கினர்''[13] என்பதன் மூலம் அறியலாம். ஆங்கில ஆட்சியின் கீழ் வந்த தென்னாற்காடு மாவட்டம் பாரதத்தின் மற்ற பகுதிகளைப் போல 1947 ஆகஸ்ட் 15ஆம் தேதிவரை ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் இருந்தது இப்படியாக பல்வேறு அரசர்களின் தொடர்பினை திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருவந்திபுரம் பெற்றிருந்தது.

## புராண வரலாறு

புராணம் பழமையானது அதாவது பழங்கதையை எடுத்துக்கூறும் இயல்புடையது. ''புராணம் என்பது புராதனம் என்னும் வடசொல்லின் அடியாக அமைந்ததாகும். பழைய தாயினும் புதியதாகத் தோன்றுவது பழமையானது. தன்னிடத்தில்

ஈடுபட்டவர்களை முன்னுக்குக் கொண்டு வருவது என்று பொருள் கொண்டது இப்புராணம் என்ற சொல்''[14] என்று குறிப்பிட்டுள்ளனர். புராணம் என்பது பழமையான வரலாறு அதாவது முன்னிகழ்ந்தவற்றை விளக்குவது இன்றும் அவை மக்கள் மனதில் இடம்பெற்றுள்ளது. அதனால் புராணம் என்பதை பழைய வரலாறு என்று கூறுவதைவிட வழிவழி வந்த மரபு வரலாறு எனலாம். ''புராண நூல்கள் கூறும் பொருள் பாகுபாட்டினையும் அவற்றின் அமைப்பையும் கொண்டு இவைபாகுபாடு செய்யப்பெறும். பொதுவாக இவற்றைப்பின் வரும் ஆறுநிலைகளில் காணலாம். அவை,

1. மகாபுராணங்கள்

2. இதிகாச அமைப்பிலானவை

3. சிவபுண்ணியம் சிவதருமம் கூறுவன

4. ஆண்டவன் அடியார் வரலாறும் பிறவரலாறுகளும்

5. சாதிப் பெருமை விளக்குவன

6. ஊர்ச்சிறப்பை எடுத்துரைப்பவை (தலபுராணம்) என்பன இவை தமிழிலுள்ள அனைத்துப் புராண நூல்களையும் உள்ளடக்கியவை''[15] எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.

புராணங்கள் வாழ்வின் அனைத்து அம்சங்களையும் எடுத்துரைக்கத்தக்கவையாகும். 16ஆம் நூற்றாண்டிற்குப் பின்புதான் தமிழில் பல் புராணங்கள் தோன்றி வளர்ந்தன.

நடுநாட்டில் அமைந்த வைணவத்தலம் திருவந்திபுரம். இத்தலத்தின் தலபுராணம் இன்று வரை

கிடைக்கவில்லை அரங்கராகவாசாரியர் திருவகீந்திர புருத்தலமான்மியம் என்பதை எழுதியுள்ளார்.

## கோயிலின் தோற்றம்

கோயில் என்பது கோ+இல் = கோயில் என அழைக்கப்படுகிறது. கோ என்பது மாமனிதர்களைக் குறிக்கும் ஓர்சொல்லாகும். இல் என்பது இருப்பிடத்தைக் குறிக்கும். அத்தகைய சொற்களைக்கொண்டே இறைவன் என்னும் பரம்பொருள் சுடர்விட்டு மக்களுக்கு அருள்புரியும் திருத்தலத்தைக் கோயில் என்று அழைக்கின்றனர். ஆலயம், தேவபவனம், தேவகிருதம், தேவகுலம், தேவவேஸ்மம், தேவஸ்தானம், ஷேத்திரம், சைத்தியம் போன்றவை கோயிலைக் குறிக்கும் வேறு சொற்களாகும். இக்கோயில்கள் என்றும் கலைகளின் பொக்கிஷமாகவும், பண்பாட்டின் காலக்கண்ணாடி யாகவும் திகழ்கின்றன.

உலகில் சமயம் என்று தோன்றிற்று என்று யாராலும் அறுதியிட்டுக் கூறமுடியாது, தனக்கு மேல் தன்னைக் கட்டுப்படுத்தும் ஓர் சக்தி இருக்கிறது என்று மனிதன் என்று உணரத் தொடங்கினானோ அன்றே சமயம் என்பது நிலை பெற்றது. முதன்முதலில் அச்சமயநெறி அச்சத்தாலே உண்டாயிற்று எனலாம். பின்பு அவ்வழியே பரம் பொருளைக் காணும் இறை உணர்வு பிறந்திருக்க வேண்டும் இதன் விளைவாகத் தோன்றியவை தான் கோயில்கள்.

திருவந்திபுரம் கோயில் எப்பொழுது தோன்றியது என்று அறிஞர்களால் அறுதியிட்டுக் கூறமுடியாது.

**''ஐயானனனியல் வாணனை யடிமைக் கொள மெய்யே**
**பொய் பா வண மெழுதும் பதிபொற்போடு வணங்கா**
**மெய்பாகம வதிலைத் திருவிரட்டமு நேமிக்**
**கையாள னந்திரபுர முங்கண்டு கைதொழுதான்''[16]**

வில்லிபாரதம், ஆதிபருவம், அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்திலுள்ள 17-ஆம் பாடல் பகுதியால் மகாபாரதக் காலத்தில் அர்ச்சுனன் தீர்த்தயாத்திரையின் போது திருவந்திபுரம் வந்ததை அறியமுடிகிறது. இதன் மூலம் திருவந்திபுரத்தின் தொன்மையை அறியலாம். இறைவனின் மீது பக்தி கொண்டவர்களான மன்னர்களும், அடியவர்களும் பல கோயில்களை எழுப்பினர். இவ்வாறு பல கோயில்கள் தோன்றலாயின.

## காலம்

திருவந்திபுரம் கோயில் 1300 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டது எனக்கூறப்படுகிறது. இது யாருடைய காலத்தில் கட்டப்பட்டது என்பது தெரியவில்லை. இத்திருக்கோயில் பல்வேறு காலங்களில், அரசர்கள் பலரால் கட்டப்பட்டதாகத் தோன்றுகின்றது. கோயிலின் மேற்கூரையின் அமைப்பும், சிறிய கோபுரத்தின் அடித்தளனும் பிற்காலப் பல்லவர்களின் கட்டிடச் சிறப்பைக் காட்டுகின்றன. துவார பாலகர்களின் சிலைகளுக்கு அருகில் முதலாம்

குலோத்துங்க சோழன் (கி.பி.1070) மற்றும் விக்ரமசோழ தேவன் (கி.பி. 1118 - 1135) இவர்களுடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இத்திருக்கோயிலின் பிரகாரங்கள் பாண்டிய மன்னர்களால் கட்டப்பட்டதாக நம்பப்படுகிறது. பிரகாரத்தின் மேல் தளத்தில் மீன்கள் பொறிக்கப்பட்டிருப்பதும் அங்குக் காணப்படும் பலகல்வெட்டுகளும் இதனை உறுதி செய்கின்றன.

''பிற்காலச் சோழர்களின் கல்வெட்டுக்கள் பல இங்கு உள்ளன. பிற்காலச் சோழர்களில் முதலாம் இராஜராஜன் மிகவும் சிறப்புப் பெற்றவன். இவன்மகள் திரைலோக்கிய மாதேவியின் தானங்கள் பற்றிய கல்வெட்டுக்கள் பல இங்கு உள்ளன. அதனால் இக்கோயிலை இவளது கணவன் கட்டியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. எனவே இக்கோயில் 11 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம்''[17]. கோயிலின் காலம் பற்றிய விவாதம் முடிவுபெறாத ஒரு நிகழ்ச்சியாகவே உள்ளது. கல்வெட்டுக் செய்திகளைக் கொண்டு கூறிய செய்திகளையே கோயிலின் காலம் எனக்கருதலாம்.

## காரணம்

கோயில் தோன்றுவதற்குப் பல காரணங்களைக் கூறுவர். மக்கள் ஒன்றாகக் கூடிவழிபடுவதற்காகவே முதலில் கோயில் தோன்றிற்று என்பர். இறைவன் பூவுலகில் பல இடங்களில் அடியவர்களின் பக்திக்கு இணங்கிக் கோயில் கொண்டுள்ளார். இதே போன்றுதான் திருவந்திபுரக் கோயிலும் ஏதேனும் ஓர் காரணம் கொண்டு தோன்றியிருக்கவேண்டும்.

"ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்கட்கும் கடும் போர் மூண்டு யுத்தத்தில் அசுரர்கள் வெற்றிபெற்றனர். முறியடிக்கப்பட்ட தேவர்கள் திருமாலைத் துதித்து உதவிபுரிய வேண்டுமென்று விண்ணப்பிக்க அவர்கட்கு உதவவந்த ஸ்ரீமந் நாராயணன் கருடவாகனத்தின் மேலிருந்து போரிட அசுரர்கள் நாராயணனையும் எதிர்த்துக் கடும் போர்புரிந்தனர். இறுதியில் ஸ்ரீமந் நாராயணன் சக்ராயுதத்தை ஏவ அது சகல அசுரர்களையும் அழித்தது.

இந்நிலையில் அசுரர்களின் உதவிக்கு வந்த சிவன் சக்ராயுதத்திற்கு எதிராகத் தனது சூலாயுதத்தை ஏவ அதுவும் சக்கரத்தின் பாற்பட்டு அதற்கோர் அணிகலன் போன்று அச்சக்கரத்தையே சார்ந்து நிற்க, இது கண்ட சிவன் தன் ஞான திருஷ்டியால் நோக்க ஸ்ரீமந்நாராயணன் அங்கு தனது மும்மூர்த்தி வடிவத்தை அரனுக்குக் காண்பித்தார். அவ்வடிவில் ஸ்ரீமந் நாராயணனுடன் பிரம்மா, சிவன் தேவர்களும் தெரிய, சிவன் துதித்து நிற்க எம்பெருமான் சாந்தமுற்று சக்ராயுதத்தை ஏற்றுக் கொண்டு சூலாயுதத்தையும் சிவனிடமே சேர்ப்பித்து ரிஷிகள் தேவர்களின் வேண்டுகோளின்படி அவ்விடத்திலேயே கோயில் கொண்டார்"[18]. என்பதன் மூலம் இக்கோயில் தோற்றத்திற்கான காரணத்தை அறியலாம்.

## தலவிருட்சம்

மரவழிபாடு என்பது இந்தியாவில் தொன்று தொட்டு நிலவிவருகின்றது. ஒவ்வொரு கோயிலிலும் ஒவ்வொரு மரத்தைத் தலமரம் எனக்கூறி

வழிபடுகின்றனர். அம்மரத்தை தெய்வத்தன்மை வாய்ந்ததாக எண்ணுகின்றனர். "நன்மைகள் தருவதால் மரங்களின் மீது பக்தி ஏற்பட்டு வழிபாடு உருவாயிற்று. தீமைகள் நல்கும் என்ற பயத்தாலும் மரவழிபாடு அறிமுகமாயிற்று. ஆக இருவேறுகாரணங்கள் அடிப்படைகள், இந்த இரண்டும் ஆதி மாந்தனின் அடிப்படை உணர்வுகள் என்பதால் மரவழிபாடே வழிபாட்டில் மிகமுந்தியது எனலாம்"[19].

தலமரம் வணங்கப்படுவதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன இம்மரங்களை இறைவனாகவே எண்ணி வழிபடுகின்றனர். "கோயில்கள் வளர்ந்தாலும் மரத்தினைமறக்காமல் அதற்கெனக் கோயில்களில் ஓரிடம் ஒதுக்கி அதில் அதனையும் வழிபடு பொருளாக்கினார்கள். இவ்வகையில் இதற்குத் தல விருட்சம் என்னும் பெயர் அமைந்தது. விருட்சம் என்னும் சொல் பெருகுதல் என்னும் பொருளைக் கொண்டது. ஒருமரம் பல மரங்களாகப் பெருகுதல் போல மக்கள் வாழ்வும் மரங்களை வணங்குவதால் பெருகும் என்னும் நம்பிக்கை மலர்ந்தது. இதன் அடிப்படையில் எல்லாக்கோயில்களிலும் ஒவ்வொரு மரம் தலமரமாக விளங்குகிறது"[20]. சிந்து வெளிமக்கள் மரங்களையும் அவற்றில் உறையும் தெய்வங்களையும் வழிபட்டு வந்தனர் என்பதை ஹரப்பாவில் கிடைத்துள்ள புதைபொருள்களைக் கொண்டு அறியலாம். இம்மரவழிபாடு தமிழ்நாட்டில் இந்து சமயத்தவரால் பின்பற்றப்பட்டது.

சிவன் வெம்மையின் வடிவமானவனாதலால் அவனுக்குக் குளிர்ச்சியூட்ட தண்மை மரமான

வில்வத்தையும், திருமால் தண்மையின் வடிவமானவனாதலால் அவனுக்கு வெம்மையூட்ட வெம்மைச்செடியான துளசியையும் வழிபாட்டில் வைத்துள்ளதாகக் கூறுவர். இப்படித்தலமரமாகக் கொன்றை, வில்வம், நாகலிங்கம், வன்னி, அத்தி, மகிழம், புன்னைபோன்றவை விளங்குகின்றன. திருவந்திபுரம் தேவநாதபெருமாள் கோயிலில் வில்வமரம் தல விருட்சமாக உள்ளது. ''வில்வமரம் சிவனக்கு உரியது; பெருமாளுக்கு உரியது அன்று. ஆனால் இத்தலத்தில் பெருமாள் மூவராகிய ஒருவனாகக் காட்சி தருகிறார். எனவே சிவனுக்கு உரிய மரமான வில்வமரத்தையே தனக்குரிய தலமரமாகக் கொண்டு திகழ்கிறார்''[21]. ஆதலால் இக்கோயிலின் மூர்த்தி சிவனுக்கு உரியவில்வமரத்தைத் தலமரமாகக் கொண்டு விளங்குவது சிறப்புடையதாகும்.

## தீர்த்தம்

தீர்த்தம் என்பது புண்ணிய நீர் எனப்படும். தீர்த்தம் என்னும் சொல் துறை, வழி என்னும் பொருள்களைக் குறித்தது. பின்பு இச்சொல் மக்கள் ஆற்றில் இறங்கிக்குளிக்கும் இடத்தையும் குறிப்பதாக அமைந்தது. நீர் நாம் செய்யும் அனைத்துச் செயலிலும் முக்கியப் பங்குவகுக்கிறது.

''நீர் கோயில்களில் ''தீர்த்தம்'' என்ற பெயரில் பிரசாதமாக வழங்கப்படுகிறது. குடம் வைத்து பூசை செய்து வேண்டியதைப் பெறலாம். சங்கில் நீர்வைப்பது இட்டமாசித்தியைத்தரும். தீர்த்தம் ஆடுதல் யாவற்றிலும் பெரிது''[22] தீர்த்தங்களில் நீராடி இறைவனை வழிப்படுதல்

என்பது திராவிடர்களின் வழக்கம் என்பர். புண்ணியதீர்த்தத்தில் நீராடுவது என்பது வெறுமனே தூய்மைப்படுத்தும் சடங்கன்று. அது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது என்று கருதுகின்றனர். ஹரித்துவாரில் நிகழும் கும்பமேளாவின் போதும், பிற புண்ணிய தீர்த்தங்களிலும் பக்தர்கள் நீராடுதல் என்பது அமிழ்தத்தில் மூழ்கியதற்கு ஒப்பாகும். இவ்வகையில் தீர்த்தம் என்பது உயிரளிக்கும் நீராகக் கருதப்படுகிறது. புண்ணிய தீர்த்தத்தில் பக்தர்கள் நீராடும் பொழுது அமிழ்தத்தில் மூழ்கியது போன்று உணருகின்றனர்.

தீர்த்தமாடுதல் எனப்படுகிற நிகழ்ச்சி அல்லது சமயச் சடங்கு தொன்று தொட்டு நடைபெற்று வரும் ஒருா சமூக நிகழ்வாகும். பக்தி இயக்ககால கட்டத்தில் நீராடல் என்பது சமயச்சார்பு கொண்டதாக மாறிற்று என்று கருதலாம்.

''திருத்தலங்களுக்குச் சென்று தீர்த்தமாடுதல் அடியார்களின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்கது ஆகும். தீர்த்தமாடி இறையருளில் தோய்ந்த குலசேகர ஆழ்வார் திருவேங்கடத்திலுள்ள பொய்கையில் மீனாகப் பிறக்க வேண்டும் என்று திருவரங்கப் பெருமானிடம் வேண்டுகிறார்.

**ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ**

**வானாளும் செல்வமும் மண்ணரசும்யான் வேண்டேன்.**

**தேனார் பூஞ்சோலைத்திருவேங்கடச் சுனையில்**

**மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே**

ஆழ்வாரின் இந்த ஆழ்ந்த விருப்பம் தீர்த்தமாடலின் பெருமையை விளக்குவதாக அமைகின்றது''[23].

சிறப்பு வழிவாடுகளின்போது நீர்க்குணமான பழங்களே பூசைக்கு உகந்தனவாகக் கொள்கின்றனர். உலகியல் பொருள்களைப் பூசைக்கு ஏற்கும் போது திவ்யமந்திரம் சொல்லி நீரால் தெளித்தாலே அசுத்தமும் பிறுதூய்மையற்ற தன்மையையும் நீக்கலாம் என்பர்.

தீர்த்தம் ஆடினால் பாவம் நீங்கும் என்று பக்தர்கள் நம்புகிறார்கள். நீராடிப் பாவம் நீக்கிய செய்தியினை

**''தீது நீங்கக் கடலாடியும்**

**மாசுபோகப் புனல் படிந்தும்''**[24]

என்று பட்டினப்பாலை எடுத்துரைக்கின்றது. இதன் மூலம் தீர்த்தத்தின் முக்கியத்துவத்தை அறியலாம்.

திருவந்திபுரம் கோயிலில் ஐந்துதீர்த்தங்கள் உள்ளன. இவற்றை பஞ்சதீர்த்தங்கள் என்பர். இவ்வைந்து தீர்த்தங்களில் இரண்டு கோயிலுக்கு உள்ளும் மூன்று தீர்த்தங்கள் கோயிலுக்கு வெளியிலும் உள்ளன. அவை சேஷதீர்த்தம், கருடதீர்த்தம், பூதீர்த்தம், லட்சுமிதீர்த்தம், பிரம்ம தீர்த்தம், என்பவையாகும். சேஷ தீர்த்தமும், கருடதீர்த்தமும் கோயிலின் உள்ளே காணப்படுகின்றன.

## சேஷதீர்த்தம்

ஒரு சமயம் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் போர் நடந்தது பெருமாள் தேவர்கள் சார்பாகப் போரிட்டு அசுரர்களை வென்றார் இப்போருக்குப் பின் ஔஷதகிரியில் பெருமாள் வந்து இளைப்பாறினார்.

அப்போதுதான் பெருமாள் கருடபகவானுக்கும் ஆதிசேடனுக்கும் தீர்த்தம் கொண்டுவரும்படி கட்டளையிட்டார். அக்கட்டளைக்கேற்ப ஆதிசேடனால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தமே இந்த சேஷ தீர்த்தமாகும்.

இத்தீர்த்தத்தில் பக்தர்கள் உப்பு, மிளகு, வெல்லம், பால் இவைகளைச் சேர்த்து இடுவார்கள். இப்படிச்செய்தால் அவர்களின் அனைத்து நோய்களும் நீங்கும் என்று நம்பப்படுகிறது. பிள்ளைப்பேறு வேண்டும் பெண்கள் வெள்ளிக்கிழமைகளில் ஆதிசேடனுக்கு பசும்பால் திருமஞ்சனம் பண்ணினால் மகப்பேறு உண்டாகும் என்று நம்புகின்றனர்.

## கருடதீர்த்தம்

பெருமாளின் கட்டளைப்படி கருடன் கொண்டு வந்த தீர்த்தம் கருடதீர்த்தம் என்று வழங்கப்படுகிறது. மதுவனத்தில் தவம் செய்து கொண்டிருந்த முனிவரின் கமண்டலத்தில் இருந்த விரஜாதீர்த்தத்தை உடைத்துக் கொட்ட பூமியைக் கீறி ஓடிவரும் புனித நதியை உண்டாக்கினார். ''இந்நதி கங்கைக்குச் சமம். இதில் நீராடினால் அளவிறந்த நன்மைகள் கிட்டும். மனிதர்கள் பாவ நீக்கம் பெறுவர். இது நீராடுபவருக்கு வீடுபேற்றை நல்கும் என்பது திண்ணம்''[25]. என்பதன் மூலம் இதன் சிறப்பினை அறியலாம். ஏனையமூன்று தீர்த்தங்களும் மலையின் மீது இரண்டு மைல் தொலைவில் அமைந்துள்ளன.

## பூ தீர்த்தம்

பூமி தேவியால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தம் பூதீர்த்தம் ஆகும். சகல விதமான கஷ்டங்களையும் போக்கக்கூடியது.

## லட்சுமி தீர்த்தம்

லட்சுமியால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தம் லட்சுமி தீர்த்தம் ஆகும். இத்தீர்த்தத்தில் நீராடினால் லட்சுமி கடாட்சம் ஏற்படும் என்று நம்பப்படுகிறது.

## பிரம்மதீர்த்தம்

பிரம்மனால் தோற்றுவிக்கப்பட்ட தீர்த்தமே பிரம்மதீர்த்தம் என்று கூறப்படுகிறது. பேய் பிசாசுகளை விரட்ட இத்தீர்த்தத்தில் நீராடுவர், அதுமட்டுமன்றி உடல் உரமும் கிட்டும் என்று நம்பப்படுகிறது. இவையே இக்கோயிலில் காணப்படும் தீர்த்தங்களின் சிறப்பாகும்.

## காலந்தோறும் திருப்பணி

இக்கோயிலுக்குத் திருப்பணி செய்தவர்கள் பலர். அவர்களில் பலர் அரசர்கள் மற்றும் வள்ளல்கள் ஆவர். இவர்கள் இறைவன் மீது பக்தி கொண்டு அவனுக்குத்தொண்டு செய்வதாக எண்ணி இப்பணியினைச் செய்துள்ளனர்.

## சுந்தரபாண்டியன்

''சுந்தரபாண்டியன் இக்கோயில் திருப்பணிக்கு நிலம் தானமாகக் கொடுத்ததற்கான கல்வெட்டு ஒன்று தேவநாதசுவாமி கோயிலின் மேற்குப் பிரகாரத்தின் வடக்கு நோக்கிய தளத்தின் முன்புறமாக அமைந்துள்ள பிள்ளையார் கோயிலில் அமைந்துள்ளது. இது அவன் செய்த திருப்பணியினை விளக்கமாகக் கூறுகிறது''[26].

சமீப காலத்திய கல்வெட்டுக்கள் பலவும் திருப்பணி பற்றிய செய்திகளை விரிவாக எடுத்துரைக்கின்றன. ''சேஷதீர்த்தத்துக்கு வடக்கில் இறங்கும் படியில் காணப்படும் கல்வெட்டு ஒன்று திருப்பணிபற்றிக் கூறுகிறது''[27].

''ஹயக்ரீவர் கோயில் தெற்குவாசல் மேல்புற கோபுரத்தில் காணப்படும் கல்வெட்டு, முக்னிராம் ராம்குமார் பங்காரு அவர்கள் செய்த திருப்பணி பற்றிய செய்தி இதில் கூறப்பட்டுள்ளது''[28].

''கோயிலின் மேற்கு வாயிற்புரத்தில் தெற்குச் சுவரில் காணப்படும் கல்வெட்டு பெரிய கோபுரம் பழுது பார்த்தது பற்றியும் புதுப்பிக்கப் பட்டது பற்றியும் எடுத்துரைக்கின்றது''[29].

1972 ஆம் வருடம் திருவந்திபுரம் கோயிலின் பல சன்னதிகளும் திருப்பணி செய்யப்பட்டன என்பதை இங்குள்ள கல்வெட்டுக்கள் தெளிவாக விளக்குகின்றன.

''ஆஞ்சநேயர் சன்னதி திருப்பணி ஸ்ரீமந் ஆண்டவன் சுவாமிகள் அவர்களால் செய்யப் பட்டுள்ளது''[30].

"ஸ்ரீ தாயார் சன்னதி மணிக்கதவுக்கு வடக்கில் காணப்படும் கல்வெட்டு திருப்பணி பற்றிய செய்தியைக் கூறுகிறது"[31]. இதில் ஹேமாம்புஜவல்லித் தாயார் சன்னதி திருப்பணியை கே.எஸ்.ராயல் ரெட்டியார் செய்துள்ளதை தெளிவாகக் குறிப்பிடுகிறது.

"படித்துறை நாலுகால் மண்டபத்தில் காணப்படும் கல்வெட்டு திருப்பணி பற்றிய செய்தியைக் கூறுகிறது"[32].

"படித்துறைப் படிக்கட்டுக் கைப்பிடிகள், மேலிருந்து 4-வது படியில் காணப்படும் கல்வெட்டு திருப்பணி பற்றிய செய்தியை எடுத்துரைக்கின்றது"[33].

1997 - ஆம் ஆண்டு கோயில் திருப்பணிக்கு அரசு 3 லட்சம் ரூபாய் வழங்கியுள்ளது. இது தவிர 40 லட்சத்திற்கு மேல் நன் கொடையாளர்கள் தாராளமாக அளித்து திருப்பணியை நிறைவேற்றி உள்ளனர். பெருமாள் விமானத்திற்குத் தங்க முலாம் பூசுவதற்கு 400 கிராம் தங்கத்தை பெண்டாபோர் நிறுவனம் காணிக்கையாகத் தந்துள்ளது. தாயார் சன்னதிக்குத் திருப்பணியை ரங்கராஜன், ராகவன், ரவிச்சந்திரன் மற்றும் பி.டி. ஸ்ரீனுவாசாச்சாரியாரும் நடத்தியுள்ளனர்.

தேசிகர் விமானத்தைப் புதுப்பிக்கும்பணியை டி.கே.மூர்த்தி எடுத்துக் கொண்டுள்ளார். பிரபந்தப் பாசுரங்கள் அடங்கிய கல்வெட்டுக்களை ஆழ்வார் சன்னதியில் பதிக்க வி.எஸ். வீரராகவனும், அனுமான் சன்னதி திருப்பணியை கே.எஸ். சேஷாத்திரியும் அவரது குடும்பத்தினரும் செய்துள்ளனர். இவ்வாறு பக்தர்கள் பலர் காலந்தோறும் இக்கோயில் திருப்பணியினை தங்கள்

சொந்த வேலைபோல் ஏற்றுச் செய்து வருகின்றனர் என்பதனை நன்கு அறியமுடிகிறது.

## குடமுழுக்குகள் நடந்த வரலாறு

குடமுழுக்கு என்பது இறைவனை எடுத்த திருவுருவிலே எப்போதும் எழுந்தருளியிருக்க வேண்டிக் கொள்ளும் செயலாகிய பிரதிட்டையின் இறுதிச் சடங்காகும். இக்குடமுழுக்கினை கும்பமுழுக்கு, கும்பாபிஷேகம், சம்ரோக்ஷணம் என்று பலவாறு அழைப்பர்.

''சிவாசாரியார்கள் தன்னுள் விளங்கும் இறைவனை ஆ-பசு எனும் ஜீவாத்துமாக்கள் லயம்-ஒடுங்கும் இடம் எனும் கோவிலில் விளங்கும் இறைவனோடு இரண்டறக் கலக்கச் செய்து பின் அவ்விறைவனை கும்பத்துள் கொண்டு வந்து நிறுத்தல். அதன்பின் அவ்விறைவனை வேள்வியாம் யாகத்தில் எழுந்தருளச் செய்தல். அதன்பின் அடியார்கள் உள்ளத்துள் இறைவனை விளங்கச் செய்து தனது மந்திர சக்தியால் எங்கும் விளங்கும் இறைவனை வேள்வியில் கொண்டு வந்து அதிலிருந்து இறைவனைக்கும்பத்தில் சேர்த்து கும்பத்திலிருந்து அபிஷேகம் செய்வதின் மூலமாய் ஆலயத்தில் உள்ள இறைவனிடம் தெய்வீக சக்தியைச் சேர்ப்பதே கும்பாபிஷேகம் எனப்படும்''[34]. இதனால் கும்பாபிஷேகம் எவ்வளவு முக்கியமானது என்பதை அறியலாம்.

கும்பாபிஷேகத்திற்குப் பின்பு சண்டயாகம் செய்து அஸ்திர மந்திரங்களால் ஹோமம் செய்து சாந்தியை உண்டாக்குவர். திருக்கல்யாணம் செய்து மக்களை

மகிழ்விப்பர். வீதியுலாக் காட்சிதருதல், மண்டலாபிஷேகப் பூர்த்தி நாள் அன்று ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் சாந்தி உண்டாவதற்காக 1008 கலசங்களையோ அல்லது 1008 சங்கங்களையோ வைத்து மஹாஸ்பதனம் எனும் பூசை செய்து இறைவனை வழிபடுவது கும்பாபிஷேகம் என்னும் பெருஞ்சாந்தி விழாவின் உட்பொருளும் சிறப்புமாகும்.

திருவந்திபுரம் தேவநாத சுவாமி கோயிலில் முதன்முதலில் எப்பொழுது கும்பாபிஷேகம் நடந்தது என்பது தெரியவில்லை. இத்திருக்கோயிலில் 1909 ஆம் ஆண்டிலும் பின்னர் 1972ஆம் ஆண்டிலும் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளன. 27.3.1997 ஆம் ஆண்டு காலை 9 மணிக்குமேல் 10.30 மணிக்குள் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. அதுமட்டுமன்றி கலசம் களவுபோனதால் 1917 ஆம் ஆண்டு ஒருமுறை நடைபெற்றதாகக் கூறப்படுகிறது.

இக்கோயிலின் மலை ஔஷதகிரி எனப்படும். இம்மலையின் மீது அமர்ந்து அடியவர்களுக்கு அருள்புரியும் பரிமுகப் பெருமாள் கோயிலில் முதன்முதல் 1976ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அதன்பின்பு 5.4.1999 ஆம் ஆண்டு திங்கட்கிழமை அனுச விண்மீன் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 9.00 மணிக்குமேல் 10.15 மணிக்குள் ரிடப நல்லோரையில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இவ்வாறு குடமுழுக்குகள் காலந்தோறும் நடைபெற்று வந்துள்ளன.

## புரந்தவர்கள்

புரந்தவர்கள் என்பவர்களைக் கட்டளைக்காரர்கள் என்றும் அழைப்பர். இவர்கள் பல விழாக்களை எடுத்து நடத்துவர். இவர்கள் நிலங்களை இறையிலியாக வழங்கியுள்ளனர். இப்படிப் புரந்தவர்கள் திருவந்திபுரம் கோயிலுக்கு நிவந்தமாக நிலங்களைப் பன்னெடுங்காலமாக வழங்கியுள்ளனர். அர்த்தயாமக் கட்டளை, பால் நிவேதக் கட்டளை, பசுமாட்டுக்கட்டளை என்று பலகட்டளைகள் உள்ளன. இவைகளை கட்டளையாக எடுத்து நடத்துபவர்கள் சுமார் 200க்கும் மேற்பட்டவர்கள் உள்ளனர். "கட்டளைக்காரர்களில் பாளையக்காரவகையறா என்போர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்கள் நிறைய நிலங்களை இதற்காகக் கோயிலுக்குக் கொடுத்துள்ளனர்"[35].

அதுமட்டுமன்றி இறைவனின் அருளைப்பெற்று ஆனந்தமடைந்த அக்கிள் நாயக்கர் என்பவர் உற்சவத்திற்காக நிறைய நிலங்களைத் தானமாக வழங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இன்று கட்டளைக்காரர்கள் என்று சொல்லும் அளவுக்கு அதிக அளவில் நிலங்களை யாரும் தானமாகக் கொடுக்கவில்லை என்கின்றனர். முன்பு இருந்தவர்கள் கொடுத்த நிலங்களை வைத்து இன்றுவரை கட்டளைகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

## மின்வசதிக் குறிப்புகள்

1964 ஆம் ஆண்டு அறநிலையத் துறையின் நிர்வாகத்தினரால் இக்கோயிலுக்கு மின்இணைப்பு வழங்கப்பட்டது. இவ்வூரிலேயே முதன் முதலில் இக்கோயிலுக்குத்தான் மின் இணைப்புக் கொடுக்கப் பட்டது. 1966 ஆம் ஆண்டு மலைக் கோயிலுக்கு மின் இணைப்புக் கொடுத்தனர். தற்போது இக்கோயிலில் இரண்டு மாதத்திற்கு ஒருமுறை 10,000 ரூபாய்க்கு மேல் மின்கட்டணம் செலுத்துகின்றனர். மின்வசதி பெற்று இக்கோயில் பொலிவுடன் காட்சித்தருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## இன்றைத் திருப்பணிகள்

இன்றையத் திருப்பணியென்று எதுவும் இங்கு நடைபெறவில்லை. ஆனால் 3 (அ) 2 வருடத்திற்கு ஒருமுறை கோயிலுக்கு வெள்ளை அடிக்கப்படுகிறது. 1996ல் கோபுரத்திற்கு திருப்பணி செய்யப்பட்டது. 1998 ல் வெள்ளையடிக்கப்பட்டது. இவ்வாறு சிறுசிறு பணிகள் நடைபெற்றுள்ளன.

## தொகுப்புரை

அகீந்திரனால் நிறுவப்பட்ட நகரமாதலால் திருவந்திபுரம் என அழைக்கப்படுகிறது. குலோத்துங்க சோழன், மூன்றாம்ராஜராஜன் விக்ரமபாண்டியன், சுந்தரபாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன் போன்றவர்களின் கல்வெட்டால் இவர்களுக்கும்

கோயிலுக்கும் உள்ள தொடர்பு புலப்படுகிறது. இக்கோயில் அர்ச்சுனன் தீர்த்தயாத்திரையின் போது வந்த கோயில் என்பதன் மூலம் இதன் பழமையை அறியலாம். இந்த கோயிலின் காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

இங்கு இறைவன் தேவர்கள், ரிஷிகள் இவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிக் கோயில் கொண்டார். தலவிருட்சம் வில்வமரமாகும். இங்கு காணப்படும் தீர்த்தம் பஞ்சதீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது. அவை சேஷதீர்த்தம் கருடதீர்த்தம் பிரம்மதீர்த்தம், பூதீர்த்தம், லட்சுமிதீர்த்தம் என்பவையாகும். இங்கு காணப்படும் கல்வெட்டுக்கள் மூலம் திருப்பணி பற்றி அறியமுடிகிறது.

1909 ஆம் ஆண்டு முதன் முதலில் திருக்குடமுழுக்கு விழா நடைபெற்றது. அதன்பின்பு 1972ஆம் ஆண்டிலும் அதற்கடுத்து 1997-ஆம் ஆண்டிலும் திருக்குடமுழுக்கு நடந்துள்ளது. புரந்தவர்கள் சுமார் 200க்கும் மேற்பட்டவர்கள் உள்ளனர். இவர்களில் பாளையக்காரர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். 1964 இல் முதன் முதலில் இக்கோயிலுக்கு அறநிலையத் துறையினரால் மின் இணைப்பு வழங்கப்பட்டது. மலைக்கோயிலுக்கு 1966 இல் இணைப்பு வழங்கப்பட்டது. இன்றையத் திருப்பணிகள் என்று எதுவும் நடைபெறவில்லை. ஆனால் 2 (அ) 3 வருடங்களுக்கு ஒருமுறை வெள்ளையடிக்கின்றனர்.

# சான்றெண்விளக்கம்

1. பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், அஷ்டப்பிரபந்தம் பாடல் - 317.
2. கலைக்களஞ்சியம், தொகுதி - 6, ப.31.
3. சுந்தரசண்முகனார், கெடிலக்கரைநாகரிகம், பக்.431-432.
4. மேலது பக். 140-141.
5. மேலது பக். 141.
6. மேலது ப.142.
7. ராஜகோபாலன்.டி. (படிக்கச் சொல்லிக்கேட்டவை) சிலாசாசன பரிசோதகர், திருவந்திபுரம்,

ஸ்வஸ்திஸ்ரீ த்ருபுவன சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சொழ தெவர்க்கு யாண்டு 41-னாவது உம்பர்பாடியில் பட்டினவ நம்பி எறந்மகள் செரிநங்கை - திருவையிந்திரபுத்து ஆழ்வார் (ற்) க்கு வைத்த சந்திவிளக்கு ஒன்று இவ்விளக்கு ஒன்றுக்கும் விட்ட ஆடு பன்னிரண்டும் சாவா மூவாப் பெ(ர்)ரா-டாக கைக்கொண்டு திருவிளக்கொன்றுக்கும் நெய்யட்டக்கடவ மன(றா) -டி கூத்தன் வில்லி.

8. ராஜகோபாலன் டி. (படிக்கச் சொல்லிக் கேட்டவை) சிலாசாசன பரிசோதகர், திருவந்திபுரம்.

ஸ்வஸ்திஸ்ரீத்ருபுவன சக்ரவர்த்திகள் ராஜராஜ தேவர்க்கு யாண்டு 15 வதில் எதிராமாண்டு ப்ரதாப சக்ரவர்த்தி ஹோய்சண ஸ்ரீ வீரநரஸிம்ம தேவன்

சோழச்சக்ரவர்த்தியைக் கோப்பெருஞ்சிங்கன் சேந்தமங்கலத்தே பிடித்துக்கொடு இருந்து தன் படையை இட்டு ராஜ்யத்தை அழித்து தெவாலயங்களும் விஷ்ணு ஸ்தானங்களும் அழிகையிலே இப்படிதேவன் கேட்டு அருளி - சோழமண்டல ப்ரதிஷ்டாசார்யன் என்றும் கீர்த்தி நிலைநிறுத்தி அல்லது துருக்காள முதுவதில்லை என்று தொரசமுத்திரத்தினின்றும் எடுத்து வந்து மஹாராஜ்ய நிர்மூலமாடி இவனெயும் இவன் பெண்டு பண்டாரமும் கைக்கொண்டு - பாச் சூரிலே விட்டுக் கொப்பெருஞ் சிங்கன் தெசமும் அழித்து சோழச் சக்ரவர்த்தியையும் எழுந்தருளி விட்டுக்கொடு வென்று தேவன் திருவுள்ளமாய் ஏவ விடைகொண்டு எழுந்த ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாப்ரதானி பரம விச்வாஸி - தண்டினகோபன், ஜக தொப்பகண்டன், அப்பணநாயக்கனும், சமுத்ரகோப்பயதண்ணாயகனும் கோப்பெருங்சிங்கன் இருந்த எள்ளேரியும், கல்லியூர் முளையும் சொழகொன் இருந்த தோழுதகையூரும் அழித்து வெ-ந்தன் முதலிகளில் விரகங்க நாடாழ்வான் ஜீனத்தரையன், ஈழத்து ராஜா பராக்ரம பாஹீள்ளிட்ட முதலி 4 பெரையும் கொன்று இவர்கள் குடிரையும் கைக்கொண்டு. கொள்ளிச் சோழகோன் குதிரைகளையும் கைக்கொண்டு பொன்னம்பல தேவனையும் கும்பிட்டு எடுத்து வந்து தொண்டை மாநல்லூர் யுள்ளிட்ட தமக்கூர்களும் அழித்து அழி-க்காடும் வெட்டுவித்து திருப்பாதிரிப்புலியூரிலே விட்டு இருந்து திருவதிகை திருவெக்கரையுள்ளிட்ட ஊர்-களும் அழித்து வாரணவாசி ஆற்றுக்கு தெற்கு செந்தமங்கலத்துக்கும் கிழக்கு கடலிலே ஊர்களும், குடிக்கால்களும் கட்டும் அழித்தும், பெண்டுகளைப் பிடித்தும், கொள்ளைகொண்டும் செந்த மங்கலத்திலே

எடுத்துவிடப்போகிற அளவிலே கோப்பெருஞ்சிங்கன் குலைந்து சொழச்சக்ரவத்தியை எழுந்தருளிவிக்கக் கடவதாக தெவனுக்கு விண்ணப்பம் செய்ய இவர் விட்டு நமக்கும் ஆள்வரக்காட்டுகையாலே சொழச் சக்ரவர்த்தியை எழுந்தருளிவித்துக் கொடுபோந்து ராஜ்யத்தே புகவிட்டது.

9. நீலகண்டசாஸ்திரி. கே.ஏ. சோழர்கள். ப. 580.

10. ராஜகோபாலன். டி (படிக்கச் சொல்லிக் கேட்டவை) சிலாசாசன பரிசோதகர், திருவந்திபுரம்.

ஸ்வஸ்திஸ்ரீ கொமாறபன்ம (ரான) திருபுவனசக்ரவத்திகள் ஸ்ரீ விகரமதேவ பாண்டியர்க்கு யாண்டு ஸ்ரீ ரிஷப நாயற்று அபரபஷத்து பஞ்சமியும் நாயற்றுக்கிழமையும் பெற்ற உத்திராடத்து நாள்விருதராஜ பயங்கர வளநாட்டு மெற்காநாட்டுத் திருவயிந்திரபுரத்து நாயனார் தெய்வநாயகனுக்கு ராஜாதிராஜ வளநாட்டு இக்குறுஞ்சி வளநாட்டு மாறன் - யான் கங்கை கொண்ட சோழ இப்பெரளத்தும் சுந்தரபாண்டிய பெரளத்தும் ஊர்வரொம் நாயனார் தெய்வநாயகனுக்கும் அமுதுபடிக்கு இந்நா நாங்கள் வைத்துக் கொடுத்ளூரிற் கொட்டகாரத்து விலைகயளக்கும் உபாயம்கள் கைவிலை- கொள்ளும் -கும் பட்டடைகாரார் கொள்புக்கும் உரைக்கும் உழக்கு இந்த உப்பு அள்ளித்திருமடை-யிலே அமுது படிக்கு உடல்வதாக வைத்துக்கொடுத்தோ-படி சந்திராதித்த வரையுஞ் செல்வதாகலுஞ்ச செம்பிலும் வெட்டிக் கொகவைத்துக் கொடுத்தொம் மாறன் பாங்கை கொண்ட சொழப் பெர்ராப் பெரளத்தும் சுந்தரப் பெரளத்தும் ஊர்வ

- இவை சொழ கொன் அமுதரைய - இவை சூரிய அமுதரையனெழுத்து.

11. ராஜகோபலன்.டி. (படிக்கச் சொல்லிக் கேட்டவை) சிலாசாசனபரிசோதகர், திருவந்திபுரம். ஸ்வஸ்திஸ்ரீ கொமரபன்மரான திருபுவன சக்ரவத்திகள் ஸ்ரீ சுந்தரபாண்டிய தெவற்கு யாண்டு - 13 வதுக்கு எதிர் 3-வது நாயனார் தெய்வனாயகன் கொயிற் தானத்தாரொம் வ்யவஸ்தை இக்கோயிற் - காணி உடைய பாரசிவர்கள் இவ்வூர் நன்மைதின்மைகள் - அனுதரிக்கும் இடத்து, பாண்டிய மண்டலம், சோழமண்டலம், மகரமண்டலம் நடுவில்-மண்டலம் இ(ம்) மண்டலங்களில் பலகோயில்களிலும் செய்யும்படியே செய்யவும் இப்படி ஒழி யம் புதுமை செய்யக் கடவர்கள் அல்லவாகச் சொல்லி வ்யவஸ்தை பண்ணினோம் நாயானார் - தெய்வநாயகன் கொயிற் தானத்தா ரொம் -

12. ராஜகோபாலன். டி. (படிக்கச் சொல்லிக் கேட்டவை) சிலாசாசனபரிசோதகர், திருவந்திபுரம்.

ஸ்வஸ்திஸ்ரீ கொமாறபன்மர் திரிபுவனசக்ரவத்தி - ஸ்ரீவீர பாண்டிய தேவர்க்கு யாண்டு (10)வது உடையார் - வில்லவ ராயற்கு திருவைந்திர புரத்து நாயனார் - தெய்வநாயகன் கொயில் நம்புமாரில் மாழந்திபரா (யபட்டனான) - பறவைக்கரசு பட்ட னென் திட்டுக்குடுதத்பரிசாவ - து நாயனார் எழிசைநாதப் பொருமாள் கோயிலுக்கு (திரு) - வாராதனத்துக்கு விட்ட புல்லாலியில் உசாவடி நில (4மா) - ம் நா-லு மாவும் திருச்சிற்றம்பல நல்லூரில் மடப்புறமும் திருவிடையாட்டமும் பெசிதிருமுகம் எழுதின நிலத்(து) விட்ட நன்செய் நில-இ நிலம (இம்) அரைமாவும் (சூரிய

தெவந் நத்தத்து தெக்கில் ஆற்-(ற)-ங் கரையில் கீழ்த் தலையில் திருத்தின நன்செய் நில (1மா) ஒருமாவும் இநத்த-த்து துரவடியைச் செர திருவிளக்குப்புறமாக விட்ட புன்செய் நிலம் நா-லுமாவும் ஆக விளை நிலம் ஐம்மா வரையும் புன்செய் நிலம் நாலு மாவும் கைக்கொண்டு ஆண்டு தொறும் முதலான முதல்கொண்டு நா-ள் ஒன்றுக்கு அமுதுபடிக்கு அரி(சி) குறுணி ஐஞ்ஞாழியும் சாத்துப்படி-யும் விஞ்சனங்களும், திருப்பரி (வர)ட்டமும் இந்த(ப்படி) அழிவு சொர்வெ-ம் முண்டாகிலும் அழிவு சொரக்கடவேணாகவும், சந்தி விள(க்கா)-க் இருபத்திநாலு திருவிளக்கு இடவும் இப்படி சம்மதித்து என்குடி யிலுள்ளார் சந்திராதித்தவர்ச் செய்வதாகச் சம்மதித்துதிட்டு-க்குடுத் தென் உடையார்(பு) த்துழார் திருவரங்கச் செல்வரான - வில்லவராயற்கு பறவைக்கரசு பட்டனென் இப்படிக்கு இ-வை பறவைக்கரசு பட்டன் எழுத்து இப்படிக்கு இவை வரதராச-ப்பட்டன் எழுத்து இவை சிங்கப் பெருமாள் எழுத்து - இப்படிக்கு - இவை நாராயண பட்டன் எழுத்து.

13. சுந்தரசண்முகனார், கெடிலக்கரைநாகரிகம் ப.441.

14. மாதவன், வே. இரா. தமிழில் தலபுராணங்கள், ப.5

15. மேலது, ப. 25.

16. சண்முகசுந்தரனார், கெடிலக்கரைநாகரிகம், ப.438

17. ராஜகோபாலன். டி, (படிக்கச் சொல்லிக்கேட்டவை) சிலாசாசனபரி சோதகர், திருவந்திபுரம்.

18. எத்திராஜன் ஆ, 108 வைணவதிவ்யதேச ஸ்தலவரலாறு, பக். 252-253.

19. அறவாணன் க.ப, மரவழிபாடு திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு ப. 31.

20. முத்துசாமி பிள்ளை, கோ.மு. கோயிற்களஞ்சியம் அறிமுகம், ப. 14.

21. ராஜகோபாலன். டி (சொல்லக்கேட்டவை) சிலாசாசன பரிசோதகர், திருவந்திபுரம்.

22. அறிவொளி. அ, பஞ்ச பூதத்தலவரலாறு. ப. 56.

23. சுப்புரமணியன் பெ பழனி முருகன் கோவிலும் தீர்த்தமும், ப.24.

24. பட்டினப்பாலை, 99-100.

25. ராஜகோபாலன்.டி. (படிக்கச் சொல்லிக்கேட்டவை) சிலாசாசன பரிசோதகர் திருவந்திபுரம்.

26. மேலது.

திருபுவனசக்ரவத்தி கொனெரின்மை கொண்டான் திருவயிந்திபுரத்து நாயனார் தெய்வநாயகன் (கொயில்) - தானத்தார்க்கு இக்கோயிலுக்கு திருப்பணி புறத்துக்கும் திருந்த வனபுறமுமாக விட்ட திரிபுவன மஹாதேவி சதுர்வேதி-மங்கலத்து தென்பிடாகை நடுவக்கரை பற்றில் விட்ட குணமங்கலத்தில் அகரப்பற்று பல தனத்தானம் உள்ளிட்ட இறையிலி நிக்கி-நான் கெல்லைக் குட்பட்ட நன்செய், புன்செய், புறவடைகாடுகளர்-ஏரிகுளம்; நீர்நிலை மாநவிலை நத்தமும் ஆலத்தூர் பலகனி பூ கானமுள்ளிட்ட- இறையிலி நீக்கி நான் கெல்லைக் குட்பட்ட நன்செய் புன்செய் புறவடைகாடு, களர் ஏரிகுளம் நீர்நிலைக்குட்பட்ட ஆதலான இன்னிலம் நான்கெல்-லைக்கு உட்பட்ட நிலம் 15க்கு எதிர் 3தை

மாதம் முதல் கார் பசானம், நவினர சித்திரைக்கார் கரும்பு, வரகு, கமுகு, தினை, எள்ளு, பருத்தி ஆமணக்கு-உள்ளிட்டுக் கொண்டு வேண்டும் பயிர் செய்து கொண்டு எவ்வகைப்பட்ட முதலீடு கொண்ட காசு, கடமை ஏரி, மீன்பாட்டம் வெட்டி நிலை ஆனகாத்திகைப் பொயான வரிபணி கடுகாத்து பாடிகாவல் ஊர்கணக்கப் பெறு சிகாரியப் பெறுஸந்நிவிக்ரஹப் பெருவாசல் வினியோகம் அபிஷேகக்காணி துலாபா-ரவரி கொற்று இலக்கை கடைக்கூட்டு இலக்கைத் தண்டலலக்கை, எண்ணைப் பந்தம் திருமுகச் சம்ப்ட்டி உள்ளிட்ட அனைத்து பாதியும் உட்பட முதலடங்க - திருவிடையாட்ட இறைஇலியாக வரியில் கழித்து இறையிலியாகதற்தொம் - இப்படிக்கு - சந்திராதித்தவர் செல்வதாக நான்கெல்லையும் திருவாழிக்கம்லும் நாட்டி கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்க (உ) துல்யம் இவை-கப்பலூருடையான் எழுத்தயாண்டு 13க்கு எதிர் (1க்கு) நாள் 204 இவை நெட்டுடையான் தெய்வத்திலை யான் இளையாழ் வானான காலிங்கராயனெழுத்து.

27. மேலது.

கரவருஷம் தையிமீ திருப்பணி கையிங்கரியம் மணம் - பெடுசெங்கொல்வறாம முதலியார் கார்யம் வழுதை நகர்-ர் றாமதாசன் குமாரன் வெங்-கடாசலதாசன் சதாசேர்வை.

28. மேலது.

14

சக்கரம் திருமண் சங்கு

(வடகலை)

CONSTRUCTION OF THIS MANDAPAM
AND RENOVATION OF THE WHOLE
HAYGRIVASWAMY TEMPLE
ON THIS HILL DONATED BY
SRI MUGNIRAM RAMKUMAR BANGUR
OF DIDWANA (MARWAR)
1961 - A D

29. மேலது.

சக்கரம் திருமண் சங்கு

(வடகலை)

ஸ்ரீ

ஸ்ரீதேவனாதஸ்சுவாமி ஸன்னதி திருப்பணி
ராஜகோபுரம் சின்ன கோபுரம் பதினாறுகால்
மண்டபம் இதுகள் கீலகமாய் இருந்ததை
புதுப்பித்து பூசுவேலைகள் முதலியதிருப்பணி
தர்மங்கள் ஷெ தேவஸ்தானம் மாஜி தர்மகர்த்தா
கூடலூர் O.T. கி - அழகானந்த முதலியாரால்
செய்யப்பட்ட கைங்கர்யம்
விரோரி ௵ தை மீ
1950 ௵ ஜனவரி மீ

30. மேலது

---

(வடகலை)

திருவகீந்திரபுரம்

ஸ்ரீதேவநாதஸ்வாமி தேவஸ்தானம்
ஸ்ரீ ரங்கம் பெரியாஸ்ரமம்
ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள் அவர்களால்
ரூ. 700-00 செலவில்
ஸ்ரீ ஆஞ்சனேயர் கோயில்
திருப்பணி செய்யப்பட்டது
பரிதாபி ௵ வைகாசி மீ 4 ம் நாள் (17.5.1972வ)

31. மேலது

சக்கரம் திருமண் சங்கு

(வடகலை)

ஹேமாம்புஜவல்லித்தாயார் சன்னதி திருப்பணி கைங்கர்யம் பூராவும் ரூ.15.000 செலவில் குருவிநத்தம் **K.S.** ராயல் ரெட்டியார் அவர்களால் செய்யப்பட்டது.

17.5.1972

32. மேலது.

சக்கரம் திருமண் சங்கு

(வடகலை)

திருவஹீந்திரபுரம்

ஸ்ரீ தேவநாதஸ்வாமி தேவஸ்தானம் தோட்டப்பட்டு திரு. ஆ.ஓ. பாலகிருஷ்ண ரெட்டியார் பாரியாள் மஹாலக்ஷ்மி அம்மாள் அவர்களால் ரூ.2500 செலவில் நான்குகால் மண்டபம் திருப்பணி செய்யப்பட்டது. பரிதாபி வருடம் வைகாசி மாதம் 4ம் நாள் (17.5.1972)

33. மேலது. ஸ்ரீதேவநாதஸ்வாமி திருப்பணிக்குழு

17.5.1972

லிப்கோ

ஸ்தாபனத்தாரால் ரூ.1000 சிலவில் இந்தபடிக்கட்டுகள் மராமத்து செய்யப்பட்டன.

34. அமிர்தலிங்கம் த. திருக்கோயில், செப்டம்பர் 1987 ப.12.

35. நீலமேகப்பட்டர் (சொல்லக்கேட்டவை) தலைமைப்பட்டர், திருவந்திபுரம் திருக்கோயில்.

................

# திருக்கோயில் அமைப்பு

## முன்னுரை

பல்லவர்கள் காலத்திலும் சோழர்கள் காலத்திலும் கோயில்கள் மிகச்சிறந்த நிலையினை அடைந்தன. ஒவ்வொரு காலத்திலும் கோயில் அமைப்பு படிப்படியான வளர்ச்சி பெற்றுத் திகழ்ந்தது. பல மன்னர்கள் மாறி மாறி அரசோச்சியதால் கோயில்களும் பல்வேறு விதமாக அமைந்தன. கோயில்கள் தற்போதுள்ள அமைப்பைப் பலநூறு ஆண்டுகளுக்குப் பின்பே பெற்றுள்ளன.

திருநாவுக்கரசர் ஏழுவகையான கோயில்களைக் குறிப்பிடுகிறார். ஆனால் தற்போது காணப்படும் கோயில்களில் பெரும்பாலானவை சோழர் கலைப்பாணியின்படி அமைந்தனவாகும் ''ஆலய வகைகளாக மூவகைகளை நூல்கள் கூறுகின்றன. இறைவனுக்கு மட்டும் கோயில் அமையும் பொழுது இது தேவாலயம் எனப்படும். இவ்வகைக் கோயில்கள் வட இந்தியாவிலேயே பெரும்பாலும் காணப்படுகின்றன. இறைவனுக்கும் தேவிக்குமாகக் கோயில் அமையும் பொழுது இது மிச்ராலயம் எனப்படும். பரிவாரங்களுடன் இறைவன் தேவி இருவருக்கும் அமையும் மூன்றாம் வகைக் கோயில் சங்கீர்ணாலயம் எனப்படும். இவ்வகைக் கோயில்கள் தென்னாட்டிலும் இலங்கையிலும் பெருகிக் காணப்படுகின்றன''[1]. இந்தியாவில் காணப்படும் கோயில்களை வரலாற்று அறிஞர்கள் நாகரம், வேஸரம், திராவிடம் என முப்பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்.

தென்னிந்தியக் கோயில்கள் திராவிடம் என்னும் பிரிவைச் சார்ந்தவையாகும். திருவந்திபுரம் தேவநாதசுவாமி கோயில் திராவிடக் கோயில் ஆகும்

''இந்தியாவில் உள்ளஸ்தலங்களைக் கீழ்க் கண்டவாறு வகைப்படுத்தலாம்.

1. ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்ட ஸ்தலங்கட்கு ''ஆர்ஷம்'' என்று பெயர்.

2. புராணங்களில் விரித்துரைக்கப்பட்ட ஸ்தலங்கட்கு பௌராணிகம் என்று பெயர்.

3. தானே தோன்றியவைகள் ''ஸ்வயம் வ்யக்தஸ்தலம்'' என்றும் அல்லது சைத்தம் என்றும் மொழிவர்.

4. பிரம்மாதி தேவர்களால் தவஞ்செய்து உண்டாக்கப்பட்டவைகளை தைவம் என்பர்.

5. மன்னர்களாலும் அடியார்களாலும் பிரதிட்டை செய்யப் பட்டவைகளுக்கு மானவம் என்பர்.

6. ஆச்சார்ய புருஷர்களால் அபிமானிக்கப்பட்டதை அபிமான ஸ்தலம் என்பர்''[2].

இத்தலம் பிரம்மாதி தேவர்களால் தவஞ் செய்து உண்டாக்கப்பட்ட தைவம் என்னும் வகையைச் சேர்ந்தது. இவ்வூர் கடலூரில் இருந்து 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்குச் செல்ல அடிக்கடி பேருந்து வசதிகள் உள்ளன.

திருவந்திபுரம் தேவநாதசுவாமிகோயில் 150 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இது இரண்டு

வாயில்களை உடையது. அவை கிழக்கு நோக்கியும் மேற்குநோக்கியும் காணப்படுகின்றன. பிரதானவாயில் கிழக்கு நோக்கிக் காணப்படும் வாயில் ஆகும்.

| எண் மண்டபம் | மடைப்பள்ளி | கருவறை |
|---|---|---|
| 1. மகாமண்டபம் | நித்தியப்படி | தேவநாத சுவாமி கருவறை |
| 2. அர்த்த மண்டபம் | விசேஷப்படி | தாயார் கருவறை |
| 3. நூற்றுக்கால் மண்டபம் | | இராமர் சன்னதி கருவறை |
| 4. நாலுகால் மண்டபம் | | தேசிகர் சன்னதி கருவறை |
| 5. பதினாலுகால் மண்டபம் | | நம்மாழ்வார் கருவறை |
| | | பள்ளிக்கொண்ட நாதன் கருவறை<br>அஹீந்திரபுரநாதன் கருவறை<br>லட்சுமி நரசிம்மர் கருவறை<br>திருமங்கையாழ்வார்<br>பாஷ்யகாரர்<br>குலசேகர ஆழ்வார்<br>திருப்பாணாழ்வார்<br>திருக்கச்சி நம்பிகள் |

## மண்டபம்

''கோயிலுக்குரிய அங்கங்களுள் மண்டபம் முக்கியமானதாகும். நான்குதூண்கள் முதல் ஆயிரம் தூண்கள் வரை கொண்ட மண்டபங்கள் உள்ளன.

கோயில்களில் குறைந்த அளவில் அர்த்த மண்டபமாயினும் மகாமண்டபமாயினும் இருத்தல் வேண்டும்''[3] என்பதால் மண்டபத்தின் தேவையை உணரலாம்.

## அர்த்தமண்டபம்

கருவறையை அடுத்து அதனுடன் தொடுத்தவாறு இருப்பது அர்த்தமண்டபமாகும். இம்மண்டபம் கருவறையை விட சிறிது பெரியதாகக் காணப்படுகிறது. இங்கு உற்சவமூர்த்தியோ வேறு உருவங்களோ இல்லை. இங்கு தூண்கள் இல்லை. இது சதுர வடிவு கொண்டது.

## மகாமண்டபம்

அர்த்த மண்டபத்தை அடுத்து இருப்பது இம்மண்டபம். இது அர்த்த மண்டபத்தை விட அளவில் பெரியது. செவ்வக வடிவினைக் கொண்டது. மகாமண்டபத்தில் நான்கு தூண்கள் பாதி வெளித்தெரியும் நிலையில் உள்ளன. இந்த தூண்களின் மேல் சிங்க உருவங்கள் காணப்படுகின்றன. மகாமண்டபத்தின் வாயிலின் இருபக்கமும் துவார பாலகர்கள் உள்ளனர். அவர்கள் கைகள் கதையை கீழே ஊன்றிய நிலையில் காணப்படுகின்றன.

## நாலுகால் மண்டபம்

நான்கு தூண்களுடன் காணப்படும் இம்மண்டபம் குறுமண்டபம் எனப்படும். இது விநாயகர் சிலைக்குப் பக்கத்தில் காணப்படுகிறது.

## முகமண்டபம் - (பதினாறு கால் மண்டபம்)

இரண்டு பக்கமும் படிகளுடன் முகப்பையொட்டி அமைந்துள்ள மண்டபம் ஆகும். மகாமண்டபத்தை அடுத்து முகமண்டபம் காணப்படுகிறது. வரிசைக்குப் பத்துத் தூண்கள் வீதம் இருவரிசைகளில் இருபது தூண்கள் உள்ளன. இம்மண்டபம் பழுதடைந்ததால் 16 கால்களுடன் இன்னும் நான்குகால்கள் நிறுத்தப்பட்டன இருப்பினும் இது பதினாறுகால் மண்டபம், திருவந்திக்காப்புமண்டபம், அபிஷேகமண்டபம், தீர்த்தவாரிமண்டபம் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது.

## நூற்றுக்கால் மண்டபம்

இதனை இயல்மண்டபம் என்று கூறுவர். இம்மண்டபத்தில் நூற்றுக்கால் மண்டபம் என்னும்படி நூறுகால்கள் இல்லை. ஆனால் இது நூற்றுக்கால் மண்டபம் என்று வழங்கப்படுகிறது. இது மேற்குவாயிலை அடுத்து இரண்டாம் திருச்சுற்று வாயிலுக்கும் முதல் திருச்சுற்று வாயிலுக்கும் இடையில் வடக்குபுறமாக அமைந்துள்ளது. ராஜகோபாலன் சன்னதி இங்கு அமைந்துள்ளது. இங்கு உற்சவகாலத்தில் தேவநாதனும், தாயாரும், தேசிகனும் வீற்றிருந்து சேவை சாதிப்பார்கள். இம்மண்டபத்தின் கீழ்ப் புறத்தில் தல மரமான வில்வமரம் காணப்படுகிறது. இப்படி ஐந்து மண்டபங்களுடன் இக்கோயில் திகழ்கிறது.

## மடைப்பள்ளி

இது இறைவனுக்குப் படைக்கப்படும் நைவேத்தியப் பொருட்கள் தயாரிக்கும் இடமாகும். இங்கு இரண்டு மடைப்பள்ளிகள் உள்ளன.

## நித்தியப்படி

இத்திருமடைப்பள்ளி சேஷதீர்த்தத்திற்கு கிழக்குப் பக்கம் மேற்குப் பார்த்து அமைந்துள்ளது. தினந்தோறும் இறைவனுக்குப் படைக்கப்படும் பொருள்கள் சேஷதீர்த்தத்தில் செய்யப்படுகின்றன. இங்கு ஒரு கோட்டை அடுப்பும் சாதாரண விறகு அடுப்பு ஒன்றும் காணப்படுகிறது. உணவுப் பொருளை ஆற வைப்பதற்காகவும், நைவேத்தியப் பொருட்களான புளியோதரை, தயிர்சாதம் போன்றவற்றைக் கிளறுவதற்காகவும் கருங்கல் பாறை ஒன்று காணப்படுகிறது. அதுமட்டுமன்றி கல் உரல் ஒன்றும், அம்மி ஒன்றும் உள்ளது.

## விசேஷப்படி

இங்கு விசேஷ நாட்களில் தளிகை செய்யப்படும். நூற்றுக்கால் மண்டபத்திற்கு அருகில் இம்மடைப்பள்ளி காணப்படுகிறது. இதன் எதிரில் கிணறு ஒன்று காணப்படுகிறது இங்கு ''ப'' வடிவ சமையல்மேடை காணப்படுகிறது. நின்றவண்ணம் சமைக்கும்படி ஓர் கோட்டை அடுப்பும் அமர்ந்தவாறு சமைக்கும்படி மற்றொரு கோட்டை அடுப்பும் காணப்படுகிறது. இங்கு

உணவு ஆறவைக்கப்பெரிய பாறை ஒன்றும் காணப்படுகிறது.

## கருவறை

''இந்தியக் கோயிலின் மிகமுக்கியப்பகுதி அதன் கருவறையே இதன் கூரைமீது அமைக்கப்படும் உயரமான அடுக்குகளை வடஇந்தியக் கோயிலில் சிகரம் அல்லது பிரஸாதம் என்றும் தென்னிந்தியக் கோயிலில் விமானம் என்றும் கூறுவர்''[4]. கோயிலின் முக்கியப்பகுதியான கருவறை சதுர வடிவமாக அமைந்துள்ளது. இங்கு உள்ள கருவறைகளிலே தேவநாதன் கருவறையே மிகவும் புகழ்பெற்றதும், வேலைப்பாடு நிறைந்ததுமாகும். கருவறையின் மேல் காணப்படும் விமானம் என்பது கலை நூல்களில் கருவறையின் அடிமுதல் முடிவரையான அமைப்பைக் சுட்டுகிறது. கருவறையின் வெளிப்புறச்சுவரில் தெய்வத்திருவுருவங்கள் இல்லை. கருவறையின் மேற்பகுதி அரைக் கோள வடிவில் காணப்படுகிறது. இதன் நான்கு மூலைகளிலும் நான்குசிங்க உருவங்கள் உள்ளன. இக்கோயில் விமானத்தின் பெயர் சுத்தசத்வ விமானம் என்பதாகும். ''பெரும்பாலும் வைணவத்தலங்களில் விமானத்தின் நான்கு மூலைகளிலும் கருட உருவங்களே இருக்கும். ஆனால் இத்திருத்தலத்திலும் திருப்பதி வெங்கடாசலபதி திருத்தலத்திலும் மட்டுமே விமானத்தின் நான்கு மூலைகளிலும் நான்கு சிங்க உருவங்கள் காணப்படுகின்றன''[5] விமானத்தின் நான்கு பக்கங்களிலும் நான்கு உருவங்கள் காணப்படுகின்றன. கிழக்குப்பக்கம் தேவநாதனும் தெற்குப்பக்கம்

தட்சிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர். மேற்குப்பக்கம் நரசிம்மமூர்த்தியை அனுமானும், பிரகலாதனும் தொழுதவாறு நிற்கின்றனர். வடக்குப் பக்கம் பிரம்மன் தாமரை மலரின் மேல் உள்ளார். இவை தவிரவேறு உருவங்கள் விமானத்தில் இல்லை.

கருவறையில் மூலமூர்த்தியாகிய தேவநாதன் வீற்றிருக்கிறார். இவர் மூவராகிய ஒருவராய்க் காட்சி தருகிறார். சிவபெருமானுக்கு உரிய நெற்றிக்கண், சடாமுடி ஆகியவற்றுடன், விஷ்ணுவிற்குரிய சங்கு சக்கரங்களுடனும் பிரம்மாவிற்குரிய தாமரை மலருடனும் காணப்படுகிறார். தேவநாதனின் இருபுறமும் மார்க்கண்டேயரிஷியும், பூமிதேவியும் தொழுதவண்ணம் உள்ளனர். தேவநாதன் கிழக்கு நோக்கிக் காணப்படுகிறார். கருவறையின் வடபுறத்தில் அபிடேகநீர் வெளியேற பிரநாளம் அமைக்கபட்டுள்ளது.

தாயார் சன்னதி கருவறை, தேசிகர் சன்னதி கருவறை. இராமர் சன்னதி கருவறை என்று பல தெய்வங்களுக்குக் கருவறைகள் தேவநாதனைவிடச் சிறிய அளவிலேயே அமைக்கப்பட்டுள்ளன. இவற்றிலும் விமானங்கள் காணப்படுகின்றன.

## திருச்சுற்று

"கோயில்களுக்கு அழகைத் தருவன பிரகாரங்கள் (திருச்சுற்றுகள்) ஆகும். கோயில்களின் பிரகாரங்கள் கோயிலைச் சுற்றித் திட்டமிட்டு அமைக்கப்படும்"[6]. கருவறை, பிரகாரங்களால் சூழப் பெற்றுள்ளதை ஆகமம் விரிவாகக் கூறுகிறது. கருவறையை அடுத்து முதல்

பிரகாரமும் அதனை அடுத்து இரண்டாம், மூன்றாம், நான்காம், ஐந்தாம் பிரகாரமும் காணப்படும்.

ஒரே பிரகாரமுடைய கோயில்களும் காணப்படுகின்றன. திருக்கோயிலில் வலம் வருவதற்குப் பயன்படுவது பிரகாரங்கள் ஆகும். வலம் வருவதை ''பிரதட்சணம்'' என்பர். பிரதட்சணம் என்பதற்கு இறைவன் ''அருளில் வீழ்தல்'' என்பது பொருளாகும். இக்கோயிலில் நான்கு பிரகாரங்கள் காணப்படுகின்றன. முதல் பிரகாரம் தேவநாதன் கருவறையை அடுத்துக் காணப்படுகிறது. இரண்டாம் பிரகாரம் தாயார் சன்னதியை அடுத்துக் காணப்படுகிறது. மூன்றாம் பிரகாரம் இராஜகோபாலன் சன்னதியை அடுத்தும் நான்காம் பிரகாரம் கோயிலை முழுமையாக உள்ளடக்கியும் காணப்படுகின்றன. கோயிலை வலம் வரும் போது முதலில் வெளிப்பிரகாரம் அதன் பின்பு அதற்கடுத்தது, என்றும் வலம் வருதல் வேண்டும்.

## கோபுரங்கள்

''கோபுரதரிசனம் கோடிப் புண்ணியம்'' என்பது முதுமொழி. தொலைதூரத்தில் உள்ளவரும் வானளாவ உயர்ந்துநிற்கும் கோபுரத்தைக் கண்ட மாத்திரத்திலேயே கோயிலில் உள்ள மூலவரைத் தரிசிக்கும் நினைப்புடன் வணங்கி மகிழ்வர். கோபுரம் என்பது கோயிலின் வாயிலை அலங்கரித்து நிற்கும் கட்டிடப்பகுதியாகும். இக்கோயிலில் இரண்டு கோபுரங்கள் உள்ளன. இவை பெரிய கோபுரங்கள் இல்லை. மேற்குப்புர வாயிலில் ஒரு கோபுரம் சற்று உயரமாக உள்ளது. அதற்கடுத்து

இரண்டாம் திருச்சுற்று வாயிலில் உள்ள கோபுரம், இது முற்கூறிய கோபுரத்தை விடச்சிறியது. இக்கோபுரங்கள் கோப்பெருஞ்சிங்கனால் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது, ''முதல் கோபுரம் 7 கலசங்களையும் அதற்கடுத்தகோபுரம் 5 கலசங்களையும் கொண்டுள்ளது. இக்கலசங்கள் சிமெண்ட்டினால் செய்யப்பட்டுள்ளன''[7]. ஏனெனில் செம்பினால் செய்த கலசங்கள் களவு போய்விட்டதாகக் கூறப்படுகிறது.

## விநாயகர் சன்னதி

இரண்டாம் பிரகாரம் முகமண்டபத்திலிருந்து ஆரம்பிக்கிறது. இதன் தென் மேற்கு மூலையில் விநாயகர் திருவுருவுடன் கூடிய சன்னதி காணப்படுகிறது. தெற்குச் சுவரிலும் மேற்குச்சுவரிலும் பல கல்வெட்டுக்கள் உள்ளன.

## சேனைமுதலியார் சன்னதி

இரண்டாம் பிரகாரத்தின் வடக்குத் திசையில் அதாவது கருவறைக்கு வடக்கில் தெற்குநோக்கிய நிலையில் சேனைமுதலியார் சன்னதி காணப்படுகிறது. சிவன் கோயிலில் காணப்படும் சண்டிகேஸ்வரர் போல விஷ்ணுகோயிலில் சேனை முதலியார் காவல் தெய்வமாகக் காணப்படுகிறார்.

## சேஷதீர்த்தம்

மூன்றாவது சுற்றின் தென்கிழக்கு மூலையில் சேஷதீர்த்தம் கிணறு உள்ளது. இதில் ஆதிசேடனின்

உருவம் உள்ளது. பக்தர்கள் வெல்லம், பால் இவைகளைக் கொண்டு ஆதிசேடனைவழிபாடு செய்வார்கள்.

## தாயார் சன்னதி

சேஷதீர்த்தத்திற்கு மேற்கே அதாவது கிழக்கு நோக்கிய நிலையில் தாயார் சன்னதி காணப்படுகிறது. இங்குள்ள தாயாரின் பெயர் செங்கமலத்தாயார் என்பதாகும். கர்ப்பகிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. தாயார் அமர்ந்தநிலையில் உள்ளார். இங்கு கொடிமரமும் பலிபீடமும் தனியாக இல்லை. உற்சவ மூர்த்தியும் கர்ப்பகிரகத்திலேயே காணப்படுகிறது.

## இராமர் சன்னதி

தாயார் சன்னதிக்கு வடக்குப் புறமாக தெற்கு நோக்கிய நிலையில் இராமர் சன்னதி காணப்படுகிறது. இது ஒரு திருச்சுற்றுள்ள கோயில். இதன் விமானம் அரைக்கோள வடிவம் கொண்டுள்ளது. இதில் ஒரு கலசம் காணப்படுகிறது. முகப்பில் இராமர், சீதை, இலக்குவன், அனுமான் போன்ற உருவங்கள் உள்ளன. இந்தக் கோயிலில் உள்ள கர்ப்பகிரகத்தில் மூலவராகிய இராமன் சீதை ஆகியோர்கள் உள்ளனர். இந்தக் கோயிலில் உற்சவ மூர்த்தி இங்கு இல்லை. தேவநாதசுவாமி ஆலயத்தின் வாயிலில் தெற்குப்பக்கம் வேணுகோபாலன் சன்னதியை அடுத்து இவ்உற்சவர் காணப்படுகிறார்.

## பள்ளி கொண்ட பெருமாள் சன்னதி

இராமர் சன்னதிக்கு அடுத்து உள்ளது. இந்தப்பள்ளி கொண்ட பெருமாள் சன்னதி. இங்கு பெருமாள் பள்ளி கொண்ட நிலையில் உள்ளார். கிழக்குப் பக்கமாகக் காணப்படுகிறது. பெருமாள் பக்கத்தில் ஸ்ரீதேவியும், பூதேவியும் அமர்ந்தநிலையில் உள்ளனர்.

## ஆண்டாள் சன்னதி

பள்ளி கொண்ட பெருமாள் சன்னதியை ஒட்டியே ஆண்டாள் சன்னதி உள்ளது. இந்த சன்னதி தெற்கு நோக்கிக் காணப்படுகிறது.

## நம்மாழ்வார் சன்னதி

ஆண்டாள் சன்னதியை அடுத்து நம்மாழ்வார் சன்னதி காணப்படுகிறது. இது தெற்கு நோக்கிக் காணப்படுகிறது.

## தேசிகர் சன்னதி

"நம்மாழ்வார் சன்னதியை அடுத்து தேசிகர் சன்னதி உள்ளது. இங்கு காணப்படும் தேசிகர் சிலை அவராலே செயயப்பட்டது என்று கூறுகின்றனர்"[8] தேவநாத சுவாமிக்கு அடுத்து இங்குதனியாகக் கொடிமரம் உள்ளது. இங்குதான் கண்ணாடி அறை அமைந்துள்ளது.

## அஹீந்திரபுரநாதன் சன்னதி

கிழக்குச் சுவரின் மேற்கு நோக்கிய நிலையில் யாகசாலையின் பக்கத்தில் அஹீந்திரபுரநாதன் சன்னதி உள்ளது. ஆதிசேடன் மீது காலை உயர்த்தியவாறு அமைந்துள்ள வைகுண்ட வாசனாக இங்கு உள்ளார்.

## ஆழ்வார்கள் சன்னதிகள்

அஹீந்திரபுரநாதன் சன்னதியை அடுத்து ஆழ்வார்கள் சன்னதிகள் அமைந்துள்ளன. முதலில் திருமங்கைஆழ்வார் சன்னதி, பாஷ்யகாரர் குலசேகர ஆழ்வார், திருப்பாணாழ்வார், திருக்கச்சிநம்பிகள் ஆகியோரது சன்னதிகள் உள்ளன. இவை அனைத்தும் மேற்கு நோக்கிக் காணப்படுகின்றன.

## லட்சுமி நரசிம்மன் சன்னதி

கிழக்குப்புற வாயிலுக்கு இடப்புறமாக லட்சுமிநரசிம்மன் சன்னதி உள்ளது. இங்கு லட்சுமி, நரசிம்மனின் வலப்புறம் காணப்படுகிறாள்.

## கருடன்

தேவநாதசுவாமியைப் பார்த்தவண்ணம் கருடாழ்வார் நின்றவாறு காணப்படுகிறார். இவருக்கு சிறிய சன்னதி உள்ளது. கருடாழ்வாரின் கழுத்தில் ஆதிசேடன் மாலை போலக் காட்சி தருகிறார்.

## கொடிமரம்

கொடிமரத்தை துவஜஸ்தம்பம் என்பர். "33 கணுக்களையுடையதாய் உச்சியில் 3 திருஷ்டிப் பலகைகளையுடையதாய் விழாக்காலத்தில் கொடி ஏற்றப்படுவதாய் உள்ள கொடிமரமே கொடிக்கம்பமாகும் என்பர்"[9] இக்கோயிலின் கொடிமரம் கருடனுக்கு அருகில் உள்ளது. இது 5 பாகங்களைக் கொண்டது. 1 பாகம் 20 கஜம் அளவு கொண்டது. இக்கொடிமரம் தாமிரத் தகட்டினால் மூடப்பட்டு தங்கமுலாம் பூசப்பட்டுள்ளது. கொடிமரத்தின் அடியில் நான்கு பக்கங்களிலும் நான்கு உருவங்கள் உள்ளன. தெற்கு பக்கம் சக்கரமும், வடக்குப்பக்கம் சங்கும் மேற்கு பக்கம் கருடனும், கிழக்குப் பக்கம் திருநாமமும் காணப்படுகிறது. அம்மரத்தின் கொடியில் கருடன் காணப்படுகிறது.

## பலிபீடம்

கொடிமரத்தை அடுத்து பலிபீடம் காணபடுகிறது. இங்கு பெரிய பலிபீடம் ஒன்றும் அதன் கீழ் சிறிய பலிபீடம் ஒன்றும் காணப்படுகிறது. இந்த பலிபீடத்தில் இந்திரன், அக்னி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் போன்றோர் காணப்படுவர். அபிடேகம் செய்த நிவேதனங்களை இங்கு வைத்துத்தான் இறைவனுக்குப் பலியிடுவார்கள் "தாமரைப்பூவை எடுத்து அதன் இதழ்களைக் கீழ்நோக்கி அமைத்து நடுப்பகுதியான பொகுட்டு வெளியில் தெரியும்படி வைத்தாற்போன்ற தோற்றமுடையது பலிபீடம்"[10] ஆகும். இதன் மூலம் பலிபீடத்தின் சிறப்பினை அறியலாம்.

## வேணுகோபாலன், இராமர், சக்கரத்தாழ்வார் சன்னதி

தேவநாதன் கோயிலின் வாயிற்புறத்தில் வலது பக்கம் வேணுகோபாலன், இராமர் உற்சவமூர்த்தி சக்கரத்தாழ்வார் போன்றோர் சன்னதிகள் உள்ளன. இவை கிழக்குப் பக்கமாகக் காணப்படுகின்றன.

## வாகனங்கள் அறை

ராஜகோபாலன் சன்னதியை அடுத்தும் மூலஸ்தானத்தின் இடது புறம் வடமேற்குத் திசையில் வாகனங்கள் வைக்கும் அறை காணப்படுகிறது. இங்கு தங்க முலாம் பூசப்பட்ட கருடவாகனம், மரத்தினால் ஆன நாகவாகனம், தங்க முலாம் பூசப்பட்ட அனுமந்தவாகனம், வெள்ளியினால் செய்த சிம்மவாகனம், குதிரை வாகனம் மரத்தினால்ஆன ஹம்சவாகனம், யானைவாகனம் போன்றவையும், தங்க மூலாம் பூசப்பட்டபல்லக்கு ஒன்றும் காணப்படுகிறது.

## பள்ளி அறை

பள்ளியறை என்பது தெய்வங்கள் சேவை நடைபெறுமிடமாகும். இங்கு மூலஸ்தானத்தின் இடதுபுறம், வடக்குத்திசையில் பள்ளி அறை காணப்படுகிறது. இப்பள்ளியறை திருவாடிப்பூரத்தில் திறக்கப்படும். பெருமாள் மற்றும் ஆண்டாள் பள்ளியறை சேவை திருவாடிப்பூரம் தினத்தில் மட்டும் நடைபெறும். மற்றையதினம் அந்தந்த மூலஸ்தானத்தில் பள்ளியறை சேவை நடைபெறும்.

## அனுமான் சன்னதி

இக்கோயிலின் தென்புறம் மலையடிவாரத்தில் இந்தசன்னதி காணப்படுகிறது. அதாவது கிழக்கு வாயிலின் தெற்குபுறமாக வடக்குநோக்கி அமைந்துள்ளது. இந்த சன்னதியில் விமானம் இல்லை. மண்டப அமைப்பைக் கொண்டுள்ளது. உள்ளே சென்று வெளிவர வழி இருக்கிறது. இச்சன்னதியின் இடப்புறம் திருப்பணி செய்தவர் பற்றிய கல்வெட்டு காணப்படுகிறது.

## ஔஷதமலை

இதனைத் திருமலை என்று குறிப்பிடுவர். இது பெரியமலை அன்று. 75 படிகளைக் கொண்டது இம்மலை. கோயிலின் கிழக்குத்திசையில் இது காணப்படுகிறது. இதன் அடிவாரத்தில் தேவநாதன் ஆலயம் உள்ளது. இந்த மலையில்தான் ஹயக்ரீவர் என்று அழைக்கப்படும் பரிமுகப்பெருமாள் சன்னதி அமைந்துள்ளது. "இங்கு வேதாந்த தேசிகர் ஹயக்ரீவ தோத்திரம் கண்டார் என்று கூறுகின்றனர்"[11]. இங்கு ஒரு தபோ மண்டபம் காணப்படுகிறது. இங்குதான் ஹயக்ரீவருக்கு முதன் முதல் கோயில் ஏற்படுத்தப்பட்டது என்பர். கருவறை அர்த்தமண்டபம் போன்ற பலமண்டபங்களும் பல சன்னதிகளும் கொண்டு இவ்வாலயம் சிறந்து விளங்குகிறது. வைணவத் தலங்களில் இவ்வாலயம் சிறப்புப் பெற்று விளங்குகிறது.

## சிற்பங்கள்

சங்க காலத்திலிருந்தே வளர்ந்து வந்த நுண்கலைகளுள் சிற்பக்கலையும் ஒன்றாகும். பழங்காலம் முதல் இன்றுவரை சிற்பக்கலை போற்றப்பெறுவதற்கு அதன் கலைச்சிறப்பே காரணமாகும். திவாகர நிகண்டு சிற்ப உருவங்கள் செய்வதற்கான பொருள்களை விரிவாக எடுத்துரைக்கிறது. கலையுணர்வும் சமயப்பற்றும் கொண்ட மன்னர்களும், மக்களும் தமிழகத்தின் பல பகுதிகளில் கவின்மிகுசிற்பங்கள் கொண்ட கோயில்கள் பலவற்றை எழுப்பியுள்ளனர். கால வெள்ளத்தில் பேரரசுகள் மாறினாலும் அவர்கள் காலத்தில் தோன்றிய சிற்பங்கள் அழிவதில்லை. தமிழகத்தின் மீது ஆட்சி செலுத்திய பல்லவர், பாண்டியர், சோழர் போன்றோருடைய காலச் சிற்பங்கள் கோயில்களின் கலைப் பொக்கிஷமாகத் திகழ்கின்றன. தேவநாதசுவாமி கோயிலிலும் பலசிற்பங்கள் காணப்படுகின்றன.

தேவநாதன் கருவறையினை அடுத்து மகாமண்டபத்தின் வாயிலில் இரண்டு பக்கமும் காவல் காக்கும் துவார பாலகர்கள் சிற்பங்கள் நின்றநிலையில் உள்ளன. இவற்றிற்கு நான்கு கைகள் காணப்படுகின்றன. வலதுபுறச் சிற்பத்தின் இடது கையிலும், இடப்புறச் சிற்பத்தின் வலது கையிலும் கதைகள் ஊன்றிய நிலையில் காணப்படுகின்றன. மேல் இரண்டு கைகளில் சங்குசக்கரம் வைத்துள்ளன. ஒரு கைவிரல் மடித்த வண்ணம் காணப்படுகிறது. இவைகள் தலையில் கிரீடமும் நெற்றியில் அழகிய நாமமும் தரித்துள்ளன.

தாயார் கருவறையின் வெளிப்புறச்சுவரில் கண்ணனின் பல லீலைகள் கல்லில் மிகவும் அழகாகவும், நேர்த்தியாகவும் செதுக்கப்பட்டுள்ளன. புல்லாங்குழல் ஊதும் வேணுகோபாலன் உருவமும் காளிங்கன் தலையில் நடனமாடும் உருவமும் வெண்ணைதிருடி உண்ணும் உருவமும் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இச்சன்னதியின் கருவறை மண்டபத்தின் வாயிலில் இரண்டு துவார பாலாகர்கள் சிற்பங்கள் காணப்படுகின்றன இவை பெண்வடிவு கொண்டுள்ளன.

நூற்றுக்கால் மண்டபத்தூண்களில் பலசிற்பங்கள் காணப்படுகின்றன. கண்ணனின் பலவகையான லீலைகள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இங்கு உள்ள சில தூண்களின் அடிப்பகுதி சிங்கத்தின் மேல் நிற்பது போன்று காணப்படுகின்றது. சிங்கத்தின் கால்கள் பின்னோக்கி உட்கார்ந்த நிலையில் உள்ளன. சிலதூண்களின் நான்கு பக்கங்களிலும் ஏழு அடுக்குகளாகப் பலவகையான சிறியதூண்களைச் செதுக்கியுள்ளனர். சிங்க உருவம் அந்தத்தூண்களின் மூலைகளில் காணப்படுகிறது. நடுவில் கருவறை போன்ற அமைப்பினில் உருவம் ஒன்று காணப்படுகிறது. அதன் மீது வெள்ளை பூசப்பட்டிருப்பதால் அதனைச் சரியாகக் காணமுடியவில்லை. இவையே இங்கு காணப்படும் அழகிய சிற்பங்கள். இவை காண்போர் மனதைக் கொள்ளை கொள்ளும் இயல்புடையவை யாகும்.

# திருவுருவ அமைதி

திருக்கோயில்களில் முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கருதப்படுவது திருவுருவங்களே ஆகும். கோயிலை நிருமாணிப்பதற்கு இலக்கணம் உள்ளது போன்று கோயில்களில் திருவுருவங்களை அமைப்பதற்கும் விதிகள் உள்ளன. இவ்விதிகளின்படி அமைப்பதே சிறப்பு. இவற்றை சிற்பநூல்கள் விரிவாக எடுத்துக்கூறுகின்றன. எந்தெந்தத் திருவுருவத்தை எப்படி அமைக்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளனரோ அவ்வாறு அமைக்க வேண்டும். மனிதவாழ்வு செம்மையாக அமைய உருவவழிபாடே சிறந்தது என்பர். "நன்மைகளை மக்கள் அடையும் பொருட்டுக் கூறப்படும் விதிமுறைகளில் மிக அடிப்படையானதும் இரகசியமானதுமாகக் கருதப்பட்டு வழிவழியாகக் கடைபிடித்து ஒழுகப்படும் விதி ஆயாதிஇலக்கண விதியாகும். இவ்விலக்கணத்திற்கு இணங்க அமைத்து வழிபடப்படும் படிமங்களும், கட்டப்படும் கோயில்களும் இல்லங்களும் நிறைந்த செல்வத்தையும் மிகுந்த சிறப்பையும் நல்குமென்று நூலாசிரியர் கூறுவர். எனவே கட்டடங்களைக் கட்டினாலும் படிமங்களைச் சமைத்தாலும் அதற்காக நம் இதயத்தின் அடித்தளத்தில் அரும்புகின்ற நோக்கம் நிறைவேறவே ஆயாதி இலக்கணம் தக்கதொரு வழிவகுத்துக் கொடுக்கிறது"[12] என்பதன் மூலம் திருவுருவங்கள் எப்படி அமைக்க வேண்டும் என்பதை நன்கு அறியலாம். எனவே திருவுருவப்படிவம் சமைப்பதென்பது மிகவும் கவனமாக மேற்கொள்ளவேண்டிய செயலாகும்.

## மூலஸ்தானங்கள்

ஒவ்வொரு கோயிலிலும் மூலஸ்தானம் என்பது முக்கிய இடம் வகிக்கிறது. இதேபோன்று இங்குள்ள கோயிலில் மூலஸ்தானங்கள் காணப்படுகின்றன. இறைவனின் திருவுருவங்கள் காணப்படும் இடம் மூலஸ்தானம் எனப்படும். தேவநாதன் செங்கமலத்தாயார். பள்ளிகொண்டபெருமாள், தேசிகர் போன்றோருக்கு மூலஸ்தானங்கள் காணப்படுகின்றன. இங்கு ஓரிடத்தில் உள்ள தெய்வம் மற்றொரு இடத்தில் இல்லை.

## தேவநாதன்

இங்கு இவர் அச்சுதன், ஸ்திரசோதி, மேஷசோதி, மூவராகியமூர்த்தி, அடியவர்க்கு மெய்யன், தெய்வநாயகன், தாசசத்தியன் முதலிய பல திருநாமங்களைப் பெற்றுள்ளார். மூலஸ்தானத்தில் தேவநாதன் நின்றநிலையில் காணப்படுகிறார். திருமால் இங்கு நின்ற, கிடந்த, இருந்த ஆகிய மூன்று நிலையில் காட்சியளிப்பது சிறப்பு வாய்ந்ததாகும். தேவநாதன் நின்ற நிலையிலும், பள்ளிகொண்ட பெருமாள் கிடந்த நிலையிலும், அஹீந்திரபுரநாதன் இருந்த நிலையிலும் வீற்றிருக்கின்றனர். தேவநாதன் இங்கு மூவராகிய மூர்த்தியாகக் காட்சி தருகிறார். இருபுறமும் பூமிதேவியும், மார்க்கண்டேயரிஷியும் காணப்படுகின்றனர். ''தேவநாதன் நெற்றியில் சிவபெருமானுக்கு உரிய நெற்றிக்கண்ணும், சடாமுடியும் உள்ளது. விஷ்ணுவிற்கு உள்ள சங்குசக்கரம் காணப்படுகிறது. பிரம்மாவிற்கு இருப்பதைப் போன்று கையில் தாமரை மலரும் உள்ளது.

தேவநாதன் திருப்பதி வெங்கடாசலபதிக்கு தலைமையனாவார் என்கின்றனர். இவர் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழிலையும் செய்யும் மும்மூர்த்தியாக விளங்குகிறார் என்பர்''[13] இதனைக் கொண்டு தேவநாதன் என்னும் பெயர் விளக்கத்தை அறியலாம்.

## விநாயகர்

கருவறையின் உட்சுற்றில் தென்மேற்குமூலையில் விநாயகர் சிலை காணப்படுகிறது. இவர் உட்கார்ந்த நிலையில் உள்ளார். யானை முகத்தையும் மனித உடலையும் பெற்றுள்ளார். இந்தச் சிற்பம் 14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்கின்றனர்.

## சேனைமுதலியார்

கருவறையின் வடபுறம் தெற்கு நோக்கிய நிலையில் சேனை முதலியார் உள்ளார். இவர் உட்கார்ந்த நிலையில் உள்ளார். இவருக்கு நான்கு கைகள் காணப்படுகின்றன. மேல்கைகள் இரண்டிலும் சங்குசக்கரம் உள்ளது. கீழ்க்கைகளில் ஒன்று பிரம்பையும் மற்றொருகை அபயஹஸ்தமாகவும் காணப்படுகிறது. இவரை விஷ்வக்சேனர் (Divine commander) என்பர்.

## தாயார் செங்கமலவல்லி

சேஷதீர்த்தத்தின் எதிரில் கிழக்கு நோக்கிய நிலையில் தாயார் காணப்படுகிறார். கருவறையில் தாயார் அமர்ந்த நிலையில் உள்ளார். நான்கு கைகள் உள்ளன.

மேல் இரண்டுகைகளில் தாமரைமலர்கள் உள்ளன. கீழ் இரண்டுகைகள் அபய ஹஸ்தம், வரதஹஸ்தமாக உள்ளன. இவர் அம்பருகவாசகி, தரங்கமுகநந்தினி, பார்கவி என்றும் அழைப்படுகிறார். கல்வெட்டுக்களில் அலைவாய் உகந்தபெருமாமகள் என்று அழைக்கப் படுகிறார்.

## இராமர்

இராமர் சன்னதியின் கருவறையில் இராமன், இலக்குவன், சீதை ஆகியோர் நின்றவண்ணம் உள்ளனர். அனுமான் இவர்களைத் தொழுதவண்ணம் காணப்படுகிறார்.

## பள்ளி கொண்ட பெருமாள்

பள்ளி கொண்ட பெருமாள் தெற்கே தலைவைத்து வடக்கே கால் நீட்டிய வண்ணம் அறிதுயில் கொண்டிருக்கிறார். இவருக்கு நான்கு கைகள் உள்ளன. மேல் இரண்டு கைகளில் சங்குசக்கரம் வைத்திருக்கிறார். கீழ் வலக்கையைத் தலைக்கு உறுதுணையாக வைத்துள்ளார். கீழ்இடக்கையை தன் மேனியின்மேல் நீட்டி வைத்துள்ளார். ஆதிசேடனின் மேல் படுத்துள்ளார். ஆதிசேடன் தன்படத்தால் குடைபோன்று விரித்துள்ளான். காலின் அருகே ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோர் உட்கார்ந்த வண்ணம் கால்களைப் பிடித்துப் பெருமாளுக்குப் பணிவிடை செய்வது போன்றுள்ளனர்.

## ஆண்டாள்

ஆண்டாளுக்கே உரிய குந்தளக் கொண்டையுடன் நின்றநிலையில் உள்ளார். இவர் வலது கையில் பத்மம் உள்ளது. இடதுகை கீழ்நோக்கியவாறு அமைந்துள்ளது. இவ்விக்ரகம் பழமையானது.

## நம்மாழ்வார்

இங்கு இரண்டு நம்மாழ்வார் சேவை சாதிக்கின்றனர் கைகூப்பிய வண்ணம் உள்ள நம்மாழ்வார் மூலவர், உற்சவர் ஞானமுத்திரையுடையவராய்க் காணப்படுகிறார்.

## தேசிகர்

தேசிகர் தெற்கு நோக்கிய வண்ணம் உட்கார்ந்த நிலையில் உள்ளார். இரண்டு கைகள் காணப்படு கின்றன. வலதுகை அபயஹஸ்தமாக உள்ளது. இடது கையில் புத்தகம் வைத்துள்ளார். இங்கு மூலவர் உற்சவர் என இருவர் உள்ளனர். இது பஞ்ச உலோகத்தால் செய்யப்பட்டது.

## அஹீந்திரபுரநாதன்

இங்கு அஹீந்திரபுரநாதன் இருந்தநிலையில் உள்ளார் தலையின்மேல் ஆதிசேடன் தன்படத்தை விரித்துள்ளார். நான்கு கைகள் உள்ளன. இரண்டு கைகள் சங்கு சக்கரம் வைத்துள்ளன. அபயஹஸ்தம், வரதஹஸ்தமாக இரண்டு கைகள் உள்ளன.

## திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் நின்றநிலையில் உள்ளார். வேலைத் தனது இடது தோளின்மீது சாய்த்தபடி இருகைகளையும் கூப்பிய வண்ணம் உள்ளார்.

## பாஷ்யகாரர்

பாஷ்யகாரர் கையில் திருத்தண்டு வைத்துள்ளார். அமர்ந்தநிலையில் காணப்படுகிறார்.

## குலசேகர ஆழ்வார்

இவர் நின்றநிலையில் கைகூப்பிய வண்ணம் உள்ளார்.

## திருப்பாணாழ்வார்

இவ்வாழ்வார் நின்றவண்ணம் கைகூப்பி இறைவனைத் தொழுவதுபோல் உள்ளார்.

## திருக்கச்சிநம்பிகள்

நின்றவாறு இறைவனைத் தொழுகின்றார்.

## லட்சுமிநரசிம்மர்

இவர் உட்கார்ந்த நிலையில் உள்ளார். வலத்தொடையில் லட்சுமி உள்ளார். நான்கு கைகள் உள்ளன. வலது கையால் அம்பாளை அணைத்த

வண்ணம் உள்ளார். மேல் இரண்டு கைகளில் சங்கும், சக்கரமும் காணப்படுகின்றன.

## கருடன்

கருடன் நின்ற நிலையில் இறைவனைத் தொழுத வண்ணம் உள்ளார். உடம்பினில் ஆதிசேடனை மாலையாக அணிந்துள்ளார்.

## வேணுகோபாலன்

நான்கு கரங்களில் மேற்கரங்களில் சங்கு சக்கரம் ஆகியவற்றை ஏந்தியும் கிழ்க்கரங்களில் குழலைப் பிடித்து வாய்வைத்து ஊதுதல் போன்றும் இடக்காலையூன்றி வலக்காலை நளினமாக மடக்கி இடக்காலின் குறுக்கில் ஊன்றியிருப்பது போன்றுள்ளது. இத்திருவுருவத்தின் இருபுறமும் இராதை ருக்குமணி என்னும் இரு தேவியர் உள்ளனர்.

## சக்கரத்தாழ்வார்

இது மிகவும் பழமையானது தாமரைமலர் பீடத்தின் மேல் அமைந்துள்ளது.

## இராஜகோபாலன்

ஆயர்பாடியில் குழலூதும் ராஜகோபாலனாகக் காட்சியளிக்கிறார். இவ்விறைவனுக்குக்கீழே திருவடிக்கருகில் பசுமாடும் கன்றுக்குட்டியும் உள்ளன. அவற்றை மேய்ப்பது போல சுவாமியின் வலக்கையில்

சாட்டையும் இடக்கை வளைந்தும் காணப்படுகிறது. கழுத்தில் கண்டாபரணமும், பதக்கமும், பூணூலும், கால்களில் தண்டையும், கைகளில் பாஜீபந்தும் அமைந்துள்ளன. இவ்விறைவன் இருதேவியருடன் காணப்படுகிறார்.

## அனுமான்

இங்கு அனுமான் இறைவனை வணங்குவது போன்று இருகைகளைக் கூப்பிக் காணப்படுகிறார்.

## ஹயக்ரீவர்

இவரைத் தமிழில் பரிமுகப்பெருமாள் என்பர். இவர் அமர்ந்தநிலையில் உள்ளார். தலை குதிரையின் முகமாக உள்ளது. உடல் தேவ உடல் ஆகும். இவரது இடது தொடையின் மீது லட்சுமி அமர்ந்த நிலையில் உள்ளார். உற்சவ மூர்த்தி பஞ்சலோகச்சிலையாகும். இரண்டு கைகளிலும் சங்கு சக்கரம் காணப்படுகிறது. வலது கையில் வியாக்கியான ஹஸ்தமும் இடது கையில் சுவடியும் வைத்துள்ளார். இவர் அமர்ந்தவண்ணம் உள்ளார்.

## உற்சவப்படிமங்கள்

இவ்வுற்சவப்படிமங்கள் உலோகத்தால் ஆனவை. இவைதிருவிழாக் காலங்களில் திருவீதியுலாவிற்கு எடுத்துவரப்படுகின்றன. மற்ற நாட்களில் இவை கருவறையிலே வைக்கப்பட்டிருக்கும் இவ்வுற்சவப்

படிமங்கள் செப்புச் சிலைகளாகவும், பஞ்சலோகச் சிலைகளாகவும் காணப்படும்.

"உலோகப் படிமங்களில் கீழ்க்கண்ட ஐந்து வகையான உலோகங்கள் சேர்க்கப்படுகின்றன. 1. செம்பு, 2. பித்தளை, 3. ஈயம், 4. வெள்ளி, 5. தங்கம் இவ்வைந்தும் சேர்ந்த கலவைக்கு பஞ்சலோகம் அல்லது பஞ்சதாது என்று பெயர். இவ்வைந்து உலோகங்களில் தங்கம் வெள்ளி ஆகியவை மிகச் சிறிய அளவிலேயே சேர்க்கப்படும் இறைவன் பஞ்சபூத ஸ்வரூபமாகவே உள்ளான் என்றும், எனவே பஞ்சலோகங்கள் பஞ்ச பூதங்களை உணர்த்துவன என்றும் இதற்குத் தத்துவ விளக்கம் சொல்லப்படுகிறது"[14].

இக்கோயிலில் தேவநாதன், பூதேவி, ஸ்ரீதேவி, இராமன், சீதை, லட்சுமணன், அனுமான், வேணுகோபாலன், ருக்குமணி, சத்தியபாமா, சேனைமுதலியார், சக்கரத்தாழ்வார், காலிங்கமர்த்தன கிருஷ்ணன், கருடன், செங்கமலத்தாயார், ஆண்டாள், நம்மாழ்வார், தேசிகர், திருமங்கையாழ்வார், பாஷ்யகாரர், குலசேகரர் ஹயக்ரீவர் போன்ற படிமங்கள் செம்பாலும் வெண்கலத்தாலும் ஆனவையாகும். இவ்வுற்சவப் படிமங்கள் மூல விக்ரகங்களைப்போன்றே அளவுடையனவாகச் செய்யப்பட்டுள்ளன. ஆடைகள், ஆபரணங்கள் போன்றவை அழகாக அமைக்கப் பட்டுள்ளன. இங்கு உள்ளது போன்றே உற்சவத் திருமேனிகள் மற்ற கோயில்களிலும் சிறப்புப் பெற்று விளங்குகின்றன.

## தொகுப்புரை

மகாமண்டபம், அர்த்தமண்டபம், நூற்றுக்கால் மண்டபம், நாலுகால் மண்டபம், பதினாறுகால் மண்டபம் என ஐந்து மண்டபங்களை இங்குக்காணலாம். நித்தியப்படி, விசேஷப்படி என இரண்டு மடைப்பள்ளிகள் உள்ளன தேவநாதன், தாயார், இராமன், தேசிகர் மற்றும் உள்ள பிற தெய்வங்களுக்கும் கருவறைகள் உள்ளன. அவற்றில் தேவநாதன் கருவறையே அளவில் பெரியது. இக்கோயிலுக்கு அழகைத் தருவன இங்குள்ள நான்கு பிரகாரங்கள் ஆகும். தாயார் சன்னதியிலும், நூற்றுக்கால் மண்டபத்திலும் பல வகையான சிற்பங்கள் காணப்படுகின்றன.

இறைவனின் திருவுருவங்களை ஆயாதி இலக்கணப்படி அமைப்பதே சிறப்புடையதாகும்.

இறைவனின் திருவுருவங்கள் அதாவது மூலப்படிமம் இருக்கும் இடம் மூலஸ்தானம் எனப்படும். தேவநாதன், செங்கமலவல்லி, இராமன், பள்ளி கொண்ட பெருமாள் போன்றோருக்கு மூலஸ்தானம் காணப்படுகிறது.

உற்சவப்படிமங்கள் என்பது திருவிழாக்காலங்களில் உலாவருவதற்காக அமைக்கப்பட்டவையாகும். இவை பஞ்சலோகத்தால் அமைக்கப்படும். இங்கு தேவநாதன், பூதேவி, ஸ்ரீதேவி, தேசிகர், இராமன், சீதை, இலட்சுமணன், ஆழ்வார்கள், ஹயக்ரீவர் போன்றவர்களுக்கு உற்சவப்படிமங்கள் உள்ளன.

| எண் | மூலவிக்ரகங்கள் | மற்றைய தெய்வங்கள் |
|---|---|---|
| 1. | தேவநாதன், பூதேவி, மார்கண்டேயர் | லட்சுமி நரசிம்மன் ஆண்டாள் சக்கரத்தாழ்வார் |
| 2. | செங்கமலவல்லி | அனுமான் |
| 3. | இராமன், சீதை, இலட்சுமணன் | விநாயகர் |
| 4. | பள்ளி கொண்ட பெருமாள் | சேனைமுதலியார் |
| 5. | தேசிகர் | பாஷ்யகாரர் |
| 6. | நம்மாழ்வார் | திருக்கச்சிநம்பிகள் |
| 7. | ஹயக்ரீவர் | ராஜகோபாலன் |
| 8. | அஹீந்திரபுரநாதன் | வேணுகோபாலன் கருடன் |

## சான்றெண் விளக்கம்

1. நாகப்பாநாச்சியப்பன், திருக்கோயில் வழிபாடு, ப.15.
2. எத்திராஜன் ஆ. 108 வைணவ திவ்யதேசஸ்தல வரலாறு. பக். 19-22.
3. முத்துசாமி பிள்ளை கோ.மு. கோயிற்களஞ்சியம் அறிமுகம் ப. 103.
4. வெங்கட்ராமன். ஆர், இந்தியக் கோயில் கட்டிடக்கலை வரலாறு, ப.107.
5. ராஜகோபாலன் டி. (சொல்லக்கேட்டவை) சிலாசாசன பரிசோதகர், திருவந்திபுரம்

6. முத்துசாமிபிள்ளை கோ.மு. கோயிற்களஞ்சியம் அறிமுகம் பக். 102 - 103.
7. ராஜகோபாலன் டி. (சொல்லக் கேட்டவை) சிலாசாசன பரிசோதகர் திருவந்திபுரம்.
8. மேலது.
9. நாராயண வேலுப்பிள்ளை எம். தெய்வீகக் கதைகளும் கலைகளும் ப. 159.
10. மேலது. ப. 159
11. ராஜகோபாலன் டி. (சொல்லக்கேட்டவை) சிலாசாசன பரிசோதகர் திருவந்திபுரம்.
12. கணபதி வை. சிற்பச்செந்நூல், ப. 25.
13. ராஜகோபாலன்.டி, (சொல்லக்கேட்டவை) சிலாசாசன பரிசோதகர், திருவந்திபுரம்.
14. கணபதி.வை, சிற்பச்செந்நூல், ப. 173.

...............

# இலக்கியங்களில் திருவந்திபுரம்

## முன்னுரை

சங்க இலக்கியங்களில் தெய்வங்களைப்பற்றியும் அத்தெய்வங்கள் உறையும் பதிகளைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன. இந்து சமயம் சைவம், வைணவம் என்ற இருபெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளது. இப்பிரிவில் சைவசமயத்தொடர்பான இலக்கியங்கள் பல பக்தி இலக்கியக்காலத்தில் தோன்றின. ஆனால் வைணவசமயத்தில் நாலாயிரதிவ்விய பிரபந்தம் என்ற ஒருநூல் மட்டுமே தோன்றிற்று. ஏனெனில் வைணவர்கள் வடமொழிப் பற்றுடையவர்கள் ஆகையால் தமிழ்மொழியில் அதிக நூல்களை இயற்றவில்லை.

அப்படி எழுந்த சிலநூல்களில் 108 வைணவத் திருப்பதிகளைப் பற்றியசில செய்திகள் சிறப்பாக இடம் பெற்றுள்ளன. "கி.பி. 7 ஆம் நூற்றாண்டு முதல் 9 ஆம் நூற்றாண்டு முடிய ஆழ்வார்கள் வாழ்ந்தனர். அவர்கள் ஊர் ஊராகச் சென்று அங்குள்ள தெய்வங்களைப் புகழ்ந்துபாடினர். அதன்மூலம் அந்தந்தத்தலங்களைப் புனித இடங்களாக திவ்விய தேசங்களாக மங்களாசாசனம் செய்தனர்"[1] இக்காலத்தில் எழுந்த நூல்களில் மட்டுமன்றி அதற்குமுன்பு தோன்றிய புராணங்கள் சிலவற்றிலும் அதன் பிறகு தோன்றிய நூல்கள் பலவற்றிலும் திருவந்திபுரம் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

## புராணங்களில் திருவந்திபுரம்

திருவந்திபுரம் பற்றி பதினெண் புராணங்களில் மூன்று புராணங்கள் எடுத்துரைக்கின்றன. ''ஸ்ரீவியாசபகவானால் இயற்றப்பட்ட பதினெட்டு புராணங்களில் 3 புராணங்களில் திருவஹீந்திரபுரம் பற்றிய விசேஷவரலாறுகள் கூறப்பெற்றுள்ளன. அவையாவன

1. பிரம்மாண்டபுராணம் - ஐந்து அத்தியாயங்கள்
2. ஸ்கந்தபுராணம் - நான்கு அத்தியாயங்கள்
3. பிரகந்நாரதீயபுராணம் - ஐந்து அத்தியாயங்கள்''[2]

எனக் குறிப்பிட்டுள்ளது. வடமொழிபுராணங்களான பிரம்மாண்ட புராணம், ஸ்கந்த புராணம், பிரகந்நாரதீய புராணம் போன்றவற்றில் திருவந்திபுரம் பற்றிய புராணக்கதை விரிவாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளது. அவை.

### பிரம்மாண்டபுராணம்

முன்பொருசமயம் நாரத முனிவர் தம் தந்தை பிரம்மாவை வணங்கித் திருமாலின் பெருமைகளை எடுத்துரைக்குமாறு வேண்டினார். அதற்கு இணங்கி பிரம்மா பின்வருமாறு கூறினார்.

சநகர், சநந்தனர் ஆகியோருடன் இருந்த முனிவர்கள், தேவரிஷிகள் போன்றோர் திருமாலைக்காண விரும்பி ஆகாயமார்க்கமாக திருப்பாற்கடலை நோக்கி விரைந்தனர். அவர்கள் எதிரில் வந்த வியாசமுனிவரை

வணங்கி, தாங்கள் வந்த காரணத்தைக் கூறினார்கள். அவர் அவர்களை திருபாற்கடலுக்குச் செல்லவேண்டாம் வைகுண்டம் செல்வோம் என்று அனைவரையும் அழைத்துச் சென்றார். அங்கு இறைவன் இல்லை என்பதை அறிந்து வாயிற்காவலனை வினவினர். அவன் பகவான் பூவுலகில் திருக்குடந்தைக்கு வடக்கில் ஆறுயோசனை தூரத்திலும் காஞ்சிபுரத்திற்குத் தெற்காகவும் திருவேங்கடத்திற்கு தென்கிழக்காகவும், சமுத்திரத்திற்கு மேற்குத் திசையில் அரை யோசனை தூரத்திலும் உள்ள திருவயிந்திரபுரத்தில் மார்க்கண்டேயரும், பூமிதேவியும் தவம் செய்கின்ற இடத்தில் இருக்கிறார் என்றான். பின்பு அனைவரும் அங்கு சென்று இறைவனைத் தியானித்தனர். அவர்களுக்கு இறைவன் காட்சியளித்தார். அப்போது முனிவர்கள் இறைவனை வேதங்களால் பலவாறு போற்றினார்கள். இதனால் மகிழ்ந்த இறைவன் அவர்கள் விரும்பும் வரமளிக்க எண்ணினார். மார்க்கண்டேயரும், பூமிதேவியும் விரும்புவதையே இம்முனிவர்களும் விரும்பினார்கள். இத்தலத்தில் இறைவன் கோயில் கொண்டு வாசம் செய்ய வேண்டும் என்று வேண்டினர்.

திருமால் ஆதிசேடனைத் தாகவிடாய் தீர நீர்கொண்டுவருமாறு கூறினார். தான் இங்கு இருப்பதாய் இறைவன் வாக்களித்தார். ஆதிசேடன் பாதாளம் சென்று நீர்கொண்டு வந்தார் அதனைப் பகவான் ஏற்றுக் கொண்டு தாகசாந்தி அடைந்தார். கருடன் முனிவர் ஒருவரின் கமண்டலத்தை முக்கினால் உடைத்து வெளிவந்த நீரை நதியாக ஓடச்செய்தார். அத்துடன் வரும்போது முனிவர் கோபம் கொண்டு இந்நீர்

கலங்கட்டும் எனச் சாபம் கொடுத்தார் பின்பு முனிவரிடம் நடந்தவற்றைக் கூறி சமாதானம் செய்தார். அதன்பிறகு பகவானிடம் வந்தார். பகவான் ஆதிசேடன் கொண்டு வந்த நீரை உவந்து ஏற்று அதற்கு சேஷதீர்த்தம் எனப்பெயரிட்டு வரமளித்தார்.

கருடன் மீது பகவான் சிறிது கோபப்பட்டாலும் உன்னுடையநதி கருடநதி எனப் புகழப்படும். என் ரதோவுற்சவத்தின் போது பூசைகளை இந்நதிக்கரையில் செய்து கொள்வேன். எனினும் என்னிடம் நீ எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்று கூறினார். இதனையெல்லாம் கேட்ட நாரதர் இதற்கு மேல் நடந்தவற்றையும் தமக்குக் கூறுமாறு வேண்டினார், பின்பு பிரம்மா கூறலுற்றார்.

மார்க்கண்டேயர் பிரம்மாவை நோக்கித் தவம் செய்தார். அப்போது பிரம்மா காட்சியளித்தார். அவரிடம் முனிவர் திருமாலுக்கு வைகானச ஆகமப்படி உற்சவம் செய்ய விரும்பியதைத் தெரிவித்து வேண்டினார். பிரம்மாவும் அதற்கேற்ப தேவநாதனுக்கு உற்சவம் நிகழ்த்திவைத்தார். வைகாசி மாதம் அஸ்தநட்சத்திரத்தில் அங்குரார்ப்பணமும், சித்திரை நட்சத்திரத்தில் துவஜா ரோகனமும் செய்தார்.

நட்சத்திரம் சித்திரை - அம்சவாகனம்
சுவாதி - சிம்மவாகனம்
விசாகம் - அனுமந்த வாகனம்
அனுஷம் - நாகவாகனம்
கேட்டை - கருடவாகனம்
மூலம் - யானை வாகனம்

**பூராடம் - இந்திரவிமானம்**
**உத்திராடம் - குதிரை வாகனம்**
**திருவோணம் - திருத்தேர் உற்சவம்**

திருவோணத்தன்று ஸ்ரீபாத தீர்த்த உற்சவமும் செய்வித்தார்.

அதன் பிறகு பிரம்மாவும் தேவநாதனை வணங்கி திருவந்திபுரத்தில் வீற்றிருக்க வேண்டும் என்று வேண்டினார் பிரம்மாவைத் தம் முன்புறமுள்ள பிரம்மதீர்த்தக் கரையில் தவம் செய்யுமாறு கூறினார். மாக்கண்டேயர், பூமிபிராட்டி போன்றோரைத் தம்முடன் இருக்கப் பணித்தார். ருத்திரனை ஈசான்ய திக்கில் பாடலபுரத்தில் இருக்கப் பணித்தார் மற்ற முனிவர்களை அனுமானால் கொண்டுவரப்பட்ட ஔஷதகிரியில் வசிக்குமாறு பணித்தார். புண்ணிய புத்திரனான பிரகலாதன் சிங்கர் கோவில் என்னுமிடத்தில் திருமாலை எண்ணித் தவம் புரிந்த வண்ணம் இருந்தான். அவன் முன்பு நரசிம்மவடிவில் எம்பெருமான் காட்சியளித்தார். பிரகலாதன் பெருமானைப் பலவாறு போற்றினான். அவன் விருப்பப்படி சிங்கர் கோவிலில் அர்ச்சாவடிவில் மேற்குப் பக்கமாய் வசிக்கலுற்றார் நரசிம்மர். இதைத் தவிர இன்னொரு சிறப்பினையும் பிரம்மா கூறினார்.

பல காலத்திற்கு முன்பு திருமால் அகீந்திரபுரத்தில் வீற்றிருந்தார். அவரை வணங்கி பலர் நற்கதியடைந்தனர். கருடநதி சிறப்புமிக்கது. கருடநதிக்கரையில் ஈ எறும்புகள் கூட நற்கதியினை அடையும் போது நீரை அருந்தும் ஆராதிக்கும் மற்றவர்கள் வீடுபேறு அடைவர் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இங்கு உள்ள ஔஷதமலை மிகவும் சிறப்புடையது. மரமாகவும் செடியாகவும்

முனிவர்கள் பலர் இருந்து வீடுபேற்றினை எய்துவார்கள். கலியுகத்தில் அனைவரும் கொண்டாடும் திருமாலின் மணியின் அமிசமான ஓர் மகான் அரசமரத்தின் அடியில் தவம் செய்து சித்தியடைந்து அவர் முன்பு பரிமுகப் பெருமாள் காட்சியளிக்கப்போகிறார். அம்மகான் பல வருடங்கள் அங்கேயே வாசம் செய்வார். ஒரு கிணற்றையும் ஏற்படுத்தப் போகிறார். அந்நீர் நன்மையையும் வீடுபேற்றினையும் அளிக்க வல்லது.

அதுமட்டுமன்றி இறைவன் புண்ட்ரவடிவமான வெளுத்த திருமண் இத்தலத்தில் காணப்படுகின்றது. பாடலீஸ்வரர் திருப்பாதிரிப்புலியூரில் பாடலமரத்தின் கீழ் திரிபுர சம்காரத்திற்காக வந்து லிங்க வடிவாய் ''நமோ தேவநாதாய'' என்ற மந்திரத்தைப் பல காலம் உச்சரித்துத் தவம் செய்து வந்தார். ஆகாசவாணியின் வாயிலாகக் கேட்டதற்கு ஏற்ப ருத்திரன் கருட நதிக்கரைக்கு வந்தார். இங்கு பல வகையான சத்தங்களை ஏற்படுத்தினார். இதனை அறிந்து தேவநாதன் அவர் முன்பு தோன்றினார். ருத்திரனும் முறைப்படி அவரை ஆராதித்துப் போற்றினார். பின்பு திரிபுர அசுரர்களைக் கொன்று குவிக்க உதவுமாறு வேண்டினார். பெருமாள் உதவுவதாகக் கூறினார் பின்பு அம்பின் முனையில் தான் இருந்து கொண்டு அவர்களை சம்காரம் செய்வதாகக் கூறினான். ருத்திரன் திரிபுரமெரிக்கச் சென்றார் தம்படையுடன் சென்று அசுரர்களை அழித்தார். அவ்வசுரர்களைக் கொன்று குவித்ததால் ஏற்பட்ட இரத்த வெள்ளம் ருத்திரனை சமுத்திரத்துள் இழுத்துச் சென்றது. அப்போது பெருமானைப் போற்றியவாறு இருந்தார் ருத்திரன். இதனை அறிந்த தேவநாதன் கோபாலனாக வேடம்

பூண்டு தன்னுடைய புல்லாங்குழலை ஊதி அந்தக் கானத்தில் மயங்கிய சமுத்திரராஜனை வெளியே வரவைத்தார். பின்பு ருத்திரனை வெளியே விடும்படி கட்டளையும் இட்டார். சமுத்திரராஜன் ருத்திரனை வெளியே விட்டான். பெருமான் ருத்திரனை இங்கேயே இருக்கும்படி கட்டளையிட்டார். இவர்களுக்கு ஒரு பட்டணம் உண்டாயிற்று. இது சமுத்திரக்கரையில் இருக்கும் தேவநாதன் பட்டினம் ஆகும். இது இன்று தேவனாம்பட்டினம் என அழைக்கப்படுகிறது.

தேவநாதன் வைபவத்தையும், அஹீந்திரபுர வைபவத்தையும் எழுதவும் படிக்கவும் செய்வோர் வீடுபேறு அடைவர் என்பதில் ஐயமில்லை. சிவ பக்தனான பாண்டிய மன்னன் (சுந்தர பாண்டியனாக இருக்கலாம்) ஒருவன் தேவநாதனிடம் பக்தி கொண்டு வீடுபேறு அடையப் போகிறான் என்றால் தேவநாத பக்தி செய்வோரைப் பற்றி சொல்ல வேறு ஏதேனும் உண்டோ என்று பிரம்மா நாரதரிடம் இதனைக் கூறினார்.

## கந்தபுராணம்

முற்காலத்தில் முனிவர்கள் சூதரைப்பார்த்து சேஷதீர்த்ததின் சிறப்பினைக் கூறுமாறு கேட்டனர். இறைவன் அரணியத்தின் நடுவில் இருக்கிற ஔஷதமலையில் முன்பொருமுறை களைப்பாறினார். அதன்பின்பு தாகம் எடுக்கவே தன்முன் இருந்தவர்களைப் பார்த்து இங்கு ஏதாவது தடாகம் இருக்கிறதா என்றார். இல்லையென்று கூறிவிடவே பகவான் கருடனை நீர்கொண்டு வருமாறு கட்டளையிட்டார். நீர்கொண்டு வரச்சென்ற கருடன் நீண்டநேரம் வராததால் அனந்தனை

நீர் கொண்டுவர அனுப்பினார். அனந்தன் மலையை விட்டு கீழேவந்து தன்வாலினால் தரையைப் பிளந்து நீரை வரவழைத்து இறைவனுக்குக் கொடுத்தார். இதனால் மகிழ்ந்த இறைவன் ஆதிசேடனே இத்தலத்தில் உன்னால் ஏற்படுத்தியத்தீர்த்தம் புகழ்பெறும். யானும் திருமகளும் ஒரு நகரத்தை உன் பெயரால் தோற்றுவித்து வாசம் செய்யப் போகிறோம் என்று அருள் செய்தார்.

பின்பு ஒரு நகரைத் தன் மனத்தால் சிருஷ்டியும் செய்தார். கருடன் ஒரு முனிவரின் அருளினால் நதியொன்று வந்து கொண்டிருப்பதாகப் பகவானுக்குத் தெரிவித்தார். பகவான் சேஷதீர்த்தம் எல்லா ஆசைகளையும் மனிதனுக்கு நிறைவேற்றும் மனத்தால் நினைத்தாலே பாவம் நீங்கிவிடும் அதுமட்டுமின்றி இது தேவலோகத்து கங்கைக்குச் சமம் என்று வரம் கொடுத்தார். இதனால் கருடனை சமாதானம் செய்ய அவர் கொண்டுவந்த தீர்த்தம் கருடநதி என அழைக்கப் படுவதுடன் கங்கைக்குச் சமம் என்றும் மார்க்கண்டேயர் தினந்தோறும் இந்நதியில் நீராடுவார் என்றும், இவ்வாற்றின் கரையில்ருத்திரன் வசிப்பார் என்றும் பெருமான் வரம் கொடுத்தார் என்று சூதர் கூறினார். பின்பு அம்முனிவர்கள் இறைவனுக்குக் களைப்பும் தாகமும் ஏற்படுவதற்கு காரணமான நிகழ்ச்சிகளை விளக்குமாறு சூதரை வேண்டினார்கள். அதற்கு உடன்பட்டு சூதர் பின்வருமாறு கூறலானார்.

முன்பு ஒரு சமயம் தேவர்களும் அசுரர்களும் ஒருவரை ஒருவர் கொன்று வெற்றி கொள்ளும் ஆசையில் முறையே சிவனையும், திருமாலையும் வணங்கினர். இதனால் திருமாலும், சிவனும் பிரம்மாவின் சபைக்கு

வந்தனர். பிரம்மா அவ்விருவரையும் போற்றி அவர்கள் வந்த காரணத்தை வினவினார். திருமால், தேவர்கள் பிரபுவை ஆராதிக்கின்றனர் எனக் கூறினார். சிவனோ எல்லாவரங்களையும் கொடுக்கும் ஆற்றல் வாய்ந்த ஒரு நாயகனை ஆராதிக்கிறார்கள் என்றார். நீர் படைப்புகளை காப்பவர் அதனால் யாருக்கு அந்த தகுதியுள்ளது என்று கூறவேண்டும் என்றார். இதனை கேட்ட பிரம்மா அதனை மக்களே தெரிவிக்கட்டும் என்றார். அசுரர்களை கேட்டவுடன் அவர்கள் ருத்திரனே எங்கள் பிரபு என்றனர். தேவர்களை வினவியவுடன் திருமாலே எங்கள் பிரபு என்றனர். பிரம்மா இச்சமயம் திருமாலுக்கும் சிவனுக்கும் இடையே போரினை ஏற்படுத்தினார். பிரம்மாவின் எதிரில் இருவரும் வீற்றிருந்த போது விஷ்ணுவானவர் அவர் அவர் தம் அதிகாரப்படி செய்ய வேண்டும் என்றார். அதன்பிறகு வேதங்களில் கூறப்பட்டதை நினைவுபடுத்தினார். பிரம்மா. ராட்சசகுணத்தார்க்கு பிரபு சிவன் எனவும், தாமசகுணத்தார்க்கு பிரபு திருமால் எனவும், சாத்வீககுணத்தார்க்கு தாம் பிரபு எனவும் கூறினார். பின்பு அவர் தன் மாயையினால் தேவசத்ருக்களிடம் தாமசகுணத்தினரை தன் மோகத்தால் பிடிக்கக் கட்டளையிட்டார்.

பிரம்மா தம் இருப்பிடத்தில் இருந்தார். திருமால் தேவர் கூட்டத்தில் சென்று கலந்தார். சிவன் அசுரர் கூட்டத்தில் கலந்தார் தேவ அசுரயுத்தம் ஆரம்பமானது. அசுரர்கள் தம்முடைய பலத்தால் தேவர்களை முறியடித்தனர். பகவானும் போரில் சாரங்கத்தால் சரமாரி பொழிந்தார். இதனால் பூமியை இரத்த வெள்ளம் சூழ்ந்தது. அசுரர்கள் கருடபகவான் மேல் இருந்த

பகவானை நோக்கிப் போரிட்டனர். பிரம்மா அசுரர்களை நோக்கித் தர்மயுத்தம் செய்யும்படி கூறினார். அவர்கள் அவர் கூறியதை ஏற்கவில்லை. திருமாலிடம் தோல்வியை ஒப்புக்கொள்ளுமாறு கூறினார்கள். திருமால் சிரித்தபடி என்சக்ராயுதத்தை வெற்றி கொண்ட பின்பு பேசலாம் என்றார். அசுரர்களைச் சக்ராயுதம் வீழ்த்தியது. அசுரர்களை அழித்த சக்கரத்தாழ்வாரைபலன் என்ற அசுரன் சிவன் கொடுத்த சூலத்தால் தன்னைத் தாக்க அவனைத் தோற்கடித்தார்.

பின்பு அவன் சிவனைச் சரணமடைந்தான். இதனால் அவரே போர்க்களத்திற்கு வந்தார். சக்கரத்தாழ்வாருடன் சிவன் போரிட்டுத் தோற்றார். பின்தன் நெற்றிக்கண்ணைத் திறந்து நெருப்புக்கதிரை சக்கரத்தாழ்வார் மீது வீசினார். அதனையும் அவன் முறியடித்தான். இதனால் கோபமுற்று தம்சூலாயுதத்தால் சக்கரத்தாழ்வாரைத் தாக்கினார். அதிலிருந்து பல அம்புகளும், சூலங்களும் தோன்றின. அதனையெல்லாம் ஆழ்வார் பகவானைத்தியானித்து முறியடித்தார். சூலாயுதத்தைத் தன்கையில் பிடித்து வைத்துக் கொண்டார் ருத்திரனும் பூதகணங்களும் அஞ்சி ஔஷதமலைக்கு வந்தனர். அவர்களைத் துரத்தியபடி சக்கரத்தாழ்வாரும் வந்து சேர்ந்தார். பிரம்மாவும் பகவானும் அம்மலைக்கு வந்து சேர்ந்தனர். சக்கரத்தாழ்வாரைக் காரணம் வினவ அவர் கோபத்துடன் அசுரர்களோடு ருத்திரனையும் போற்றி, வரும்வரை தம்மை திரும்பிவர உத்திர விட வேண்டாம் என்று கூறியதைக் கேட்ட பகவான் அவருக்குத் தம்முடைய அழகு பொருந்தியதிருமேனியைக் காட்டியவுடன் அவர்

கோபம் தணிந்தது. ருத்திரன் தம் அச்சத்தை பெருமானிடம் தெரிவித்து தன்னுடைய சூலாயுதத்தை சக்கரத்தாழ்வாரிடமிருந்து பெற்றுத்தரும்படி வேண்டினார்.

பகவான் தன்னுடைய மும்மூர்த்தி வடிவினை ருத்திரனுக்குக் காண்பித்தார். பகவானுடைய உடலில் தன்னையும், மலைமகள் மற்றும் பிரம்மா, தேவர்கள் முதலியோரையும் கண்டு வியப்படைந்து பெருமானை ருத்திரன் துதித்தார். பின்பு திருமால் சூலத்தை சிவபெருமானுக்குத் திருப்பியளித்தார். பிரம்மாமுதலான தேவர்கள் மற்றும் முனிவர்கள் மகிழ்ந்து மற்ற எவராலும் அடைய முடியாத தேவநாதன் என்னும் பெயரினை நிலையாக உலகில் பெற்றுத் திகழ வேண்டும் என்று வேண்டினார்கள். ருத்திரனும் தன்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கி நீரும் திருமகளும் சேஷதீர்த்தக்கரையில் வசிக்கவேண்டும் என்றார். யானும் பாடலவனத்தில் வசித்து உம் பக்தர்களைக் கண்டு உன்னுடைய பாத மகிமையின் காரணமாக, பரிசுத்தமாக விரும்புகிறேன் என்றார். பெருமானும் அப்படியே ஆகட்டும் என்றார். இதனால் சிவபெருமான் அழகிய பாடலீபுரத்தில் வாசம் செய்கிறார்.

இதைக் கேட்டவர்களுள் ஒருவரான பிருகுமுனிவர் தவசித்திக்காக சேஷதீர்த்தக்கரைக்குச் சென்றார். அங்கு பிரம்மாவின் மனதில் உண்டான மஹிமைபொருந்திய தபோராசி என்னும் ஊர்த்தவ புண்ட்ரங்கள் தரித்த பிராமணோத்தரை அஹீந்திரபுரத்தில் சந்தித்தார்.

பிருகுமுனிவர் அவரை வணங்கி தாம்சிவனுடைய தம்பி என்றும் உயிரினங்களைப் படைக்கப் பூமிக்கு

வந்ததாகவும் கூறினார். மேலும் சேஷதீர்த்தக்கரையில் தேவநாதனைத் தவம் செய்யவுள்ளதாகவும், கருட நதியில் நீராட விரும்பிள்ளதாகவும், விரைவில் தவசித்திபெறத் தகுதியான இடத்தைக் கூறுமாறு தபோராசியை வினவினார். தபோராசி மலையின் மீது இரண்டு மைல் தொலைவில் ஒரு வனமிருப்பதாகவும் அங்குச் சென்று தவம் புரியுமாறும் கூறினார். தவத்தால் தகுதிபெற்ற பிரம்மா உம்மிடம் மகிழ்ந்து தாமரைப்பூவிலிருந்து ஓர் கீர்த்தி வாய்ந்த புதல்வியை உமக்குக் கொடுப்பார் எனவும், அப்போது பிருகுவின் தவம் பூர்த்தியடையும் எனக் கூறினார்.

அதன்படி வனத்தினுள் சென்று பிருகுமுனிவர் ஆயிரம் வருடங்கள் தவம் செய்தார். அதன் பின்பு பிரம்மா பிருகு முனிவர் முன்பு காட்சியளித்தார். பின்பு பின் வருமாறு கூறலுற்றார்.

என் பெயரில் உருவான பிரம்மதீர்த்தம் எனப்படும் குளத்தில் ஒரு தங்கத்தாமரை மலரின் நடுவில் திருமகள் தேவநாதனுக்காக ஒரு குழந்தையாக அதே சமயம் உனக்குப் புதல்வியாக அவதரிக்கப் போகிறாள். அக்குழந்தையை உலகத்தவர் பார்கவி எனப்புகழ்வர் என்றும், வீடுபேற்றை விரும்பும் ஞானிகள் ஹேமாம்புஜவல்லி என அழைப்பார்கள் எனக் கூறி மறைந்தார். பின்பு பிருகு முனிவர் பிரம்மத்தீர்த்ததிற்கு வந்தார். அங்கு தங்கத்தாமரையில் குழந்தையிருப்பதைக் கண்டு அதனை மகிழ்ச்சியுடன் தன் பத்தினியிடம் அளித்தார். அக்குழந்தை வளர்ந்து நாராயணனையே வணங்கி பூதீர்த்தம் என்னும் தீர்த்தத்தை உண்டுபண்ணி அதன் கரையில் தவம் புரிந்தாள். பின்பு தேவநாதன்

தம்புடை சூழவந்து பிருகு முனிவர் கன்னிகாதானம் செய்து தர மகிழ்ச்சியுடன் ஏற்றார். உலகத்தவர் ஹேமாம்புஜவல்லியை பார்கவி எனப் புகழ்ந்தேத்துவர் எனத் தேவநாதன் வரமருளினார். பிருகு முனிவர் அத்தலத்திலே வீற்றிருந்து பகவானுடைய மார்பில் வீற்றிருக்கும் திருமகளைத் தரிசித்தவாறு உள்ளார்.

முனிவர்களுக்குச் சூதர் மேலும் கூறலுற்றார். முன்பொரு சமயம் காசியபமுனிவருக்குத் திதி என்னும் மனைவியின் மூலம் விருத்திரன் என்னும் மகன் பிறந்தான். அவன் நூறு வருடங்கள் தவம் செய்து பாரணைபுரிய எண்ணுகையில் நாரதர் தனக்கு அவ்வன்னத்தை அளிக்கும்படி கேட்டார். அவனும் நாரதருக்கு பக்தியுடன் நல்கினான். அதன்பின்பு நாரதரை நோக்கி தனக்கு நாடாளும் ஆசை உள்ளதைத் தெரிவித்தான். அதற்கு தக்கதொரு மார்க்கத்தைக் கூறுமாறு கேட்டான். நாரதரும் அவனை நோக்கி திருமால் மீது பக்தி கொண்டால் உன் விருப்பம் நிறைவேறும் எனக் கூறினார்.

நூறு அசுவமேத யாகங்களும் ஆயிரம் ராசசூய யாகமும் செய்து திருமகள் கேள்வனான திருமாலை மகிழ்ச்சியுறச் செய்தால் ஈரேழுலகங்களும் உன் வசம் என்று கூறிச்சென்றார். விருத்திராசுரனும் அப்படியே யாகங்களைச் செய்தான். தன் தவபலத்தினால் இந்திரனை வென்றான். இந்திரன் இவனுக்கு அஞ்சி தேவலோகத்தைவிட்டு ஔஷதமலையினில் ஒரு பொய்கையில் தாமரைத் தண்டின் நூலில் ஒளிந்து கொண்டான். தேவர்கள் இந்திரனைக் காணாமல் வேதனையுற்றுக் கைலாயம் சென்றனர். அங்கு சம்பு,

இந்திரன் திருவகீந்திரபுரத்தில் இருப்பதாகக் கூறினார். அங்குச் சென்று தேவர்கள் இந்திரனைக் காணாமல் தவம் புரிந்தனர். தரங்கமுக நந்தினியின் அவதாரம் தோன்றிய குளத்தில் திருமகளைப் பூசித்தார்கள். தேவநாதனை சாமகானத்தால் போற்றினர். அதற்கு இணங்கிப் பெருமான் கருடாரூடராய்க் காட்சியளித்தார். தேவர்கள் அவரைப் பலவாறு போற்றினர். பகவான் தேவர்களை நோக்கி நீங்கள் அகீந்திரபுரத்தில் ஒரு வைஷ்ணவ யாகம் செய்தால் தாமரைத்தண்டில் ஒளிந்துள்ள இந்திரன் வெளியே வருவான் எனக் கூறினார்.

அதன்படி அவர்கள் பூதீர்த்தத்தின் கரையில் அப்படியே செய்தார்கள். இந்திரன் வெளிப்பட்டான். பகவான் இந்திரனுக்கு வஜ்ராயுதமளித்தார். இதனால் இந்திரன் விருத்திராசுரனைக் கொன்று சொர்க்கம் செல்ல முயற்சித்தான். பிரம்மகத்தி தோஷமுண்டானமையால் அவனால் சொர்க்கம் செல்ல இயலவில்லை. பின்பு திருவகீந்திரபுரம் வந்து கருடநதியில் நீராடி புண்ட்ரங்கள் தரித்து தேவநாதன் சன்னதிக்கு உள்ளே உள்ள சேஷதீர்த்தத்தில் நீராடி பிரம்மகத்தி தோஷம் நீங்கப்பெற்று அதன் பிறகு தேவநாதனை வணங்கி தேவலோகமடைந்தான் என்று சூதர் கூறித் தன் உரையை நிறைவு செய்தார்.

## பிரகந்நாரதீய புராணம்

முன்பொரு சமயம் நைமிசாரண்யத்தில் ஒருயாகம் பலவருடம் நடைபெற்றது. அங்கு கூடியிருந்த முனிவர்கள் சூதரை நோக்கித் திருமாலின் வைபவங்களைக் கூறுமாறு கேட்டனர். அவர்

பின்வருமாறு கூறலானார். பகவானிடம் பக்தி கொள்ளும் பக்தர்களுக்குப் புனர் ஜென்மம்தீரும். உங்களுக்கு எந்தச் சரித்திரம் வேண்டும் என்று கூறுங்கள் என்றார். முனிவர்கள் திருவகீந்திரபுரம் என்று புகழப்படும் தேவநாதனின் விளையாட்டு நடைபெற்ற இடத்தைப் பற்றி விரிவாகக் கூறுமாறு வேண்டினார்கள். அவர் பின்வருமாறு கூறலுற்றார்.

ஒரு சமயம் பிரம்மா தம்முடைய அன்னத்தின் மீதேறி பூலோகத்தை அடைந்தார். கிழக்கு சமுத்திரக்கரையில் நிறையப் பூக்கள் மரங்களுடன் கூடிய சௌகந்திக வனத்தினுள் நுழைந்து நறுமணத்தை அனுபவித்தபடி சென்றார். அப்போது ஒரு அசரீரி அவரை நோக்கி இம்மகாவனத்தில் திருமால் வாசம் செய்கிறார் என்றும், இம்மலை சஞ்சீவிவனம் என்றும், சித்தஔஷதம் என்றும், ஔஷதமலை எனவும் புகழப்படுவது. நீர் இங்கு தவம் செய்தால் உமக்கு தலம் ஏற்படும் என்று கூறியது. அதன்படி பிரம்மா ஆயிரம் வருடம் தவம் செய்தார். இதனால் திருமால் அவர் முன்பு காட்சியளித்தார். பிரம்மா அவரை பலவாறு போற்றினார்.

இதனால் மகிழ்ச்சியுற்ற எம்பெருமான் பிரம்மாவுக்கு வேண்டிய வரம் அருள இசைந்தார். பிரம்மா பகவானிடம் எப்பொழுதும் தமக்குப் பக்தியிருக்க வேண்டும் என்றார். அது மட்டுமன்றி தான் தவம்புரிந்த குளம் பிரம்மதீர்த்தம் என்று அழைக்கப்பட வேண்டுமென்றும், சம்சார நோய்க்கு மருந்தாகிய பெருமான் இங்கு இருப்பதால் இம்மலை ஔஷதமலை எனப் புகழப்படவேண்டும் என்று அவர் கேட்டபடியே வரமருளினார். அம்மலை, பின்பு பிரம்மாசலம் எனவும், புகழப்பட்டது. முனிவர்கள்

அகீந்திரபுரம் என்று பெயர் ஏற்பட்டதற்கும், தேவநாதன் என்ற பெயர் ஏற்பட்டதற்கும் காரணத்தை வினவினர். அதற்கு சூதர் பின்வருமாறு கூறலானார்.

முன்பொரு சமயம் தேவர்கள் அசுரர்களால் தோற்கடிக்கப்பட்டனர். இதனால் அஞ்சி தேவகுரு பிரகஸ்பதியை சரண் புகுந்தனர். பின்பு தங்களைக் காப்பாற்றுமாறு வேண்டினர். அவர் அவர்களை கிழக்கு சமுத்திரக்கரையில் உள்ள சௌகந்திக வனத்திற்குச் செல்லுமாறு கூறினார். அங்குள்ள ஔஷதமலையில் காணப்படும் மூலிகைகளே முன்பு அசுரர்களால் கொல்லப்பட்ட தேவர்களை உயிர்பிழைக்க வைத்தது என்றும் இதனாலே அம்மலை ஔஷதாசலம் எனப்புகழப்படுகிறது என்றும், அங்குதான் திருமால் வாசம் செய்கிறார் என்றும் அங்கு தவம் செய்தால் அவர் கருணையில் உங்களுக்கு நன்மையுண்டாகும் என்றும் கூறினார். தேவர்கள் அப்படியேதவம் செய்தனர். இறைவன் அவர்களுக்குக் காட்சியளித்தார். தேவர்கள் இறைவனைப் பலவாறு போற்றினார்கள் தங்களை அசுரர்களிடமிருந்து காக்குமாறு வேண்டினர்.

அசுரர்களின் பயம் நீங்கியபின் பூமியில் தடாகம் உண்டாக்கி அவர் களைப்பை போக்கினார்கள். ஆதிசேடனும், கருடனும், நீர்கொண்டுவந்து பகவானுக்குக் கொடுத்தனர். பகவான் மகிழ்ந்து இத்தீர்த்தங்களின் கரைகளில் தாம் வசிப்பதாக வரமருளினார். தேவர்கள் திருமலை சிங்காசனத்தில் அமர்த்தி அபிடேகம் செய்தனர். அதன்பிறகு எல்லா உலகத்தவரும் திருமால் தங்களுக்காகப் போர் புரிந்ததை எண்ணித் தேவநாதன் என்னும் பெயரை ஏற்குமாறு

வேண்டினார்கள். இதுவே தேவநாதன் என்னும் பெயர் ஏற்படக்காரணமான நிகழ்ச்சியாகும்.

ஒருசமயம் மார்க்கண்டேயர் தாம் சிரஞ்சீவியாயிருப்பதால் தமக்கு வீடுபேறு கிட்டுவதற்கு வாய்ப்பில்லை என்று வருந்தியபடி நறுமணம்கமழும் பிரம்மாசலத்தில் சௌகந்திக வனத்தைச் சென்றடைந்தார். அப்போது வானில் இருந்து அசரீரிவாக்கு அவருக்குக் கேட்டது. அது திருமாலைக் குறித்துத் தவம் புரியும்படியும், அவருடைய அருளால் தாமரை மலரின்நடுவில் மூன்று வயதுப் பெண்குழந்தை பிறப்பாள் எனவும், அக்குழந்தையை எடுத்து வளர்த்தால் அவருக்கு நன்மைகள் கிட்டும் எனவும் கூறியது. அப்படியே சிலகாலத்திற்குப் பின்பு ஓர் தாமரைமலரில் மூன்று வயது நிரம்பிய பெண்குழந்தை கிடைத்தாள். சமுத்திரத்திற்கு அருகில் இருந்தமையால் அக்குழந்தை அலை வீசுவதைக் கண்டு மகிழ்ந்தாள். அதனால் அக்குழந்தைக்கு ''தரங்கமுகநந்தினி'' என்று பெயர்சூட்டினார்.

நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவள் வளர்ந்து கன்னிப்பருவம் அடைந்தாள். அப்போது முனிவர் இவள் திருமணத்திற்கு என்ன செய்வது என்று எண்ணி மனம் வருந்தினார். அப்போது அசரீரி அவரை நோக்கி இந்தப் பெண் திருமகளாவாள். இவளை மகளாகப் பெற்ற உமக்கு வீடுபேறுகிடைப்பது உறுதி இவள் பொருட்டு பெருமானை வேண்டித் தவம் செய்தால் வழிகிடைக்கும் என்று கூறியது. மார்க்கண்டேயரும் பெருமானைப் பலவாறு போற்றினார். அவை,

தேவதைகள் உம்மை அமுதத்தால் அபிடேகம் செய்தமையால் நீரே தேவநாதன் ஆவீர். இப்பிறவியில் உம் திருவடியைப்பற்றியவர் நழுவுதல் என்பதில்லை. அதனால் அச்சுதனாகிறீர். சந்திரன், சூரியன் போன்றோர்களை அவர்கள் மண்டலங்களில் இருந்து கொண்டே ஒளிவீசச் செய்வதால் ஸ்தரஜ்யோதிஷ் ஆகிறீர். ஞானியர் மனதில் இருந்து கொண்டு இருட்டை நீக்குவதால் அனகஞ்யோதிஷ் ஆனிர் பிரகாலதன் வாக்கினை உண்மையாக்கி பூமியில் அவதாரம் செய்தமையால் நீர் தாசசத்தியனாகிறீர் என்று இப்படிப் பலவாறு போற்றினார். இதனால் மகிழ்ந்த திருமால் அவர் வேண்டும்வரம் அருளுவதாய்க் கூறினார். மார்க்கண்டேயர் மூன்று வரங்களை வேண்டினார். அவை

1. தாம் போற்றிய திருநாமங்களை பெருமான் ஏற்கவேண்டும்

2. பகவானுடைய திருவடிக்குத் தாம் பணிவிடை செய்யவேண்டும்

3. தரங்கமுகநந்தினியாகிய திருமகளுடன் பிரம்மாசலத்தில் வாசம் செய்ய வேண்டும் என்பதாகும்.

பெருமானும் தாம்முன்பே பிரம்மா, கருடன் ஆதிசேடன் போன்றோருக்கு இங்கு வாசம் செய்வதாக வரம் அருளியதைக் கூறி, மார்க்கண்டேயருக்கும் வரமளித்ததாகக் கூறினார். இத்தலத்தில் சுத்தசத்வ விமானத்தின் கீழ் இருப்பதாகவும், தம்மை வைகானச ஆகமப்படி ஆராதிக்கும்படியும், தம்மை வணங்குபவர் களுக்கும், இங்குள்ள தீர்த்தங்களில் நீராடுவார்க்கு நன்மை கிட்டும் என்றும் கூறினார். அதுமட்டுமன்றி

தம்தேவியே தங்களுக்கு மகளாக வந்தாள் என்று கூறித்தம் அழகிய வடிவினை அவருக்குக் காட்டினார். ஆதிசேடன் ஓர் அழகியநகரம் அமைத்துப் பகவானுடன் தானும் வசிக்கலுற்றார். மாசிமாதம் மகநட்சத்திரத்தில் பௌர்ணமி தினத்தில் கீழ் சமுத்திரக்கரையில் பெருமானுக்கு தீர்த்தவாரித்திருவிழா செய்வித்தார்கள். ஆதிசேடனால் ஏற்படுத்தப்பட்ட நகரமாதலால் திருவகீந்திரபுரம் என இந்த ஊரிற்குப் பெயர் ஏற்பட்டது. இவ்வூரின் பெருமையை சூதர் பின்வருமாறு கூறினார்.

1. இந்த ஊரில் ஒரு கவளம் அன்னதானம் செய்தால் எல்லா அரசர்களும் வணங்கும் தகுதி பெறுவான் அத்தானம் செய்தவன்.

2. ஒரு நாளாவது அதில் பாதியாவது இங்கு வசிப்பவன் தேவலோகப் பெண்கள் கொண்டாடும் பெருமை அடைவான்.

3. பூதீர்த்தம், சேஷதீர்த்தம், கருடதீர்த்தம் இவைகளில் நீராடுபவர் அனைத்துத் தீர்த்தங்களிலும் நீராடியதற்கு ஒப்பான நன்மை பெறுவர்.

4. தேவநாதனை வணங்குபவர்களும், அவர் மலையை வணங்குபவர்களும் நிமிடத்தில் சம்சாரக்கடலைத் தாண்டுவார்கள்.

5. இந்த பகவானுடைய சன்னதியில் இதை ஓதுபவனும், இதை அவர் முன்பு படிப்பவனும் அனைத்துப் பாவங்களின்றும் விடுபடுவர்.

6. பிள்ளைப்பேறு, பணம், ஆயுள் இவைகளை வேண்டுபவர்க்கு அவைகளை நல்குவார்.

என்று கூறிமுடித்தார். இவ்வாறு புராணங்கள் திருவந்திபுர வரலாற்றினை விரிவாக எடுத்துரைக்கின்றன.

## வில்லிபாரதம்

கம்பர் இயற்றிய ராமாயணம் கம்பராமாயணம் எனப்படுவதுபோல் வில்லிபுத்தூரார் பாடிய பாரதம் வில்லிபாரதம் எனப்படுகிறது. வில்லிபுத்தூரார் திருமுனைப்பாடி நாட்டில் சனியூர் என்னும் பதியில் வைணவ அந்தணர் குலத்தில் தோன்றியவர். கொங்கர்குலத்து அரசன் வரபதியாட் கொண்டான் இவரை ஆதரித்தான். அவன் வேண்டுகோளுக்கு ஏற்பவே இவர் தமிழில் பாரதம் பாடினார். இந்நூலில் திருவந்திபுரம் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. பாண்டவர்களில் ஒருவனாகிய அருச்சுனன் தீர்த்தயாத்திரை செய்த போது இத்தலத்தை வழிபட்டதாகக் கூறப்படுகிறது. இதனை வில்லிபாரதம் ஆதிபருவம் அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் பதினேழாவது பாடல் பின்வருமாறு உரைக்கிறது.

> “ஐயானன னியல்வாணனை யடிமைக்கொள மெய்யே
> பொய்யா வணமெழுதும்பதி பொற்போடு வணங்கா
> மெய்யாகம வதிகைத் திருவிரட்டமு நேமிக்
> கையானனந்திர புரமுங்கண்டு கைதொழுதான்”[3]

எனக் கூறியுள்ளார். ஐந்து முகத்தைக் கொண்ட சிவபெருமான் இல்வாழ்க்கையில் ஈடுபட்ட சுந்தரமூர்த்தி நாயனாரை அடிமை கொள்ள மெய்யாக பொய்

அடிமையோலையை எழுதிய இடமாகிய திருவெண்ணெய்நல்லூரை வணங்கி, மெய்மையான ஆகம விதியைக் கொண்ட திருவதிகை வீரட்டானத்தையும், சக்கரத்தை தன்கையில் கொண்டுள்ள திருமால் எழுந்தருளிய அகீந்திரபுரத்தையும் தரிசித்து வழிபட்டான் என்று இதனால் அறியலாம்.

## திவ்வியபிரபந்தத்தில் திருவந்திபுரம்

திருமாலின் கல்யாணகுணங்களில் ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள் ஆவர். இவர்கள் பன்னிருவர். இவர்கள் இயற்றிய பாடல்களின் தொகுதிக்கு திவ்வியபிரபந்தம் என்று பெயர். இதனை வைணவர்கள் ''செய்யதமிழ் மாலைகள்'', ''சந்தமிகு தமிழ்மறைகள்'' எனவும் அழைப்பர். ஆழ்வார்கள் திவ்வியதேசங்களை தம் பாடல்களில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளனர். ''ஆழ்வார்களில் காலத்தால் முதன்மையவரான பொய்கையாழ்வார் ஆறு தலங்களையே பாட திருமங்கை மன்னன் 85 திவ்விய தேசங்களைப்பாடும் வரை அது படிப்படியாக வளர்ந்தது''[4]. இத்திருமங்கை மன்னன் பாடிய திவ்வியதேசங்களில் திருவந்திபுரமும் முக்கிய இடம் பெறுகிறது.

திருமங்கை என்னும் பதியில் கள்ளர்குடியில் தோன்றிய இவர் திருமால் பக்தியில் ஈடுபாடு கொண்டவர். குமுதவல்லியார் என்னும் நங்கையை மணந்து கொண்டார். தம் கைப்பொருள் முழுவதையும் திருமால் அடியார்க்குத் தொண்டு செய்வதிலேயே கழித்தார். பொருள் எல்லாம் செலவான பின் வழிப்பறித் தொழிலில் ஈடுபட்டுத் தொண்டு செய்யலானார்.

அப்போது திருமாலால் ஆட்கொள்ளப்பட்டார் என்பர். இவர் பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், பெரியதிருமடல், சிறிய திருமடல், திருஎழுகூற்றிருக்கை எனப்படும் ஆறு நூல்களை இயற்றியுள்ளார். இவற்றில் பெரியதிருமொழி மூன்றாம் பத்தில் திருவந்திபுரத்தை மங்களாசாசனம் செய்துள்ளார். அதில் இவ்வூரின் பெருமையையும் இறைவனின் மகிமையும் பலவாறு எடுத்துரைத்துள்ளார்.

## வராக அவதாரம்

**"இருந்தண் மா நிலம் ஏனம் அது ஆய், வளை**
**மருப்பினில் அகத்து ஒடுக்கி**
**கருந்தண்மா கடல்கண் துயின்றவன் இடம்**
**கமலநல் மலர்த்தேறல்**
**அருந்தி இன்இசை முரன்று எழும் அளிகுலம்**
**பொதுளி அம் பொழிலூடே**
**செருந்தி நாள் மலர் சென்று அணைந்து உழிதரு**
**திருவயிந்திரபுரமே"**[5]

பிரளய காலத்தில் வராகமாக வடிவெடுத்து பூமியினைத் தன் வளைந்த கொம்பால் தூக்கிக் காத்தவன். பாற்கடலின் கண் துயின்றான். இப்பெருமான் எழுந்தருளி அருள்புரியும் திருவயிந்திரபுரத்தில் தாமரைப்பூவின் தேனை அருந்தியபடி இசை எழுப்பும் வண்டுகளின் கூட்டம் கூத்தாடும் சோலைகள் பல உள்ளன. இவ்வண்டுகள் மது அருந்தும் எண்ணத்துடன் அங்குக் காணப்படும் செருத்திமரப்பூக்களில் திரண்டு வரும் சிறப்புடையன.

மின்னுகின்ற சக்கரத்தினைக் கையில் ஏந்தியவனாய், திருமகள் வாழும் மார்புடைய பெருமான், நான்கு வேதங்களில் சொல்லப்படும் பல பொருள்களானவன். இப்பெருமான் வீற்றிருக்கும் திருவயிந்திரபுரத்தில் மலைகளின் கண் நெருங்கிய குருக்கத்திப் பந்தலில் ஆண்வண்டுகள் தங்கள் பெடைகளின் வரவை எதிர்பார்த்தபடி தென்னா தெனா என்று இனிய இசையினை எழுப்பும் தன்மையுடையது.

ஏழுலகங்களையும் உண்டு ஆலந்தளிரில் கண்துயின்றமாயன், அடியவர்களுக்குத் தன் மெய்யுருவினைக் காட்டும் தெய்வநாயகன் இப்பகவானின் மெய்மைக்கு ஏற்ப திருவயிந்திரபுர மலைப் பகுதியில் குருக்கத்தி செண்பக மரத்தினைத் தழுவிக் காணப்படும். முல்லைக் கொடி காற்றில் அசையும், நீர்நிலைகளில் செந்தாமரை பூத்துக் குலுங்கும். இதுவே இப்பெருமான் உகந்து உரையுமிடம் என்று கூறியுள்ளார்.

## நரசிம்ம அவதாரம்

எதிர்த்துப் போர் செய்த இரணியாசுரனின் மார்பு இரு கூறுகள் ஆகும்படி பிளந்து, அவனுடைய மகன் பிரகலாதனுக்கு அருள்புரிந்த பகவானின் திவ்வியதேசம் திருவயிந்திரபுரம் ஆகும். இங்கு சாறு நிறைந்த கரும்புகளின் குருத்துகள் விண்ணைத் தொடும் அளவு வளர்ந்து நிழலினை நல்கும். கரும்புச்சாற்றின் சேறு கலந்த நீர்நிலைகள் காணப்படுகின்றன.

## வாமன அவதாரம்

மாவலியின் வேள்வியில் மண்ணின் பொருட்டு உலகளந்த பகவான் பூங்கொடி போன்ற நப்பின்னையைப் பெறுவதற்காக ஏழு எருதுகளுடன் போர் செய்தான். இப்பெருமான் எழுந்தருளிய திருவயிந்திரபுரத்தில் குரங்குக் கூட்டம் பொன் போன்ற பூக்களையுடைய வேங்கை மரத்திலும், கோங்கு, செண்பக மரக் கொம்புகளிலும் குதித்து ஓடிதேன் நிறைந்த பலாப்பழங்களை உண்டு மகிழும் என்பதை

**‘‘ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று**
**அகல் இடம் அளந்து, ஆயர்**
**பூங் கொடிக்கு இன விடை பொருதவன் இடம்**
**பொன் மலர் திகழ் வேங்கை,**
**கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு**
**குரக்கினம் இரைத்து ஓடி**
**தேன் கலந்த தண் பலங்கனி நுகர்தரு**
**திருவயிந்திபுரமே’’’**

எனக் கூறியுள்ளார்.

## இராம அவதாரம்

கூனல் உடைய மந்திரையின் கொடுஞ்சொல்லால் இளங்கொடி போன்ற சீதையுடன் கானகம் போன, கருமையான மேகம் போன்ற இராமன் வீற்றிருக்கும் ஊர் திருவயிந்திரபுரம். விண்ணில் உள்ள சந்திரனைத் தொடும் அளவு உயர்ந்த மலைகளையும், மதில்களையும்

இங்குக் காணலாம். தேனை உண்டவண்டுகள் உலாவும் சோலைகளால் சூழப்பட்டது இவ்வூர் ஆகும். மின்னலைப் போன்ற நுண்ணிய இடையினையுடைய மடக்கொடியான சீதைக்காக இலங்கை மன்னன் இராவணனின் பத்துத் தலைகளையும் பொடிப் பொடியாகச் சிந்திய இராமபிரானின் திவ்வியதேசம் திருவயிந்திரபுரம். இங்குக் காணப்படும் மலையின் நிழலில் அன்னங்கள் தன்னுடைய பெடைகளுடன் தாமரைப்பூவினை படுக்கையாகக் கொண்டு தங்கியிருக்கும் வயல்களில் உள்ள நெற்கதிர்கள் சாமரமாக வீசும் என்று கூறியுள்ளார்.

## கண்ணன் அவதாரம்

மணம் கமழும் கூந்தலையுடைய சீதையைப்பெற இராமன் வில்லை உடைத்தான். பெருமழையில் பசுக்கள் நோய்வாய்ப் படாதிருக்க கண்ணன் மலையைக் குடையாக எடுத்தான். இவ்வாறு அவதாரம் எடுத்த பெருமானின் திருத்தலம் திருவயிந்திரபுரம் ஆகும். இவ்வூரில் பாயும் ஆறு மலைகளுக்குச் சிறப்புத்தரும் வகையில் யானையின் கொம்புகளையும், அகில் மரங்களையும் அடித்துச் சென்று ஓடி வயல்களில் பாயும் தன்மையது என்று உரைக்கிறது.

## பாரதப்போரில் தேரோட்டியவன்

கையில் வேலேந்திய துரியோதனாதியருடன் ஏற்பட்டபோரில், அர்ச்சுனனுக்காகத் தேரின் முன்பு கையில் கோல் ஏந்தி நின்ற எம்பெருமான் எழுந்தருளியுள்ள இடம் திருவயிந்திரபுரம் ஆகும். இங்கு

உள்ள மலைப்பகுதியில் வெற்றிலைக் கொடிகள் காணப்படும், கமுகுமரப் பாளைகளில் இருந்து மணம் பரவும் மீன்கள் ஓடும். அழகிய ஆறு வயல்களில் பாயும் தன்மையது.

திருமால், பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகிய மூவர்க்கும் உள்ளே உறைபவனாய், மூவுலகங்களையும் உண்டு உமிழ்ந்துகாத்து தேவர்களாலும், அசுரர்களாலும் பலபடியாகத் துதிக்கும் பெருமையுடையவன். திருவந்திபுரத்தில் உள்ள இத்தேவாதி தேவனை வேலேந்திய கலிகன்றி என்னும் திருமங்கை ஆழ்வார் பாடிப்பரவினார். இப்பத்துப் பாசுரர்களைப் பயில்பவரின் பாவங்கள் தொடராமல் தொலையும் என்பதை,

> **''மூவர் ஆகிய ஒருவனை மூவுலகு**
> **உண்டு உமிழ்ந்து அளந்தானை**
> **தேவர் தானவர் சென்று சென்று இறைஞ்ச, தண்**
> **திருவயிந்திரபுரத்து**
> **மேவு சோதியை வேல் வலவன் கலி**
> **கன்றி விரித்து உரைத்த**
> **பாவு தண் தமிழ்ப்பத்து இவைபாடிடப்**
> **பாவங்கள் பயிலாவே''[7]**

எனக்கூறியுள்ளார். இவ்வாறு பெரியதிருமொழி மூன்றாம் பத்தில் திருவந்திபுரத்தைப் பற்றிச் செய்திகள் பலவற்றையும், திருமால் அவதாரச் சிறப்புகளோடும் பாரதப்போர் நிகழ்ச்சியோடும் திருமங்கையாழ்வார் மிகச் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார்.

## பிற இலக்கியங்களில் திருவந்திபுரம்
## தேசிகப்பிரபந்தம்

காஞ்சி மாநகர் விளக்கொளிப் பெருமாள் சன்னதி அருகில் உள்ள துப்புலில் தேசிகர் அவதரித்தார். இவருடைய பெற்றோர் அனந்த சூரி, தோதாத்தியம்மை ஆவார். இவர் திருவேங்கடவனின் அருளால் தோன்றியவர். இவருடைய இயற்பெயர் வேங்கடநாதன் என்பதாகும். இருபது வயதிற்குள் ஆயகலைகள் அனைத்தையும் கற்றார். பின்பு திருமங்கை என்னும் மங்கையை மணந்தார். இவர் மாமா அப்புள்ளாரிடம் கருட மந்திரம் கற்றார். அதனை திருவந்திபுரத்தில் உச்சரித்து ஹயக்ரீவருடைய அருளைப்பெற்றார். இவர்தமிழில் பல நூல்களை எழுதியுள்ளார். அவற்றின் தொகுப்பே தேசிகப்பிரபந்தம் எனப்படும். அவற்றில் மும்மணிக்கோவையும், நவமணிமாலையும் திருவந்திபுரம் பற்றிய செய்திகளைக் கூறுவன. வேதாந்த தேசிகர் வடமொழியிலும் பல நூல்களை இயற்றிய பெருமைக்குரியவர்.

''வடமொழியில் தேவநாயக பஞ்சாசத்து என்னும் தோத்திரப்பாடலும், பிராக்ருதமொழியில் அச்யுதசதகம் என்ற தோத்திரப் பாக்களடங்கிய நூலும் இத்தலத்தைப் பற்றிப் பரக்கப்பேசுகின்றன''[8]. இவர் திருவந்திபுரத்தில் நாற்பதாண்டுகள் வாழ்ந்தார். ''திருவரங்கப் பெருமான் இவரது தமிழ் அன்பையும் அறிவையும் அறிந்து வியந்து இவருக்கு உபயவேதாந்தசாரியார் என்ற விருதுப் பெயரை ஈந்ததாகக் கூறுவர். உபயம் என்றால் இரண்டு அஃதாவது இருமொழிகளிலும் வல்ல வேதாந்த ஆசிரியன் என்பது

அதன் பொருள். அதிலிருந்து இவர் வேதாந்த ஆசிரியர் எனவும் வேதாந்த தேசிகர் எனவும் அழைக்கப்படலானார். தேசிகர் என்றால் ஆசாரியர், தேசிகர் என்னும் பெயர் பொதுவாக ஆசாரியர்கள் அனைவர்க்கும் உரித்தான பெயர் என்றாலும் இவர் பிறந்தபின் இவரையே குறிக்கும் சிறப்புப் பெயராக மிளிர்கிறது''[9]. இப்படிப் புகழப்படும் தேசிகர் இத்திவ்வியதேசத்தின் மீது பல இலக்கியங்கள் இயற்றியுள்ளதை நன்கு அறியலாம்.

## திருவந்திபுர மும்மணிக்கோவை

அடியவர்களுக்கு அருள்புரிவதில் மெய்யாய் விளங்குவதால் அடியவர்க்கு மெய்யன் என்று பெயர் பெற்று எங்களுக்கு ஞானக்கண்ணை அருள்கின்ற தெய்வநாயகனே! திருவாபரணங்கள் எல்லாம் நிறம் பெறுதற்பொருட்டு இந்திரநீலபர்வதம் போன்ற உன் திருமேனியின் ஒருபகுதியாகிய திருமார்பில் வந்து அமர்ந்து ஒளிபெறுகின்றது. இப்படிப்பட்ட திருமார்பில் பூமாலைபோல் பிராட்டி ஒருபோதும் பிரியாது வாழ்கின்றாள். நீ இவ்வுலகில் அவதரிக்கும் பொழுது அவளும் உன்தன்மைக்கு ஏற்ப அவதரித்து அருள்கின்றாள். அவள் ரத்தினதீபமாய் நின்று எங்களுடைய அஞ்ஞானத்தை நீக்குகின்றாள். அடியவர்களின் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து உன்னிடம் விண்ணப்பித்து அவர்களின் கர்மங்களைப் போக்குகிறாள். தன்னுடைய திருவடிகளைச் சரணடைந்த வர்களை உன் திருவடிகளில் சரணடையவைத்து உன் கருணையே வடிவு கொண்டது என்னும் படி காக்கின்றாள். இப்படி உனக்குப் பெருமையை நல்குகின்ற

திருமகள் உன்னோடு சிறிதுநேரமும் பிரியாது நிற்கிறாள் என்று கூறியுள்ளார்.

அடியவர்க்கு மெய்யன் திருமகளை நொடிப்பொழுதும் பிரியாது வாசம் செய்யும் தம் திருமார்பில் கௌஸ்தூபம் போன்ற ரத்தினங்களால் செய்யப்பட்ட ஆரத்தை அணிந்திருப்பது போல இந்த பிரபந்தத்தையும் மிக்க விருப்பத்துடன் தன்னுடைய திருமார்பில் அணிந்துள்ளார் என்பதை

**"திருமா லடியவர்க்கு மெய்யனார் செய்ய**
**திருமா மகளென்றுஞ் சேருந் - திருமார்பி**
**லின் மணிக் கோவையுட னேற்கின்றா ரென்றனிம்**
**மும்மணிக்கோவை மொழி"**[10]

என்று குறிப்பிட்டுள்ளார்.

உலகில் உள்ள எல்லாஜீவராசிகளும் பேசுகின்ற வாக்கியங்கள் எல்லாம், மூன்று வேதங்களின் பெருமையுடைய தன்மையது திருவந்திபுரம் ஆகும். இதில் தெய்வநாயகன் எல்லோரும் துதித்துவாழும் படி அவதரித்து, தன்னை அனுபவித்து உய்யுங்கள் என்று தன்னை முழுமையாகக் காட்டிக் கொண்டு அனுபவிப்பவர்களுக்கு அமுதக்கடலாய் நிற்கிறான். தன்னுடைய அருள் தன்மையால் எல்லார்மீதும் அருள் மழைபொழிகின்றான். அவனிடம் அளவிலாக் காதல் கொண்டதால் அவனை அணையவிரும்பி அது பெறாமையால் வருந்தினாள் தலைவி. இந்நிலையில் மன்மதன் தன் கரும்பு வில்லினின்று பூமழையைப் பொழிய வைத்து இன்னும் வாட்டுகிறானே என்று வருந்துவதாகக் கூறியுள்ளார்.

அடியவர்க்கு மெய்யனே! மழை பெய்யும்போது தோன்றி உடனே அழிகின்ற நீர்க்குமிழி போல் நிலையற்ற இவ்வுலகம் முழுவதும் பிரளயகாலத்தில் அழிந்த போதிலும் உன்குணங்களில் சிறுமாறுபாடின்றி நீ பிரகாசிக்கின்றாய். வேதங்கள் அனைத்தையும் ஆராய்ந்து பார்த்தால் திருமகளின் பதியான நீயே பரத்துவம் என்னும் படி நிற்கின்றாய். உனக்குப் பெருமை நல்கும் பிராட்டிக்கு நீ பெருமையைக் கொடுத்து சந்திரன் தன்னிலவுடன் பிரியாது இருப்பது போல் நீயும் பிராட்டியுடன் சேர்ந்து நின்று ஒளிர்கின்றாய். ஒருபோதும் அணையாத ரத்தின தீபமாக உலகிற்கு அறிவுச் செல்வத்தையளித்து. அடியவர்கள் அனுபவிக்கும் அமிர்தக்கடலாய் உள்ளாய். கடலில் பல வகையான ரத்தினங்கள் விளங்குவது போல் உன்னிடம் திருக்கல்யாண குணங்கள் பல காணப்படுகின்றன. இவற்றுள் சௌசீல்ய மென்னும் குணம் மிகுதியாகக் காணப்படுகிறது.

குடிமக்களின் பிழைகளைப் பொறுக்கும் மன்னனைப் போல் நீ அடியவர்களின் பிழைகளைப் பொறுத்துக்காத்தருள்கிறாய். எல்லா வகையிலும் உயர்ந்து விளங்கும் நீ மிகத்தாழ்ந்து நிற்கும் எம்போன்ற அடியவர்களுக்கு அருள்புரியும் பொருட்டு திருவந்திபுரம் வந்து அமர்ந்துள்ளாய். அபூர்வமான நீலரத்தினம் போல ஒளிவிடும் உன் திருமேனியில் எல்லாவகைத் தத்துவங்களையும் திருவாபரணங்களாகவும், திருவாயுதங்களாகவும் தரித்துக்கொண்டு வாசுதேவனாக வைகுண்டத்தில் வீற்றிருக்கிறாய். பக்தர்கள் வணங்குவதற்கு எளிதாக வாசுதேவன், சங்கர்ஷணன்,

பிரத்யுமனன், அநிருத்தன் என்னும் நான்கு வடிவங்களாயும் அவற்றில் இருந்து தோன்றிய கேசவன் போன்ற பன்னிரண்டு வடிவங்களுடன் அடியவர்களின் சரீரங்களில் நிற்கிறாய். சம்சாரிகளின் பாவங்களைப் போக்க மீன், ஆமை போன்ற பத்து அவதாரங்களை எடுத்தாய்.

அடியவர்கள் உன் திருமேனியைக் கண்டு வைகுண்டத்தில் அனுபவிக்கும் பரமானந்தத்தை இப்பூலகில் அனுபவிக்கும்படி செய்கிறார். உலகிற்கு எல்லாம் ஒரே ஆன்மாவாய் பிராட்டியோடு நிற்கும் நீ சேதநாசேதநங்களெல்லாம் தன் திருமேனியின் ஏகதேசத்திலே ஒட்டி நிற்கும்படி அவற்றைத்தாங்கி நின்று மகிழ்ச்சியடைகிறாய். கறந்த பாலுள் நெய் போல யாரும் அறியாதபடி அதனை அறிந்தவர்கள் மகிழும்படி அனைத்துப் பொருளிலும் காணப்படுகிறாய். இப்படிப்பட்ட பெருமையுடைய உன்னையன்றி எம்மைக் காக்க வேறு கதி இல்லை. உன்தன்மையைப்பேச வேதம் ஒன்றே துணிந்து முற்படுமேயன்றி மற்ற எதனாலும் முடியாது என்கிறார்.

நாம் பரிசுத்தமான வேதாந்தங்களில் மிகப் பரிச்சயம் செய்து எதனாலும் கலக்க இயலாத நிச்சய ஞானத்தைப் பெற்றோம். இதனால் எக்காலத்திலும் வேதங்களைப் பாராயணம் செய்யும் பிரம்மாவினாலும் அந்தவேதங்களால் போற்றப்படும் பெருமைபெற்ற தெய்வ நாயகனுக்கு நித்தியதாசராக நிற்கும் பெருமையடைந்தோம்.

தலைவிக்கு இறைவன் தன் வடிவினைக் காட்டி பின்பு உடனே மறைந்து விடுகிறார். இதனால் தலைவி

வருந்துகிறாள். இக்காரணத்தால் அவள் மெய்வேறுபடுகிறது. இதனைக் கண்டு தோழி பின்வருமாறு இரங்கி கூறுகிறாள். உயர்வுதாழ்வு பாராட்டாது எல்லோர்மீதும் கருணையாகிய நீரைப் பொழிந்து வாழ்விக்கும் பொருட்டு திருவந்திபுரத்தில் வீற்றிருக்கும் தெய்வநாயகனாகிய காளமேகத்தைக் கண்ட மயில் போன்ற தலைவி இப்பொழுது அந்த மேகத்தைப் பிரிந்து கண்ணீர் அரும்ப, உடல்வியர்க்க அச்சத்தால் மயிர்சிலிர்க்க, மேனிநடுங்க, வெட்கமுற்று வெய்யதாகப் பெருமூச்சு விடுகின்ற இந்நிலைமையைப் பார்த்து கேட்பவர்க்கு இது எதனால் தோன்றியது என்று கூறுவது என்கிறாள்.

அடியவர்க்கு மெய்யன் தம்மை மறைத்துக்கொள்ள அதனால் மனம் புண்ணாகிய தேசிகன் தன்மீது அவனுக்குக் கருணை இல்லை எனவும், அவனை அனுபவிக்க தமக்கு உரிமையில்லையா என்று கூறிப் புலம்புகிறார். இதனைக் கண்ட தெய்வநாயகன் தேசிகனை நோக்கி உம்முடன்யான் கலவாது நிற்பதற்கு இவை காரணமல்ல, மானிட அவதாரத்தில் மானிட முறையினை மீறாது நடத்தற் போல் அர்ச்சாவதாரத்தில் இம்முறையினை மீறாது உம்மோடு கலவாது உள்ளேன் என்று முன்பு காட்டாத சில குணங்களை காட்டுகிறார்.

அடியவர்க்கு மெய்யனே! உன்வடிவம் குணம் போன்றவற்றை அனுபவிக்கும்படி மெய் ஞானத்தை நீ எமக்கு நல்குவதால் தன்நிலவினால் உலகம் முழுவதும் பிரகாசிக்கச் செய்யும் குளிர்ந்த சந்திரனாக ஒளிர்கின்றாய். உலகில் பிரகாசமுள்ள பொருள்களுக்கு நீ கொடுத்த பிரகாசத்தின் கதிரைப்பெற்றுக் கொண்டு ஒளிர்வதால்

தேஜோமயன் என்றழைக்கப்படுகிறாய். உன் திருவடியில் அனைத்தையும் அடக்கியுள்ளதால் பெற்ற தாயாகக் காட்சியளிக்கிறாய். ஊழிக்காலத்தில் நீ தனியாக நின்று அசேதநம் போல உள்ள உயிரினங்களுக்கு சரீரம், இந்திரியம் போன்றவற்றைக் கொடுத்து படைத்துக் காப்பதால் அனைத்திற்கும் தந்தையாகக் காட்சியளிக்கிறான். ஒருபோதும் எம்மைக் கைவிடாது நின்று காப்பதால் அனைத்துவிதமான உறவாகவும் உள்ளான். உலகத்தில் உள்ள அற்ப இன்பங்கள் மோட்சத்தை விரும்பும் அடியவர்க்கு ஏற்றவை ஆகா. ஆதலால் நீயே எங்களுக்குத் தக்க துணையாகிறாய்.

நாங்கள் விரும்பும்படி எங்கள் மீது அருள்புரிந்து பலன் தருவதால் நீயே முக்கியமானவனாகிறாய். எங்கள் பாவங்களைப் போக்குவதால் நீ தர்மத்தின் வடிவாய் உள்ளாய். உனக்குச் சமமானவன் வேறொருவன் இல்லாததால் நீயே எங்களுக்குத் தகுந்த துணையாகின்றாய். எங்கள் மீது உனக்கு உண்டாகும் மனக்கலக்கத்தைப் போக்க வல்ல பெரிய பிராட்டி உன்திருமார்பில் எப்பொழுதும் வாசம் செய்தால் மனக்கலக்கம் நீங்கிப் பரிசுத்தமானவனாக உள்ளான். நீயே உலகம் தோன்றக் காரணமாகின்றாய். உயர்ந்த இடமாகிய வைகுண்டத்தை அளிப்பதால் நீ நினைத்ததைத் தரும் கற்பகத்தருவாகிறாய். வடிவம், குணம், விபூதி ஆகியவற்றில் ஒன்றிலும் ஓர் அம்சத்திலும் குறைவில்லாமல் இருப்பதால் நீயே சர்வேச்வரனாக ஒளிர்கின்றாய். எங்களுக்கு ஏற்படும் துன்பத்தைப் போக்குவதால் ஆனந்த வடிவாய்க் காட்சியளிக்கிறாய்.

எங்களுட் புகுந்து எங்களை வெளிப்படுத்தும் ஒலியாய் உள்ளாய். இவ்வுலகில் உனக்கு உரிமையல்லாத பொருள் ஒன்றும் இல்லையாதலால் எம்முடையதாகக் கொள்ளப்படும் பொருளுக்கும் நீயே தலைவனாகிறாய். உலகில் உள்ள தோஷம் எதுவும் உன்னிடம் இல்லாதிருப்பதால் திருக்கல்யாண குணங்களில் நீயே சிறந்து விளங்குகின்றாய். பிரளயக் காலத்தில் உலகம் முழுவதையும் உன் வயிற்றில் வைத்துக் காத்துப் படைப்பதால் நீயே சகல சக்தியையும் உடையவனாகின்றாய். இவ்வாறு வியக்கத்தக்க உன் பெருமையைப் பேச வேதங்களே முன் வரும்; எம்போன்றவர்களால் இயலாது என்கிறார்.

அடியவர்க்கு மெய்யன் திரிவிக்ரம அவதாரத்தில் இவ்வுலகினை ஓரடியால் அளந்து மற்றொரு திருவடியை பிரம்மலோகத்தளவு செல்லவிட்ட போது பிரம்மன் அந்த திருவடிக்குத் திருமஞ்சனம் செய்ய அச்சமயம் மகாமேருபர்வதம் அந்தத்தீர்த்தத்தை ஏந்தி நின்றது என்னே அவன் பெருமை! வேதங்கள் அவன் பெருமையைக் காணமுடியாது நிற்க. அவன் இப்பூமியில் அடியவர்களைக் காக்கின்ற எண்ணத்துடன் திருவந்திபுரத்தில் அவதரித்து அனைவர்க்கும் காட்சியளிக்கிறான். என்னே அவன் எளிமைத்தன்மை என்று கூறியுள்ளார்.

மலைகளில் காணப்படும் மருந்து மனிதனின் நோய் தீர்க்கிறது. திருவந்திபுரத்தில் ஔஷதமலையில் அடியவர்க்கு மெய்யனென்னும் மருந்து பாவங்களை போக்க வல்லதாம் என்ற இதன் அற்புதசக்தியைக் கேட்டு அந்த மருந்தை அடைய என்மகள் விரும்பினாள். தாமரை

மலரில் வசிக்கும் பெரிய பிராட்டியைப்போல என் மகளும் அடியவர்க்கு மெய்யனைப் பிரிந்து வருந்துகிறாள். வில் போன்ற அவள் புருவமும், தங்கக் கொடியைப் போன்ற அவள் மேனிகாண்பவரை அடிமையாக்கும். இத்தகையவளான என் மகள் தன்னுடைய காதலான அடியவர்க்கு மெய்யனது கலவியைப் பெறாமல் மயங்கியுள்ளாள் என்பதை,

> **''வெற்புடனோன்றி யயிந்தையில் வெவ்வினை தீர்மருந்தோன்**
> **றற்புதமாக வமர்ந்தனை கேட்டருள் வேண்டிநிற்கப்**
> **பற்றி லமர்ந்த செய்யான்படி காட்டிய பண்புடையெம்**
> **விற்புரு வக்கொடிக் கோர்விலங் காமயல் பெற்றனமே''[17]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

முதலையின் வாய்ப்பட்டுத் துன்புற்ற க்ஜேந்திரன் ஆதிமூலமே என்று அழைத்த பொழுது ஓடிவந்து அவனை காத்ததால் ஜகத்காரணன் என்ற பெயரை ஏற்றுக் கொண்ட அடியவர்க்கு மெய்யனே! அனைத்துப் பொருள்களையும் படைத்த உன்னை தக்க மார்க்கமாகவும், பலனாகவும் கொள்வர். பரமானந்தமாகிய மோட்சத்தை கொடுப்பவன் அவனே. வேறு எவர்க்கும் அதை கொடுக்கும் தகுதி இல்லை. நீ மற்றவருக்காக எதைச் செய்தாலும் அதன்பயனை அடைபவன் நீயே. அனைத்துப் பொருள்களும் உன் திருமேனியில் இருந்து தோன்றியவை. உன்னை வணங்குபவர்கள் உனக்கு சமமாகக் கருதப்படுவார்கள். உன்னிடம் பக்திக் கொண்டவர்கள் அன்றி மற்றவர்கள் உய்யவழியில்லை என்று குறிப்பிட்டுள்ளார். இப்படி பத்துப்பாடல்களில்

இறைவனைப் பற்றியும் அவன் எழுந்தருளியுள்ள திருவந்திபுரத்தையும் புகழ்ந்து பாடியுள்ளார். இவற்றில் பின் இருபது பாடல்கள் மறைந்து விட்டன என்பர்.

## திருவந்திபுரமும் நவமணிமாலையும்

இதனை நவரத்தினமாலை என்றும் அழைப்பர். இதற்கு இறைவன் நவமணிமாலை என்ற பெயரிட்டதாகக் கூறப்படுகிறது. பல்வேறு நிறமுடைய மணிகளால் செய்த ஆரம்போன்று பல செய்யுள்களால் அமையப்பெற்ற ஒன்பது செய்யுள்களையுடையது. ஆகையால் இது நவமணிமாலை எனப்பெயர்பெற்றது.

அடியவர்களுக்கு மெய்யனாக விளங்கும் தெய்வநாயகனின் இரண்டு திருவடிமலர்களும் அவற்றைவிட வேறு பலனை எதிர்பாராத ஆசார்யர்களின் உள்ளத்தைக் கவர்ந்து தியானிக்கச் செய்யும் பெருமை பெற்றது. திரிவிக்ரம அவதாரத்தில் உலகத்தை உன்னுள் அடக்கி நின்றாய். சடையினை உடையவன் என்று கூறப்படும் சிவன் தன் சடைமுடியில் கங்கையைப் பிறப்பித்தான். கிருஷ்ண அவதாரத்தில் காளிங்கன் என்னும் பாம்பின் மேல் நடனம் ஆடினாய். அடியவர்களின் துன்பம் நீங்க உறுதுணையாய் உள்ளாய். தர்மனின் வேண்டுகோளினை ஏற்று துரியோதனிடம் தூது செல்ல இசைந்தாய். கண்ணனை அழிக்க வந்த சகடாசூரனை துகள்கள் ஆகும்படி செய்தாய். சம்சார பந்தத்தை அறுக்கும் அடியவர்கள் பருகும் அமுதம் என்று உன்னை சாத்திரங்கள் கூறுகின்றன.

பெரிய பிராட்டி தன் கைகளால் வருடும் போது அதனோடு இணைந்து இருந்தாய். எப்பொழுதும் திருத்துழாய் மணம் வீசும் படி இருந்தாய். இரத்தினங்களைக் கொண்ட சிலம்புகள் உன்னுடன் சேர்ந்து அழகு பெறுவதற்காகப் பிரகாசித்தன. இராம அவதாரத்தில் கௌதமரின் சாபத்தால் கல்லாய் நின்ற அகலிகையை உயிர்பெற்று எழச் செய்தாய். வேதங்களால் போற்றப்பெறும் தன்மையுடையை ஆனாய். திரிவிக்ரம அவதாரத்தில் பிரம்மலோகம் சென்ற போது பிரம்மா உனக்கு திருவாராதனை செய்து தன்தலையில் ஏற்று நிற்க அதற்கு மேல் உயர்ந்து நின்றாய். இப்படிப்பட்ட திருவடியினை உடைய நீ அனைவரும் அத்திருவடியை அனுபவித்து மகிழும்படி திருவந்திபுரம் வந்து அவதரித்தாய் என்று கூறியுள்ளார்.

அடியவர்க்குமெய்யனே! ஊழிக்காலத்தில் ஹயக்ரீவன் என்னும் அசுரன் வேதங்களைக் கொள்ளை கொண்டு கடலினுள் சென்ற போது நீ மச்சாவதாரம் எடுத்து அவனைக் கொன்று வேதங்களை மீட்டுக்கொடுத்தாய். தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது மத்தாக இருந்த மந்தரமலை நீரில் மூழ்கும்போது அதனை ஆமைவடிவு எடுத்து முதுகினில் தாங்கினாய். இரண்யாட்சன் என்னும் அரக்கன் பூமியை பாயாகச் சுருட்டி எடுத்துக்கொண்டு கடலினுள் புகுந்தான் அப்போது வராக அவதாரம் எடுத்து அவனைக்கொன்று பூமியை மீட்டாய். உன்னுடைய பக்தன் பிரகலாதன் திருமால் எங்கும் உள்ளான் என்று கூறினான். அதனை மெய்யாக்க அவன் தந்தை இரண்ட கசிபுவின் மார்பைப் பிளக்க தூணிலிருந்து நரசிம்மனாய்

வெளிப்பட்டாய். தேவர்களின் ஆட்சியைப் பிடித்த பலிச்சக்ரவர்த்தியின் யாகத்தில் வாமன அவதாரம் எடுத்து மூன்றடிமண்கேட்டு திரிவிக்ரம அவதாரம் எடுத்து ஆட்சியை மீட்டருளினாய். பரசுராம அவதாரத்தில் பகையை முறியடித்தாய். சக்ரவர்த்தித்திருமகனாய் அவதரித்து இராவணனின் தலைகளைச் சிந்துவித்தாய். பலராமனாய் அவதரித்து பிரலம்பாசூரனை அழித்தாய். கண்ணனாக அவதரித்து கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து உயிரினங்களைக் காத்தாய்.

வெள்ளை நிறக்குதிரையின் மீது கல்கியாக அவதரித்து கலியால் வரும் துன்பத்தை போக்கப் போகிறாய். கொடிய வினைகளைத் தீர்க்கும் மருந்தாக ஔஷதமலையில் வீற்றிருக்கிறாய். அம்மலையின் பக்கத்தில் உள்ள கருடநதியின் நீரோட்டத்தைக் கண்டு மகிழ்கிறாய். பிரம்மதேவனுக்கு அனைத்து வேதங்களையும் உபதேசித்தாய். உன் திருவடிகளில் சரணடைந்த கருடனுக்கு நற்பதவியாக உன்கொடியாக உயர்த்தினாய். உனக்குப் பாதுகையாகவும், படுக்கையாகவும் இருந்து ஊழியம் செய்யும் திருவனந்தாழ்வான் உன் திருவடிகளை வணங்கி நிற்க அதனால் மகிழ்ச்சியடைந்த நீ அவனுக்கு அருள் செய்தாய். பூமிதேவிக்கு பாரமாக உள்ள பகைவர்களைக் கொன்று சுமையை குறைத்ததனால் அவள் வணங்கி நின்றாள். இதனால் மிகவும் மகிழ்ச்சியடைந்தாய் என்று கூறியுள்ளார்.

சிவனருள் பெற்ற அசுரர்கள் அந்தணர்களையும் தேவர்களையும் வருத்தினர். இதனைக் கண்ட தேவர்கள் எம்பெருமானைச் சரணடைந்தனர். இதனால் பெருமான்

பௌத்த வேடம் பூண்டு அவர்களுக்குத் தர்மத்தில் உள்ள சிரத்தையை உணர்த்தமுற்பட்டார் இயலாமையால் அவர்களை நரகில் வீழச் செய்தார். இடையர்கள் கோவர்த்தன மலையை பூசித்ததைப் பொறுக்காத இந்திரன் கல்மழையை பொழிவித்தான் அப்போது தன் சுண்டு விரலினால் கோவர்த்தன மலையைத் தூக்கி காத்தார். இராம அவதாரத்தில் கடல் அரசனை நடுங்கவைத்தாய். இப்படிப்பட்ட தெய்வநாயகன் அடிவர்கள் செய்த பாவங்களைப் போக்கியருள்கிறான்.

திருமேனியின் பிரகாசத்தில் நிகரில்லாதவனாய் நறுமணம் மகழும் கூந்தலையுடைய பெரிய பிராட்டியின் நாயகனாகவும் விளங்கும் தெய்வநாயகன், மாசி மாதம் மகநட்சத்திரத்து அன்று கடலில் நீராடி மணம் வீசுகின்ற வளம்மிக்க சோலையில் மகிழ்ச்சியுடன் எழுந்தருள்கின்றான் என்கிறார்.

இளம்பருவத்தில் தொட்டிலில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தபோது அழிக்க வந்த சகடாசூரனை திருவடியால் உதைத்து அழித்தவனே! ஏழுலகங்களையும் ஊழிக்காலத்தில் அழித்து படைப்புக் காலத்தில் தோற்றுவித்து திரிவிக்ரம அவதாரத்தில் அளந்தவன் நீயே! அடியவர்களுக்கு மெய்யாய் விளங்கும் பெருமான் திருவந்திபுரத்தில் எழுந்தருளியிருக்கும் தெய்வநாயகனே ஆவான்.

செல்வத்தாலும் காமத்தாலும் வரும் தீங்குகளை நினைத்து அவை எனக்கு தகுந்தவை அல்ல என்று அறிந்து புறக்கணித்தேன் இப்பொழுது உனக்கு தொண்டு செய்வதையே நல்ல பயனாகக் கொண்டேன். அஞ்ஞானமும் விபரிதஞானமும் நிரம்பிக் காணப்பெறும்

என் அந்திம காலத்தில் நான் உன்னை நினைக்கா விட்டாலும் இப்பொழுது வணங்குவதைக் கண்டு அஞ்ஞானமாகிய எதிரியை ஒடுக்க வல்ல திருவாழியாழ்வானையும், ஞானத்தைக் கொடுக்க வல்ல திருச்சங்கையும் ஏந்தி நின்று எனக்கு அருளவேண்டும் என்று கூறியுள்ளார்.

அடியவர்க்கு மெய்யனே! முன்பு கிருஷ்ணனாக அவதாரம் எடுத்தபோது பூதனை, சகடாசூரன், மல்லர், குவலாயபீடம், கம்சன் போன்றவர்களைக் கொன்று பூமிக்கு இந்தப் பகைவர்களால் நேர்ந்த பாரத்தைக் குறைத்து சாதுக்களைக் காத்தாய். இப்படிப்பட்ட நீ இடைச்சேரியில் கோபாலனாய் நின்று உலகத்திற்கு உன் எளிமைத் தன்மையைக் காட்டினாய். திருவந்திபுரத்தில் எழுந்தருளி வாசம் செய்யும் ஒரு காளமேகம் என்று வியந்து அனைவரும் பேசும்படி அடியார்களின் மேல் கருணையெனும் நீரைப் பொழிந்து நிற்கும் உன் வண்மைக்குணத்தை என்னென்று சொல்வது மைமலையினைப் போலும் காயம்பூவினைப் போலும் நிறமுடைய உன் திருமேனியழகை மறக்காமல் அனுபவிப்பவர் மறுபிறவியை நீக்கிக் கொள்வர் என்று குறிப்பிட்டுள்ளார்.

மைக்குவியல், கம்பீரமான கடல், பல நிறங்கலந்த மயில், நீரை சொரியும் மேகம், நீலரத்தினங்கள், கருநெய்தற்பூக்கள் ஆகிய இவையனைத்தையும் போன்று திருமேனியினைக் கொண்டுள்ள தெய்வநாயகனே! உன் திருவடியைச் சரணடைந்தேன். முன்கையிலுள்ள சக்கரத்தால் முதலையிடம் சிக்கிய கஜேந்திரனைக் காத்ததுபோல் என் அந்திம காலத்தில்

யமனின் படர்கள் என்னை கொண்டு சென்று துன்புறுத்தாதபடி எனக்கு அடைக்கலம் கொடுத்து காப்பாயாக என்று கூறியுள்ளார். இதனை,

> **"மையுமா கடலு மயிலுமா மறையு**
> **மணிகளுங் குவளையுங் கொண்ட**
> **மெய்யனே யடியோர் மெய்யனே விண்ணோ**
> **ரீசனே நீசனே னடைந்தேன்**
> **கையு மாழியு மாய்க் களிறுகாத்தவனே**
> **காலனார் தமரெனைக் கவரா**
> **தையனே வந்தன் றஞ்சலென்றருடென்**
> **னயிந்தைமா நகரமர்ந்தானே"**[12]

என்று குறிப்பிட்டுள்ளார்.

மேகங்கள் தங்கும்படி உயர்ந்து விளங்கும் சோலைகள் காணப்பெறும் திருவந்திபுரத்தில் எழுந்தருளி அடியவர்களின் அஞ்ஞானத்தைப் போக்கும் அடியவர்க்கு மேய்யனே! முன்பு இந்திரன் பெய்வித்த கல் மழையில் இருந்து கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து பசுக்களை காத்தாய். உண்மையே பேசும் பாண்டவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப அவர்களுக்குத் தூது சென்று காப்பாற்றினாய். போர்க்களத்தில் அர்ச்சுனன் போரிட முடியாமல் வருந்திய போது தேர்ப்பாகனாயிருந்து நெறிப்படுத்தியமையால் உன்பெருமை மிகுதியாய் நிலைப்பெற்றுள்ளது. இப்படி அடியவர்களை துன்பகாலத்தில் காத்தருளினாய். இவற்றை நினைத்து உன்னைச் சரணடைந்த என்னை யமனுடைய படர்கள் வந்து பாசக்கயிற்றை வீச அதன்

காரணமாகத் தளர்ந்து வீழ்வதற்கு முன்பு எனக்கு அடைக்கலம் தந்து காக்க வேண்டும் என்கிறார்.

தெய்வநாயகனே! உன்திருவுள்ளத்திற்கு ஏற்ப காரியத்தைச் செய்வதாய் உறுதி கொண்டு சேதநனுக்கு அவன் செய்த அபராதங்கள், அஞ்ஞானம், விபரீதஞானம், அக்னிபோல் வளர்ந்து ஓங்கும் தன்மையுடைய காமம், கர்வம், போன்ற அனைத்தும் ஒழிந்து போகும் என்மனம் அத்தகைய நிலையைப் பெறாமல் இருக்கிறது. இருப்பினும் பிறருடைய துன்பம் காணச் சகியாத உன் கருணையால் என்னைக் காக்க வேண்டிய பொருளாகக் கொண்டு உன் திருவடியில் சேர்ப்பித்து கொள்ள வேண்டும். இதுவன்றி அடியேன் வேண்டுவது யாது உளது? ஏதும் இல்லை என்று வணங்குகிறார் என்று கூறியுள்ளார்.

பெருமையில் சிறந்து விளங்கும் திருவந்திபுரத்தில் எழுந்தருளியுள்ள தெய்வநாயகன் வேதங்கள் சொல்லும் பொருள்களை தோத்திரவடிவமாகப்பாடும்படி அடியவனைப் பணித்தாய். அதனைத்தலைமேல் கொண்டு அவன் திருவடிகளின் அனைத்து மொழிகளுக்கும் தாய்மொழியாகிய சமஸ்கிருதத்தில் தேவநாயகபஞ்சாசத் என்னும் தோத்திரமும், கலைமகளின் மழலைச் சொல்லாக மனம் கவரும் பிராக்ருத மொழியில் அச்யுதசதகம் என்னும் தோத்திரமும், செழுமையான தமிழில் மும்மணிக் கோவையும் பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல், நவமணிமாலை ஆகியவற்றையும் பாடி அவனது கட்டளையை நிறைவேற்றினேன். பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல் ஆகிய பிரபந்தங்கள் காலத்தால்

அழிந்துவிட்டன. இவையே நவமணிமாலையில் கூறப்படும் செய்தியாகும்.

## வடமொழியில் தேவநாயகபஞ்சாசத்

திருவந்திபுரத்தில் எழுந்தருளியுள்ள தேவநாதனின் பொருட்டு இயற்றப்பெற்ற நூல்களில் தேவநாயக பஞ்சாகத் என்பதும் ஒன்றாகும். இது வடமொழியில் இயற்றப்பெற்றது ஆகும். "ஸ்ரீதேவநாதன் விஷயமாக ஸ்ரீதேசிகன் செய்தருளிய ஸ்தோத்ரங்களுக்குள் தேவநாயக பஞ்சாசத் என்கிற ஸ்தோத்ரமே முதலில் செய்யப்பட்டது"[13]. ஐம்பத்துமூன்று சுலோகங்களைக் கொண்டது இந்நூல். இது தேவநாதனின் திருமுடி முதல் திருவடிவரை உள்ள அவன் பெருமையினை விளக்குவதாகும்.

தேவநாதனின் திருமேனியின் அழகை பதினைந்து சுலோகங்களில் கூறியுள்ளார். திருவபிடேகம், திருமுகம், திருக்கண்கள், புருவங்கள், திருவதரம், திருமார்பு, திருக்கைகள், சங்கம், சக்கரம், திவ்வியபீதாம்பரம், திருவடி, அதன் விரல்கள், நகங்கள் சகல அங்கங்கள் அவற்றில் உள்ள ஆபரணங்கள் என்று எல்லாவற்றையும் முப்பது சுலோகங்களில் எடுத்துக்கூறி வர்ணித்துள்ளார். பின்பு வரும் சுலோகங்கள் நாயகி பாவத்தில் தன் மனதில் உள்ளவற்றை வெளிப்படுத்தும்படி அமைந்துள்ளது. இப்படி திருவந்திபுர இறைவனை தேவநாயக பஞ்சாசத்தில் வர்ணித்துள்ளார்.

## பிராக்ருத மொழியில் அச்யுதசதகம்

தேவநாதனைப் பற்றி பிராக்ருத மொழியில் இயற்றப்பெற்ற நூல் அச்யுதசதகம் ஆகும். ''அச்சுதன் எனறால் தன் அடியவர்களை நழுவவிடாதவன். ஸ்ரீ தேவநாதனுக்கு அச்சுதனென்றும் ஓர் திருநாமம் உண்டு. அத்திருநாமத்தைச் சொல்லியழைத்து ஸம்போதனமாக அருளிச் செய்திருக்கிறார் ஸ்வாமி தேசிகன் இந்தத்துதியை''[14] இந்நூல் தேவநாதனின் பெருமை கூறும் சுலோகங்களைக் கொண்டுள்ளது. பிராக்ருதம் என்பது வடமொழியின் ஆதி வடிவம் என்பர். சரஸ்வதி தேவி குழந்தைப் பருவத்தில் பேசிய மழலை மொழியே பிராக்ருதம் என்பர் தேசிகர்.

அச்யுதசதகம் நூற்றியொரு சுலோகங்களைக் கொண்டு உள்ளது. இதில் ஒன்று முதல் இருபத்து எட்டுவரையுள்ள சுலோகங்கள் தேவநாதனுடைய பெருமையைப் பேசுகின்றன. இருபத்தொன்பதிலிருந்து நாற்பத்திஐந்துவரை உள்ளவை அவன் திருமேனியின் அழகைக் கூறுகின்றன. நாற்பத்துஆறு முதல் எழுபத்துரெண்டு வரை காணப்படுபவைகளில் பாகவதர்களின் தன்மை பேசப்படுகிறது. எழுபத்துமூன்று முதல் நூறு வரை உள்ளவை தேவநாதன் பலவடிவில் தம்மை அனுக்கிரகிக்க வேண்டுமென்று வணங்கி நாமும் அவனை அப்படி வேண்டவேண்டும் என்று கூறுவதாக அமைந்துள்ளது. நூற்றியோறாவது சுலோகம் அச்யுதசதகம் கற்றவர் அடையும் பயனைக் குறிப்பிட்டுள்ளது.

இதனை தேசிகர் அன்பு அதிகரித்த நிலையில் நாயகி பாவத்தில் பாடியுள்ளார். இதுதவிர ஔஷதமலையில் பரிமுகப் பெருமாள் மீது ஹயக்ரீவ தோத்திரத்தையும் இயற்றியுள்ளார். இது சமஸ்கிருத மொழியில் அமைந்துள்ளது. இப்பரிமுகப் பெருமாள் கல்விக் கடவுள் என்பர். இவர் பொருட்டு முப்பதுமூன்று சுலோகங்களைக் கொண்ட ஹயக்ரீவ தோத்திரம் இயற்றப்பட்டுள்ளது. அவற்றில்,

**''ஞானனந்த மயம் தேவம் நிர்மலஸ்படிகாக்ருதிம்**

**ஆதாரம் ஸர்வ வித்யாநாம் ஹயக்ரீவ முபாஸ்மஹே''**[15]

என்னும் முதல் சுலோகம் அனைவராலும் பொதுவாகக் கூறப்படுகிறது. ஞான மயமாக மாசில்லாப்படிகம் போல் காணப்படுபவர் இந்தத் தேவன். எல்லாக் கலைகட்கும் அதிபதியானவர் ஹயக்ரீவர் ஆவார். இந்த அவதாரத்தில் இவ்விறைவன் பின் வருமாறு போற்றப்படுகிறார்.

சந்திரமண்டலம் போன்ற வெளுத்த திருமேனி, பஞ்சாயுதங்கள் ஏந்திய நான்கு கைகள், குதிரை முகம், நீண்ட காதுகள், வேத மத நுரைவழியும் வாய், கருணை ததும்பும் விழிகள், பீதாம்பர ஆடை அணிந்து பெரிய பிராட்டியை மார்பில் கொண்டுள்ளபடி உள்ளார். இப்படி இறைவன் பெருமை கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

## நூற்றெட்டுத் திருப்பதிக்கோவை

நூற்றெட்டுத் திருப்பதிகளை வகுத்துக் கூறும் வைணவநூல்களில் முதலாவதாகத் தோன்றியது இந்நூலே ஆகும். இதன் ஆசிரியர் அமுதனார். இவர்

தொண்டைநாட்டுத் திருப்பதிகளுடன் நடுநாட்டையும் குறிப்பிட்டுள்ளார். இதில் திருவந்திபுரம் இடம் பெற்றுள்ளது. இதனை

"பொறுக்கும் புகழ்த் தொண்டைநாட்டில் - எறிக்கும்
அயிந்திரபுரம் கோவலூர் அம்பொன்மதிட்கச்சி
வியன்றிரு அத்தியூர் வெஃகா - குயின்ற
பரமேச விண்ணகரம் பாடகம் மாடத்
திரண்மேய சீர்த்திருத்தண்கா - உரண்மேய
நீரகம் வேளுக்கை நிலாத்திங்கள் துண்டம் சொற்
காரகம் கார்வானம் கள்வனூர் - ஊரகமே
மட்டவிழுஞ் சோலைசூழ் எவ்வுள் மறைபயிலும்
அட்ட புயகரமா மாதிநகர் - சிட்டர் தொழ
நின்றவூர் புட்குழி நீடுதிருநீர்மலை
என்று மகார் இடவெந்தை - துன்று
கடன்மல்லை யம்பொற் கடிகைச் சிலம்பு
திடமாந் திருவல்லிக்கேணி"[16]

என்று குறிப்பிட்டுள்ளார். இதனால் பழமையான இலக்கியங்களிலும் திருவந்திபுரம் இடம்பெற்றுள்ளதை அறியலாம்.

## நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி

இந்நூல் அஷ்டப்பிரபந்தங்களுள் ஒன்றாகும். இதனை இயற்றிய பெருமை பிள்ளைப் பெருமாள் ஐய்யங்காரைச் சேரும் . இவர் திவ்வியகவி, அழகிய

மணவாளதாசர் எனவும் அழைக்கப்படுவார். இவர் பன்னிரண்டாம் நூற்றாண்டின் திருமங்கையில் பிறந்தவர். இவர் வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டிலும் நல்ல புலமையுடையவர் அஷ்டப் பிரபந்தத்தில் மொத்தம் எழுநூற்றுதொண்ணூறு பாடல்கள் காணப்படுகின்றன. அடியவர்கள் நூற்றியெட்டுத் திருப்பதியையும் அங்கு வீற்றிருக்கும் எம்பெருமானையும் பாடிப் பெரும்பயன் பெறவேண்டும் என்பதற்காகவே இந்நூல் இயற்றப்பட்டது. இதில் நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டையும் பாடியுள்ளார். இதில் திருவந்திபுரம் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்.

**"அன்பு அணிந்த சிந்தையராய் ஆய்ந்த மலர்தூவி**
**முன்பணிந்து நீர் எமக்கு மூர்த்தியரே - என்பர்**
**எம் ஐயிந்திரபுரத்தார்க்கு இன்தொண்டர் ஆனார்**
**தமை இந்திர புரத்தார் தாம்"[17].**

என்பதன் மூலம் திருவந்திபுரத்தில் எழுந்தருளிய தெய்வநாயகன் நல்லடியார் ஆனவர்கள் தேவேந்திரனின் அமராவதி என்னும் நகரில் வாழும் தேவர்கள் பக்தி பூண்ட மனமுடையவராய் அவர்கள் மீது ஆராய்ந்து தோற்றுவித்த சிறந்த கற்பக மரத்தின் மலர்களைச் சொரிந்து அவர்களுக்கு முன்னே சென்று வணங்கி நீவிர் எங்கட்குத் தெய்வமாவீர் என்று கொண்டாடுவார்கள் என்பதனை அறியலாம்.

## நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ்

முருகன் கோயில் கொண்ட தலங்களைப் பற்றி அருணகிரிநாதரால் பாடப்பெற்ற திருப்புகழ் போன்று,

திருமால் எழுந்தருளியுள்ள நூற்றியெட்டுத் திருப்பதிகளைப் பற்றி, குரவை இராமானுசதாசரால் பாடப்பெற்ற பாடல்களின் தொகுதிக்கு நூற்றெட்டுத் திருப்பதித்திருப்புகழ் என்பது பெயராகும். ஆசிரியர் பற்றிய குறிப்புகள் எதுவும் புலப்படவில்லை. இதில் நடுநாட்டுத் திருப்பதிகளைப் பற்றிய திருப்புகழ்கள் மிகவும் அழகாகக் கூறப்பட்டுள்ளன. இவை அளவில் விரிந்து காணப்படுகின்றன. திருவந்திபுரம் பற்றி இதில்

> **"சிறை கறங்களிகள் விளரிபண் கெழுமு**
> **துழனி பொங்கியெழு கழனி மிஞ்சிவளர்**
> **திருவயிந்திரபுர மிக விளங்க வருபெருமானே"**[18]

என்று குறிப்பிட்டுள்ளார்.

## மதுரகவி சேரநாட்டுத் திருப்புகழ்

மதுரை மாவட்டம் கம்பம் பள்ளத்தாக்கில் காணப்படும் அனுமந்தன் பட்டியில் தோன்றியவர் மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார். இவர் ஒரு லட்சத்திற்கும் அதிகமான பாடல்களைப் பாடியுள்ளார். திருப்புகழ்ச் சந்த வகையைப் பயன்படுத்திப் பல கவிதைகள் பாடியுள்ளார். சேரநாட்டிலும், நடுநாட்டிலும் கோயில் கொண்டுள்ள பெருமாள், பிராட்டி மீது முப்பத்தாறு பாடல்களை இயற்றியுள்ளார். மலைநாட்டுத் திருப்புகழ்களும் நடுநாட்டுத் திருப்புகழ்களும் மதுரகவி சேரநாட்டுத் திருப்புகழ் என்ற தலைப்பில் வெளிவந்துள்ளன. இதில் நடு நாட்டுத் திருப்புகழில் திருவந்திபுரம் பற்றிய இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் சந்தநயம் மிக்கவையாகும். இதனை,

**"தந்தன தனன தந்தன தனன**
**தந்தன தனன தனதான**
**குங்கும களபசந்தன மருவு**
**கொங்கைக ளைசய வருமாதர்**
**குண்டல மதிய மண்டல வதன"**[19]

கூந்தலையுமுடைய பெண்கள் மயில்போன்றோர். இவர்களின் விழிகள் இரு மீன்கள் தங்கியுள்ளது போன்று காணப்படும். வேலினால் தளர்ச்சியற்று, மை போன்ற மேனியுடன் மேகம் போன்று விளங்கி அருள்புரிவாய் இருள்நிறைந்த அம்புகளுடன் போர் புரியும் அசுரர்களை அழிக்க அவதாரம் எடுத்தவனே! தண்டாயுதம் சக்ராயுதம் போன்றவற்றைக் கொண்டுள்ளவனே, பாம்பைக் கழுத்தில் அணிந்து சிவன் யாசிப்பதைத் தெளிவாக விளக்குவோனே, தென்னை மரபிஞ்சுகளும், மருதமரங்களும், கொன்றை மரங்களும், இலவமரங்களும், செண்பகமரக்காடும் மிகுதியாகச் சூழ்ந்து அழகைத் தரும் திருவஹீந்திரபுரப்பதியில் மகிழ்ச்சியுடன் வந்து வீற்றிருக்கும் மகாவிஷ்ணு எனப்படும் திருமாலே அன்புடன் அருள்வாய் என்று கூறியுள்ளார்.

அரிய பல நூல்களை அன்பர்கள் விருப்பத்திற்கு ஏற்ப பல்வகை யாப்புகளால் இவர் கேட்ட இடத்திலேயே கேட்ட மாத்திரத்திலே இயற்றும் இயல்புடையவர். அவ்வாறு இயற்றிய நூல்களைத் தமக்காகப் பிரதி எடுத்து வைத்துக் கொள்ளும் பழக்கத்தை இவர் மேற்கொள்ளவில்லை என்பர். "பாடிய இடத்தில் அந்த அன்பர் வசமே கவிதைகளை விட்டுச் செல்லும் மரபை

மதுரகவியார் கைக் கொண்டிருந்தார். இதனால் நூல்களின் பெயர், கவிதைகளின் எண்ணிக்கை மட்டுமே தெரியவருகின்றன. மூலப் பிரதிகள் கிடைக்கவில்லை. பல நூல்களுக்கும் விபரம் பெயர் முதலியன தெரியவும் இல்லை''[20]. இவர் திருவந்திபுரம் பற்றி அயக்ரீவர்மாலை, தேவநாதன்மாலை, தேசிகன் மாலை போன்றவற்றை எழுதியுள்ளார் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆனால் இவற்றிற்கான பாடல்கள் இன்னும் கிடைக்கவில்லை. இனிமேல் இவை கிடைப்பதற்கு வாய்ப்புகள் இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

## திருப்பாதிரிப்புலியூர்ப்புராணம்

இந்நூல் திருப்பாதிரிப்புலியூர் பற்றியும் அங்கு எழுந்தருளியுள்ள பாடலீஸ்வரப்பெருமான் பற்றியும் விரிவாக எடுத்துரைக்கும் நூலாகும். இதனை இலக்கணம் சிதம்பரநாத முனிவர் என்பவர் பாடியுள்ளார். இந்நூல் வைணவத்திருப்பதியான திருவந்திபுரம் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இந்நூலில் தலவிசிட்டச் சருக்கம்.

**''துங்கவானிவே யயிந்திரம் கெடிலமேற்சொல்லும்''**[21]

என்று கூறப்பட்டுள்ளது.

## வைணவ ஆசாரியர்கள்

இந்நூல் குருபரம்பரபிரபாவம் என்ற மணிப்பிரவாள நூலின் மொழிபெயர்ப்பாகும் என்பர். இதனை டி.எஸ். ராஜகோபாலன் தமிழில் எழுதியுள்ளார். இதில் மணவாளமாமுனிகள், வேதாந்ததேசிகர் போன்றவர்கள் பற்றியும், வைணவர்களின் தன்மைபற்றியும் விரிவாகக்

கூறப்பட்டுள்ளது. வேதாந்ததேசிகர் என்னும் தலைப்பில் உள்ள பாடல்களில் திருவந்திபுரம் பற்றிப் பதினொரு பாடல்கள் உள்ளன. இவற்றில் இங்கு வீற்றிருக்கும் இறைவனின் சிறப்புகளையும், அவன் அருட்திறத்தையும் அழகாகக் கூறியுள்ளார். இதன் மூலம் இப்பதியின் பெருமையினை நன்கு அறியலாம். பாவத்தை நீக்கும் கருட நதியையுடைய திருவந்திபுரம் சென்ற தேசிகன், மிகவும் பரிவோடு பிரம்மன், சிவன், விஷ்ணு ஆகிய மும்மூர்த்திகளில் ஒருவனாக விளங்கும் விஷ்ணுவின் திருவடிகளில் தேன்நிறைந்த மலர்களைத் தூவி வணங்கிவிட்டு, ஔஷதம் என்னும் மலையில் வீற்றிருக்கும் யோகநரசிம்மனைத் தொழுதார் என்று முதல் பாடலில் கூறியுள்ளார். இதனை,

**''அகமேய விக்கு மொருநீர ணைக்கு**
**மயிந்தையு குந்த புலவன்**
**மிகுமாத ரத்தில் விதிமால னீச**
**னுருவாய மேல னடிபால்**
**உகுதேன்ம லர்கள் தமையிட்டி றைஞ்சி**
**யுயரௌட தத்தி னுரையால்**
**தகையேறு குன்று தனிலுற்று யோக**
**நரசிங்கன் தாள்கள் தொழுதான்''**[22].

என்று கூறியுள்ளார். இப்படியாக பின்வரும் பாடல்களில் தேசிகன் கருடதரிசனம் பெற்றது, ஹயக்ரீவர் அருள் பெற்றது பின்பு ஞானம் பெற்று அவர் இயற்றிய நூல்களின் விபரம் போன்றவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

## திருவஹீந்திரபுரம் தோத்திரப்பாமாலை

இந்நூல் இங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீதேவநாதப் பெருமான் அருட்சிறப்பையும் ஹயக்ரீவர், விநாயகர், தேசிகர் இலக்குமி ஆகியோரின் பெருமைகளையும் அழகாக எடுத்துரைப்பது ஆகும். இதனை இயற்றியவர் வண்ணச்சரபம், அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் ஆவார். இவர் திருநெல்வேலியில் வேளாண்மரபில் பிறந்தவர். இவர் முருகன் அருளினால் பலகவிகள் பாடினார். இவர் சமயபேதமில்லாதவர். இதனால் பல தலங்களை வழிபட்ட பெருமைக்குரியவர். சுமார் நூறு வருடங்களுக்கு முன் இவர் திருவந்திபுரம் வந்து இங்கு உள்ள இறைவனை வழிபட்டு இந்நூலை இயற்றினார். இந்நூல் அறுபதுக்கும் மேற்பட்டபாடல்களைக் கொண்டுள்ளது. இதில் திருவந்திபுரம் பற்றிய செய்தியைப் பல இடங்களில் கூறியுள்ள இவர், திருமாலைப்பற்றி பின்வருமாறு கூறியுள்ளார்.

> **"அந்தணர்கள் போற்றும் அயிந்திரபுராதிபனைக்**
> **கந்தமலரோன் கரியோன் கண்ணுத லென்று - இந்தவுரு**
> **மூன்றுமாய் ஆகா முதல்வன் றனைத்து திக்கத்**
> **தோன்றுசட கோபன் துணை"[23].**

என்று குறிப்பிட்டுள்ளார். இப்படிப்பல பாடல்களை அழகாகப் பாடியுள்ளார்.

## தண்டபாணி விஜயம்

தண்டபாணி விஜயம் என்பது தண்டத்தைத் தாங்கும் கையையுடைய சற்குருமூர்த்தியின்

பிரதாபங்களை எடுத்துரைக்கும் நூல் எனப்படும் இதன் தலைவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். "இவரை திருப்புகழ்ச் சுவாமிகள்", "முருகதாச சுவாமிகள்" எனவும் அழைப்பர். இவர் மகன் செந்தினாயகம் பிள்ளை என்பவரே இந்நூலை இயற்றினார். இவர் திருநெல்வேலியில் தோன்றியவர். இதனை இவர் பூர்வபாகம், உத்தரபாகம் எனப் பிரித்துள்ளார். இது பாயிரம், வாழ்த்து ஆகிய இரண்டும் சேர்த்து 546 திருவிருத்தங்களால் இயற்றப்பட்டுள்ளது. இதனை இவர் 42 வருடங்களுக்கு முன்பு இயற்றியுள்ளார். இதில் திருவந்திபுரம் பற்றிய செய்தி ஆறுபாடல்களில் இடம் பெற்றுள்ளது. இதில் திருவந்திபுரம் அடைதல் என்னும் தலைப்பின் கீழ் இவர் இதனைக் கூறியுள்ளார். தண்டபாணி சுவாமிகள் திருவந்திபுரத்தையடைந்து திருமாலையும் அவர் திருவடியினையும் அந்தணர் களோடு பலர் சூழ வணங்கினார். திருநீற்றுடன் கனிவான உள்ளத்துடன் திருமண்ணையும் தோளில் அணிந்து கொண்டார் என்பதைப் பின்வருமாறு கூறுகிறார்.

**"அந்நகர்விடுத்தே யயிந்திரபுரத்தை யடைந்து நாரணன்**
**திருத்தனியின்**
**மன்னனையவர்சிற் சிலர்தமைச் சூழ வணங்கினரந்நகர்**
**மறையோர்**
**நன்னலத்திருநீ றுடன்முழு தணிந்து நவிலிருவகைத்திரு நாமந்**
**துன்னவேயிருதோ ளினிலணியிவர்தந் துணிவுகண்டுள்ள மிகத்**
**துளங்கி"[24]**

என்கிறார். பின்வரும் பாடல்களில் வைணவ சமயத்திலேயே வடகலை தென்கலை என்னும் பிரிவுகள் தோன்றிப் போராடுவதையும், சைவ சமயத்தை இகழ்வதையும் கண்டித்துக் கூறுவதாகப் பாடல்களை அமைத்துள்ளார்.

## திருவந்திபுரம் திருத்தலவரலாறு

இந்நூலில் திருவந்திபுரத்தையும் அங்கு வீற்றிருக்கும் இறைவனையும் பற்றி ஞானசூரியனுக்குக் கவிதைப்பூக்கள் என்னும் தலைப்பில் தங்க. சுதர்சனம் கவிதை எழுதியுள்ளார். இதில் இறைவனின் பெருமைகளைப் பலவாறு எடுத்துரைத்துள்ளார். இதனை

**''இம்மண்ணுலகில்**
**பன்னெடுங்காலமாகக் கிளைபரப்பி**
**பக்தி மணங்கமழ**
**வானோங்கி உயர்ந்து நிற்கும்**
**வைணவத்தலங்கள் நூற்றெட்டு!**
**அவற்றில்**
**திருவகீந்திரபுரமும் விளங்குகிறது**
**சிறப்புற்று!**
**மூவடியால்**
**இப்பூவுலகை அளக்கச்**
**சேவடி தூக்கியநாயகன்**
**ஆதிமூலநாதன்**
**அந்தமூலநாதன் தான்**

**இங்கு வீற்றிருக்கும்**

**அருள்மிகு தேவநாதன்**

**முக்காலத்தையும் உணர்ந்த**

**எம்பிரான்!**

**நின்று அமர்ந்து துயின்று**

**முக்கோலத்திலும் காட்சி தருவது**

**இங்குதான்.''[25]**

எனக் கூறியுள்ளார். இப்படியாகப் பின்வரும் பகுதியிலும் திருமால் பெருமையையும் திருவந்திபுரத்தின் சிறப்பையும் அழகாக எடுத்துக் கூறியுள்ளார்.

## தொகுப்புரை

திருவந்திபுரம் கோயிலைப் பற்றி பிரம்மாண்ட புராணம், ஸ்கந்த புராணம், பிரகந்நாரதீயபுராணம் ஆகிய புராணங்கள் எடுத்துரைக்கின்றன. வில்லிபாரதத்தில் அருச்சுனன் இத்தலத்தை வழிபட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

திவ்விய பிரபந்தத்தில் திருமங்கையாழ்வாரால் இயற்றப்பெற்ற பெரியதிருமொழி மூன்றாம் பத்தில் இத்தலம் பற்றி பத்துப் பாசுரங்கள் காணப்படுகின்றன. வேதாந்ததேசிகர் திருவந்திபுரம் பற்றி மும்மணிக்கோவை, நவமணிமாலை என்னும் தமிழ்ப் பிரபந்தங்களையும், தேவநாயகபஞ்சாசத், அச்யுதசதகம் என்னும் வடமொழி பிராக்ருதமொழி இலக்கியங்களையும் இயற்றியுள்ளார்.

நூற்றெட்டுத் திருப்பதிக்கோவையென்னும் நூலே 108 திருப்பதிகளைப் பற்றிக் கூறுவதில் முதலாவதாகத் தோன்றியது. இதில் தொண்டை நாட்டுத் திருப்பதிகளுடன் நடுநாட்டையும் குறிப்பிட்டுள்ளார்.

நூற்றெட்டுத் திருப்பதிஅந்தாதி யென்னும் நூலில் திருவந்திபுரத்தை பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் குறிப்பிட்டுள்ளார். நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ் என்னும் நூலில் திருவந்திபுரம் பற்றிய பாடல் ஒன்று மிக நீளமாகக் காணப்படுகிறது.

மதுரகவி ஸ்ரீநிவாச ஐய்யங்கார் சேரநாட்டுத் திருப்புகழ் என்னும் நூலில் நடுநாட்டையும் குறிப்பிட்டுள்ளார். வைணவ ஆசாரியர்கள் என்னும் நூல் இத்தலம் பற்றி எடுத்துரைக்கிறது. திருப்பாதிரிப் புலியூர்ப்புராணம் இத்தலம் பற்றிக் கூறியுள்ளது. தண்டபாணி சுவாமிகள் இத்தலத்தின் மீது திருவகீந்திரபுரம் தோத்திரப்பாமாலை பாடியுள்ளார்.

தண்டபாணிவிஜயம் என்னும் நூல் இத்தலத்தைப் பற்றிக் கூறியுள்ளது. திருவந்திபுரம் திருத்தல வரலாறு என்ற நூலில் இப்பதியின் பெருமை கவிதை வடிவில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு பல இலக்கியங்களில் இத்தலம் இடம் பெற்றுள்ளதுடன். ஆவணங்களிலும் இவ்வூர்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. திக்கெல்லாம் புகழும் பதியாக இத்தலம் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

# சான்றெண் விளக்கம்

1. இந்திராபார்த்தசாரதி, தமிழ் இலக்கியங்களில் வைணவம். ப.67.

2. தேசிகன். சி, ஆர், திருவயிந்திரபுரத்து திருக்கோயில் - கல்வெட்டுக்களும் ஸ்தலபுராணச் சுருக்கங்களும், ப.7

3. பொன்னம்பலபிள்ளை, ந.ச, (பதி) வில்லிபாரதம், ப. 305

4. இந்திராபார்த்தசாரதி, தமிழ் இலக்கியங்களில் வைணவம், பக். 67-68.

5. சீனிவாசன்.மதி. (பதி), பெரியதிருமொழி- நாலாயிர திவ்வியப்பிரபந்தம், ப.84.

6. மேலது, ப. 86.

7. மேலது, ப. 88.

8. எத்திராஜன் ஆ. 108 வைணவ திவ்யதேச ஸ்தல வரலாறு ப.256.

9. சுந்தரசண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 211.

10. ஸ்ரீராமதேசிகாசார்யன், வ.ந, ஸ்ரீதேசிகப்பிரபந்தம், ப.377

11. மேலது, ப.390.

12. மேலது, பக்.404-405.

13. ஸ்ரீ லக்ஷ்மி ஹயக்ரீவகைங்கரியஸபா, பத்தாவது ஆண்டு விழாமலர், ப.65.

14. அச்யுதசதகம், உரையாசிரியர் முகவுரை. ப.1

15. ஸ்ரீராமதேசிகாசார்யர் உரை, ஸ்ரீஹயக்ரீவ ஸ்தோத்ரம், ப.2

16. கமலக்கண்ணன். வ, தொண்டைநாடும் வைணவமும், ப.23.

17. பிள்ளைப்பெருமாள் ஐயங்கார், அஷ்டப்பிரபந்தம், ப-389.

18. சுந்தரசண்முகனார், கெடிலக்கரைநாகரிகம், ப. 259.

19. மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார், மதுரகவி சேரநாட்டுத் திருப்புகழ், பக். 68-69

20. மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார், மதுரகவி ஸ்ரீகண்ணன் அவதாரம், ப.714.

21. சுந்தரசண்முகனார், கெடிலக்கரைநாகரிகம். ப. 120.

22. ராஜகோபாலன் டி.எஸ். வைணவ ஆசாரியர்கள், ப.206.

23. தண்டபாணிசுவாமிகள், திருவகீந்திரபுரம் தோத்திரப்பாமாலை, ப.3

24. செந்தினாயகம்பிள்ளை, தி.மு. தண்டபாணி விஜயம், ப. 32.

25. அருள்மிகு தேவநாத சுவாமி திருக்கோயில் திருத்தல - வரலாறு, ப. 17.

.......................

# வழிபாடும் விழாக்களும்

## முன்னுரை

மனிதர்கள் பக்தியில் ஈடுபட்டு இறைவனை வழிபடுகின்றனர். இவ்வழிபாட்டினால் இவர்கள் இறைவனை வேண்டி மன அமைதியைப் பெறுகின்றனர். வழிபாடுகளில் தலைசிறந்து விளங்குவது கோயில் வழிபாடாகும். இவ்வழிபாடு களையொட்டி திருவிழாக்கள் பல நடைபெறுகின்றன. திருவந்திபுரம் திருக்கோயிலில் நாள் தோறும் நடைபெறும் வழிபாடு பற்றியும் திருவிழாக்கள் பற்றியும் இவ்வியல் விளக்குகிறது. அதுமட்டுமன்றி இறைவனுக்குப் பயன்படுத்தப்படும் ஆடை, பூ அணிகலன்கள் பற்றியும் அர்ச்சகர், பக்தர்கள் பற்றியும் அவர்கள் செலுத்தும் காணிக்கைகள் முதலியவை பற்றியும் விவரிக்கப்படுகிறது.

## வழிபாடு விளக்கம்

உடலுக்கு உணவு எவ்வளவு அவசியமோ அதேபோன்று உயிருக்கு வழிபாடு என்பது மிகமிக இன்றியமையாததாகும். வழிபடு என்ற சொல் பின்பு வழிபாடு என்று ஆயிற்று ''வணக்கம், வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, பூசனை, சமயக்கோட்பாடு என்று குறிப்பிடுகிறது கழகத்தமிழ் அகராதி''[1]. மனிதன் இவ்வுலகத்தில் காணப்படும் இன்னல்களில் இருந்து

விடுபெற்று துன்பமின்றி வாழ விரும்புகிறான். அதனால் அவன் தனக்கு ஊன்று கோலாக ஒரு சக்தி வேண்டும் என்று விரும்புகிறான். "ஆண்டவனால் படைக்கப்பட்ட வியக்கத்தக்க, ஆனால் இயல்பான படைப்பாகிய மனிதனுக்கும் அவனைப் படைத்த உன்னத சக்தியான இறைவனுக்குமிடையில் ஒரு பால மெனத்திகழும் அமைப்புதான் வழிபாடு எனக் கூறினால் மிகையாகாது"[2]. தன்னை வழி நடத்தும் உயரிய சக்தி ஒன்று உண்டு என்பதை உணர்ந்து அச்சக்தியை ஆராதிப்பதே வழிபாடு எனப்படும். "வழிபாடு என்பது முன்னோர் காட்டிய வழியில் வழிப்படல், பின்பு வழிபடல் என்றாயிற்று. வழிபாடு என்ற சொல் இன்று தொழுதல், வணங்குதல் என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகின்றது"[3]. தொன்று தொட்டு வழிபாடு என்பது மக்களிடம் நிலவி வந்துள்ளது.

மக்கள் இயற்கையைக் கண்டு அஞ்சினர். இதனால் வழிபாடு தோன்றியது என்பர். தனிமனித வழிபாடு பின்பு கோயில் வழிபாடாக மாறியது. கோயில்கள் பல தோன்றியதால் அவ்வழிபாட்டினை இலக்கியங்கள் பல எடுத்துரைக்கின்றன. தொல்காப்பியத்தில் "வழிபடு தெய்வம்"[4]. என்பதும் "வழிபாடு மறுத்தல்"[5]. என்பதும் வணக்கம் என்ற பொருளையே கொடுக்கின்றன. "கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்" என்னும் சிலப்பதிகார வரியில் வழிபாடு என்பது வணங்குதல் என்ற பொருளையே கூறுகிறது. இப்படி இலக்கியங்கள் வணக்கம், பூசனை, வணங்குதல் போன்ற பொருளை வழிபாட்டிற்குக் கொடுக்கின்றன. முக்தியாகிய வீடு பேற்றினை அடைய இறைவனை வணங்க வேண்டும் என்னும் நிலையினை வழிபாடு என்றும் கூறலாம்.

## வழிபாட்டின் இருநிலைகள்

வழிபாடு என்பது மனிதசமூகத்துடன் இணைந்த ஒரு செயல் ஆகும். அது துன்பம் துடைத்து இன்பம் தருவது. அதுமட்டுமன்றிக் குறைகளைப் போக்கவும் தேவைகளை நிறைவு செய்யும் படி வேண்டவும் மக்கள் அதனைப் பயன் படுத்துகின்றனர். ஒவ்வொருவரும் தெய்வத்தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்பதே வழிபாட்டின் நோக்கமாகும். வழிபாட்டில் தனக்காகவும் ஒரு படி மேலே சென்று பிறருக்காகவும் வேண்டுதல் என்பது பொதுவாகக் காணப்படுகிறது. "இந்து சமயத்தில் வழிபாட்டை இருவகையில் பிரிக்கலாம் ஒன்று தனது நன்மைக்காக வழிபடுதல்; இது ஆன்மார்த்த வழிபாடு. குடும்பங்களில் பொது நன்மைக்கான வழிபாடு பரார்த்த வழிபாடு செய்வது என்றும் கூறலாம். வீடுகளில் இஷ்டதேவதையை மனதில் கொண்டு வழிபாடு நடைபெறும்"[7].

வழிபாட்டினை அகவழிபாடு, புறவழிபாடு என்றும் பிரிப்பர். "நாயன்மார்கள், ஆழ்வார்கள், துறவிகள் முதலானோர் இறைவனைத்தம் மனக்கோயிலில் வைத்தே வழிபாடு செய்தனர். அவ்வாறு அகவழிபாடு செய்வதற்குரிய தகுதி பெறுவதற்குப் புறவழிபாடு உதவுகிறது"[8]. இப்படி வழிபாட்டினை நம்முன்னோர் பகுத்துள்ளனர்.

## திருவந்திபுரம் திருக்கோயில் வழிபாடு

மக்கள் பக்தியின் காரணமாகக் கோயில் வழிபாடுகளை மேற்கொள்கின்றனர். வழிபாடுகளில்

தலைசிறந்தது கோயில் வழிபாடாகும். ''கோயில் வழிபாடு மூன்று வகையாகப் பகுத்துரைக்கப்பட்டுள்ளது. அவை,

1. தினசரி வழிபாடு (நித்தியம்)

2. திருவிழா வழிபாடு (நைமித்தியம்)

3. வேள்வி வழிபாடு (காமியம்)''[9] எனப்படும். திருவந்திபுரம் திருக்கோயிலில் வைகானச ஆகமவிதிப்படி வழிபாடு நடைபெறுகிறது.

## தினசரி வழிபாடு

திருவந்திபுரம் அருள்மிகு தேவநாதசுவாமி திருக்கோயிலில் தினசரி நடைபெறும் வழிபாட்டை பின் வருமாறு கூறலாம். தினந்தோறும் இக்கோயிலில் ஆறுகால வழிபாடு நடைபெறுகிறது. அவை

1. விஸ்வரூப சேவை
2. காலசந்தி பூசை
3. உச்சிக்காலம்
4. நித்திய அநுசந்தானம் (திருவந்திகாப்பு)
5. திருவாராதனம்
6. அர்த்தயாமம்

என்பவையாகும்.

## விஸ்வரூபசேவை

''பெருமாள் பசுவின் முகத்தில் விழிக்க வேண்டும் என்பதற்கு இவ்வழிபாடு நடைபெறுகிறது. இவ்வழிபாடு காலை 6.30 மணி அளவில் தொடங்கி 7 மணி வரை

நடைபெறும். பசுவை இறைவனின் முதற் பார்வைக்குக் காட்டி ஆரத்தி காட்டி பின்பு பசும்பால், பழம் முதலியவற்றைப் படைப்பர். அப்போது சுப்ரபாதம் இசைதது இறைவனைத்துயில் எழுப்புவர்''[10].

## காலசந்தி பூசை

''சூரிய உதயம் முதல் ஏழரை நாழிகை (3மணி நேரம்) கொண்ட நேரத்திற்குக் காலசந்தி என்று பெயர்''[11]. இப்பூசை காலை 7 மணி அளவில் தொடங்கி எட்டு மணி வரை நடைபெறும். அப்போது பெருமாளுக்கு ஆகமமுறைப்படி சுத்த அன்னம் படைப்பர். இப்பூசையில் வேதம், பிரபந்தம் போன்றவை பராாயணம் செய்வர் என்பது குறிப்பிடத்தக்கது.

## உச்சிக்காலம்

இறைவனுக்கு திருமஞ்சனம், ஆராதனை முதலியவை நடைபெற்றபின் சரியாக 12 மணி அளவில் நடைபெறும் பூசையினை உச்சிக்கால பூசை என்பர். அப்போது இறைவனுக்கு புளியோதரை படைக்கப் பெறும். அதுமட்டுமன்றி பிரார்த்தனையாகச் செய்வோர் சாம்பார் சாதம், பருப்புசாதம் முதலியவை செய்யுமாறு கூறினால் அவற்றையும் இறைவனுக்கு நைவேத்தியம் செய்வர். 12 மணி அளவில் கோயில் சாத்தப்பெறும்.

## நித்திய அநுசந்தானம்

மாலை நான்கு மணிக்கு கோயில் திறப்பர். 6 மணி அளவில் நடைபெறும் பூசை நித்திய அநுசந்தானம்

ஆகும். அப்போது இறைவன் திருமேனியை மலரால் அலங்கரித்து ஆரத்திகாட்டி திவ்வியபிரபந்தம் பாடுவர். தோசை, வடை, சுண்டல், பொங்கல் முதலியவற்றை நைவேத்தியம் செய்வர்.

## திருவாராதனம்

எட்டுமணி அளவில் இறைவனுக்கு இவ்வழிபாடு நடத்துவர். அப்போது சுத்தஅன்னமும், பால்அன்னமும் படையலாகப் படைப்பர். மற்றுமுள்ள சிற்றாலயங் களுக்கும் வழிபாடு செய்யப்படும்.

## அர்த்தயாமம்

இரவு பத்துமணியளவில் நடைபெறும் பூசையினை அர்த்தயாம பூசை என்பர். அப்போது பொங்கல் அல்லது புளியோதரை நைவேத்தியம் செய்வர். அதன்பின்பு இறைவனைப் படுக்க வைத்து சயனசேவை செய்யப்படும். அதேபோன்று மற்ற தெய்வங்களையும் பள்ளியருளச் செய்வர். இறையன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கப் பெற்றபின்பு கோயில் சாத்தப்பெறும். இவ்வழிபாட்டில் முதன்மை தேவநாதனுக்கும் இறுதியில் தேசிகனுக்கும் வழங்கப்பெறும். இத்துடன் தினசரி வழிபாடு முடிவுறும்.

## திருவிழா வழிபாடு

ஒவ்வொரு கோயிலிலும் சிறப்பு வழிபாடு நடைபெறும். இதனைத் திருவிழா வழிபாடு என்றும் அழைப்பர். நாள்தோறும் இறைவனை வழிபட

இயலாதோர் இவ்விழாக்காலங்களில் வழிபாடு செய்வர். திருவிழா இல்லாத திருக்கோயில்களே இல்லை என்று கூறுமளவிற்கு இவ்விழாக்கள் சிறப்புப் பெற்றவையாகும்.

## விழா சொற்பொருள் விளக்கம்

விழாக்கள் மன மகிழ்ச்சியைத் தரவல்லன. எனவே மக்கள் இதனை விரும்பிக் கொண்டாடுகின்றனர். விழை என்னும் வேர்ச்சொல்லிலிருந்து விழா என்னும் சொல் வந்தது. விழா என்பதற்கு ''திருவிழா, மங்கலச் சடங்கு''[12] என்று எடுத்துரைக்கிறது இருபதாம் நூற்றாண்டுத்தமிழ்ப் பெயரகராதி. விழா என்பது காதல், விருப்பம், அவா, உற்சவம், விளையாட்டு, களிப்பு, விழைவு, மகிழ்ச்சி என்று பல பொருளைக் குறிக்கிறது. இன்று விழாவினை பண்டிகை, கொடை என்று பலவாறு கூறுகின்றனர். ஆனால் சான்றோர்கள் திருவிழா என்றே கூறுகின்றனர்.

''திரு என்றால் மேன்மை தங்கிய என்று பொருள். பழந்தமிழ் மக்கள் விழா என்று அழைத்ததைப் பிற்கால மக்கள் விழா தெய்வத்திற்காகக் கொண்டாடப்படுவதால் தெய்வத்தின் புனிதத் தன்மையையும் சிறப்பையும் கருதித் ''திரு'' என்ற அடை மொழியைச் சேர்த்துத் திருவிழா என்று அழைத்தனர்''[13]. இன்று மக்களிடம் சமயவழிபாட்டு முறைகளைப் போன்று ஆண்டுதோறும் குறிப்பிட்ட காலங்களில் தவறாது நடைபெறும் விழாக்கள் இந்து சமய வழிபாட்டில் முக்கிய இடம் பெற்றுள்ளன. சமுதாயக் கூட்டுணர்வு, மக்களின் உள்ளுணர்வு, எண்ணங்கள், வேண்டுதல்கள் போன்றவற்றை விழாக்கள் பிரதிபலிக்கின்றன. இப்படித் திருவிழாவினைப் பற்றிப்பல விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன.

## விழாக்களின் தோற்றமும் வளர்ச்சியும்

முதன்முதலில் மரப்பொந்துகளிலும், குகை களிலும் மனிதன் வாழ்ந்து வந்தான். பின்பு நாகரிக வளர்ச்சியினால் ஆற்றங்கரையில் குடிசைகள் அமைத்து ஒரு சமூகமாக வாழத் தொடங்கினான். தனக்குத் துன்பம் செய்வனவாகிய இடி, மழை போன்றவற்றைக் கண்டு நடுங்கினான். இவற்றிற்குவிழா எடுத்தால் அவ்வச்சத்தினில் இருந்து விடுபடலாம் என்று எண்ணி விழாவினை எடுக்க முற்பட்டான். இதனால் விழாக்கள் என்று தோன்றியது என்று அறுதியிட்டுக் கூறுவது இயலாது. ''ஆதிகால மக்கள் விலங்குகளைக் கொன்று அதை உண்ணும் முன்பு ஒன்று கூடி மகிழ்ச்சியில் திளைத்தனர். அம்மகிழ்ச்சி தனி நபருக்கோ, குழுவினருக்கோ தீங்கான நெருக்கடி உண்டாகும் காலத்தில் அதனை நீக்கிக் கொள்வதற்கு விழாக்கள் கொண்டாடி இருக்கலாம். மற்றும் தங்கள் உழைப்பின் பயனால் விளைந்த தானியங்களை அறுவடைசெய்து அம்மகிழ்ச்சியைக் கொண்டாடியிருக்கலாம். இவற்றை விழாவின் அடிப்படைத் தோற்றம் எனலாம்''[14]. பின்பு இவ்விழாக்கள் சமயத்தை அடிப்படையாகக் கொண்டு சமய விழாவாகக் கொண்டாடப்பட்டன.

கோயில்கள் பல தோன்றின. இதனால் விழாக்களும் பெருகின மன்னர்கள் பல விழாக்களை நடத்தியுள்ளனர். சமயவளர்ச்சிக்குப் பாடுபட்டசமயச் சான்றோர்கள் பலர் திருவிழாக்களை நடத்தியுள்ளனர். கோயில்கள் நிறைந்த தமிழ்நாட்டில் விழாக்கள் நடந்துள்ளதை இலக்கியங்கள் பல எடுத்துரைக்கின்றன.

**"சிறப்பொடு பூசனை செல்லாதுவானம்**
**வறக்குமேல் வானோர்க்கு ஈண்டு"[15]**

என்பதன் மூலம் திருவிழாக்கள் நடை பெற்றுள்ளதை அறியலாம். தமிழகமெங்கும் உள்ள சிற்றூர்களில் விழாக்கள் மலிந்திருந்தன. இதனால் ஆரவாரம் நிறைந்து காணப்படும்.

**"மாயிருந் திங்கள் மறுநின்ற ஆதிரை**
**விரிநூல் அந்தணர் விழவு தொடங்க"[16]**

என விழாவினைப்பற்றி பரிபாடல் எடுத்துரைக்கின்றது. இப்படி சங்ககாலம் தொட்டு இன்றுவரை திருவிழாக்கள் பற்றிக் குறிப்பிடும் இலக்கியங்கள் பல காணப்படுகின்றன. அக்காலம் போன்று இக்காலத்திலும் சமயச் சான்றோர்கள், பொதுமக்கள் போன்றோர்கள் விழாக்களை நல்ல முறையில் நடத்தி வருகின்றனர்.

## விழாக்களின் நோக்கமும் குறிக்கோளும்

திருவிழாவின் போது நண்பர், உறவினர், விருந்தினர் என்று அனைவரையும் ஒரே நேரத்தில் பார்க்க முடியும். அப்போது குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் மகிழ்ச்சியடைவர். சமயத்தை மையமாகக் கொண்டே திருவிழாக்கள் நடைபெறுகின்றன. விழாக்கள் ஒற்றுமையை நிலைநாட்டுவதையே நோக்கமாகக் கொண்டுள்ளன. இந்நாட்களில் மக்கள் உண்டுகளிப்புடன் இருக்க வேண்டும் என்று கூறுவர். "விழாநாட்களில் மக்கள் பசி, பிணி, பகை அகன்று எல்லோரும் ஒன்றிய இன்பத்தில்

திளைக்க வேண்டும்''[17]. என்று பரமசிவானந்தம் கூறுகிறார்.

விழா என்பது நாட்டை இன்பத்தில் ஆழ்த்தவரும் ஒரு நல்லநாளாகும். அன்று மக்களிடம் வேற்றுமையிருந்தால் அவற்றை நீக்கி ஒற்றுமை ஏற்படுத்துவர். சாதிமத பேதமின்றி விழாவினைக் கொண்டாட வேண்டும் என்பதே விழாவின் முக்கிய நோக்கமாகும். உயர்வு தாழ்வு கருதாது இருக்கவேண்டும் அதாவது செல்வர்வறியவர் என்ற வேறுபாடு இருக்கக்கூடாது என்பதே விழாவின் குறிக்கோள் ஆகும்.

## திருவந்திபுரத்திருக்கோயில் திருவிழாக்கள்

திருவந்திபுரம் திருக்கோயிலில் பன்னிரண்டு மாதங்களும் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. அப்போது நடைபெறும் வழிபாடுகளில் மக்கள் பலர் கலந்து கொண்டு இறையருள் பெறுகின்றனர். சித்திரை ஆடி, மார்கழி, தை, பங்குனி போன்ற மாதங்களில் நடைபெறும் விழாக்கள் மிகுதியாகும்.

## கொடியேற்றுதல்

இக்கொடியேற்றத்தை துவஜாரோகணம் என்றழைப்பர். இது திருவிழாவிற்கு முதல் நாள் நடைபெறும். ''கொடியேற்றிய நாள்முதுல் பத்து நாட்கள் நிகழும் திருவிழாக்கள் தனித்தனித் தத்துவங்களை உணர்த்துகின்றன. முதலில் கொடியேற்று விழா மும்மலங்களிலே மூழ்கிக் கிடக்கும் உயிர் அவற்றிலிருந்து விடுவித்துக் கொள்ள அருளை

நாடுவதைக்குறிக்கிறது. பஞ்சாட்சரத்தினால் வீடுபேற்றை அடைவிப்பதைக் காட்டுவது கொடியேற்றுவிழா''[18]. என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வெள்ளை நிறத்துணியில் கருடனின் உருவம் பொறித்து அதனை மஞ்சள் நீரில் நனைத்துப் பின்பு கொடியேற்றுவர். கொடிமரத்தைச்சுற்றி தர்ப்பைப் புல்லைக் கட்டிவைப்பர். ஆன்மாக்கள் முக்தி இன்பம் பெற வேண்டும் என்பதற்காகவே இறைவன் கொடியேற்றி விழாக் கொண்டருள்கிறார். கொடித் துணியில் எழுதப் பெற்ற உருவம் ஆன்மாவையும், தர்பைக்கயிறு பாசமாகிய மாயையையும் குறிக்கிறது. இப்படிக் கொடியேற்றியபின் அந்தக் கொடியை இறக்கும் வரை அவ்வூரில் திருமணவிழா, காதுகுத்தும் விழா, புதுமனைபுகுவிழா போன்ற மங்கல நிகழ்ச்சிகளை நடத்துவதில்லை. இதனை இன்றும் போற்றிக்காத்து வருகிறார்கள்.

## சித்திரைப்பெருவிழா

பெரிய கோயில்களில் இறைவன் பிறந்த கோளன்று பத்து நாட்கள் சிறப்பாகப் பெருந்திருவிழாக் கொண்டாடுவர். இதனைச் சித்திரைமாதம் கொண்டாடுவதால் சித்திரைப் பெருவிழா என்றும், பிரம்மோற்சவம் என்றும் அழைப்பர். ''இது பிரம்மாவால் நடத்தப்பட்ட உற்சவம் மற்றும் வருடத்தில் முதல் உற்சவம் ஆகையால் இது பிரம்மோற்சவம் என அழைக்கப்படுகிறது''[19]. இது மிகவும் சிறப்பு வாய்ந்த விழாவாகும்.

முதல் நாள் சித்திரை தமிழ்வருட பிறப்பு ஆகும். அன்று காலை தோளுக்கினியான் வாகனத்திலும், இரவு அம்சவாகனத்திலும் இறைவன் வீதி உலாவருவார். இரண்டாவது நாள் சூரியப்பிரபையில் காலையிலும் சிங்கவாகனத்தில் இரவும் வருவார். மூன்றாவது நாள் காலை யாளிவாகனத்திலும், இரவு அனுமந்த வாகனத்திலும் உலாவருவார். நான்காம் நாள் காலை வேணுகோபாலன் சேவை நடைபெறும். அன்று விமானத்திலும், இரவு நாகவாகனத்திலும் வருவார். ஐந்தாவது நாள் காலை மோகனாவதாரம் அப்போது தங்கப்பல்லக்கும், இரவு தங்க கருடசேவையும் சிறப்பாக நடைபெறும். ஆறாவது நாள் காலை பல்லக்கிலும் இரவு யானைவாகனத்திலும் வருவார். ஏழாவது நாள் சப்பரம எனப்படும் சகடை, இரவு தெருவடைச்சான் நடைபெறும். எட்டாவதுநாள் குதிரைவாகனத்தில் உலாவருவார். ஒன்பதாவது நாள் திருத்தேர் தீர்த்தவாரி விடையாற்றி நடைபெறும். பத்தாம் நாள்தைலக்காப்பு நீக்கிமூலவர் சேவை நடைபெறும். அன்று காலை மட்டையடி விழாவும், இரவு தெப்பவிழாவும் புஷ்பப்பல்லக்கில் பெருமாள் வீதி உலாவும் மிகவும் சிறப்பாக நடைபெறும். இவற்றுடன் பிரம்மோற்சவம் பௌர்ணமி தினத்தன்று முடிவடையும். "இம்மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் உடையவருக்கு பத்து நாட்கள் சாற்றுமுறை நடைபெறும். சித்திரைநட்சத்திரத்தில் மதுரகவிகள் சாற்று முறையும் நடைபெறும்"[20].

## வைகாசித்திருவிழா

பத்து நாட்கள் நடைபெறும்விழா வசந்தவிழா என்ற பெயரில் நடைபெறுகிறது அப்போது பிர[illegible]

பாசுரங்கள் ஓதப்படும், வாத்திய கோஷ்டிகளின் இன்னிசையும் நடைபெறும், பெருமாள் வீதியில் உலாவருவார். வைகாசி விசாகத்தில் ஒன்பதாவது நாள் நம்மாழ்வார் சாற்றுமுறை நடைபெறும், பத்தாம் நாள் தேவநாதன் வசந்த விழா. பௌர்ணமி சாற்று முறையுடன் விழா நிறைவடையும். அன்றே நரசிம்ம ஜெயந்தி எனப்படும் நரசிம்ம அவதாரவிழா கொண்டாடப்படும்.

## ஆனித்திருவிழா

ஆனித்திருமஞ்சனம் இம்மாதத்தில் நடைபெறும் சிறப்பான விழாவாகும். அப்போது இறைவன் அனைவரும் காணும்படிவீதியில் தரிசனம் அளிப்பார். பௌர்ணமி தினத்தன்று பெருமாளுக்கு திருமஞ்சனமும், கேட்டை நட்சத்திரத்தில் ஹயக்ரீவர் திருமஞ்சனமும், புனர் பூசத்தில் ஸ்ரீராமருக்கு திருமஞ்சனமும், சுவாதியில் பெரியாழ்வார் சாற்று முறையும் பத்து நாட்கள் நடைபெறும். அனுடநட்சத்திரத்தில் நாதமுனிகள் சாற்றுமுறை சிறப்புடன் நடைபெறும். இது ஆயில்யம் தொடங்கி கேட்டை முடிய பத்துநாட்கள் நடைபெறும் விழாவாகும். தேசிகன் வசந்தவிழாவில் திருமலை ஹயக்ரீவருக்கும் தேசிகனுக்கும் ஒரே ஆசனத்தில் திருமஞ்சனம் நடைபெறும். பின்பு பௌர்ணமி அன்று பெருமாளுக்குத் தோப்பு விழா நடைபெறும்.

## ஆடித்திருவிழா

இம்மாதம் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியான ஸ்ரீ ஆண்டாள் பொருட்டு திருவாடிப்பூரம் விழா

பத்துநாட்களுக்கு நடைபெறும். அமாவாசையன்று பெருமாள் பூவங்கி சேவையும், தோமாலை சேவையும் நடைபெறும். பத்தாம் நாள் பெருமாள், ஆண்டாள், தேசிகன் ஆகியோருக்கு சிறப்புத் திருமஞ்சனம் நடைபெறும். அன்றுமாலை சாற்றுமுறையும் திருவீதிப் புறப்பாடும் நிகழும். இரவு பள்ளியறை சேவை நடைபெறும். இம்மாதம் வெள்ளிக்கிழமை வரலட்சுமி விரதமும், தாயார் பூவங்கிசேவையும் நன்முறையில் நிகழ்த்தப்பெறும். ராஜகோபாலனுக்கும், உத்திராடத்தில் ஆளவந்தாருக்கும் சாற்றுமுறை நடைபெறும்.

## ஆவணித்திருவிழா

திருவோணம் முடிய பத்துநாட்கள் மலைமேல் உள்ள ஹயக்ரீவருக்கு விழா நடைபெறும். அப்போது சாற்றுமுறையும் நடைபெறும். ''பௌர்ணமி முடிய மூன்று நாட்கள் பவித்திர உற்சவம் பூர்த்தியடையும். மற்ற உற்சவங்களில் இது மிகவும் உயர்ந்ததாகும். ஆதலால் இது பவித்திர உற்சவம் எனப்படுகிறது. இந்நாளில் பட்டுநூலில் தயாரித்த பவித்திர மாலைகள் திருக்கோயிலில் உள்ள அனைத்து மூர்த்திகளுக்கும் பிரதிஷ்டை செய்து அணிவிக்கப்படும்''[21]. கோகுலாஷ்டமி, ஸ்ரீ ராஜகோபாலன் பொருட்டு பத்து நாட்கள் ஸ்ரீஜெயந்தி விழா நடைபெறும். அப்போது திருவீதி உலாவும், உரியடி விழாவும் நடைபெறும். இவ்விழாவில் வெற்றி பெறுபவருக்கு சடாரி வைத்து அர்ச்சகர் சிறப்புச் செய்வார்.

## புரட்டாசித்திருவிழா

ஸ்ரீதேசிகன் பிரம்மோற்சவம் பத்துநாட்கள் சிறப்பாக நடைபெறும். திருவோணத்தன்று சாற்றுமுறை நடைபெறும். அங்குரார்ப்பணம் அன்று பெருமாளுக்கும் தாயாருக்கும் கண்ணாடி அறை சேவை நிகழ்த்தப்படும்.

''முதல்நாள் நவராத்திரி ஆரம்பம் ஆகும். அன்று இரவு அம்சவாகனமும், இரண்டாவதுநாள் பல்லக்கில் திருவீதி உலாவும், மூன்றாம் நாள் சூர்யபிரபையும், இரவுயாளி வாகனமும், நான்காம் நாள் மோகனாவதாரம், ஐந்தாம்நாள் சிம்மவாகனத்தில் தாயார் திருவீதி உலாவும் நிகழ்த்தப்பெறும். ஆறாம் நாள் யானை வாகனம் ஏழாவது நாள் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும் எட்டாம் நாள் பேட்டை உற்சவம். இதில் இறைவன் குதிரைவாகனத்தில் வருவார்''[22].

ஒன்பதாம் நாள் திருத்தேர் வீதி உலா நிகழும் அன்று இரவு திருமாளிகையில் இருந்து இறைவன் சன்னதிக்குச் செல்வார். அன்றே மகாநவமியும், ஆயுதபூசையும், நடைபெறும். பத்தாவது நாள் சாற்றுமுறையும் திருமலை ஹயக்ரீவர் மங்களாசாசனமும், தேசிகர்ரத்தினாங்கி சேவையும், அனைத்து சன்னதிகளின் மங்களாசாசனம், தீர்த்த வாரிகைத்தலசேவை, சாற்றுமுறை, விடையாற்றி ஆகியவற்றையும், சாற்றுமுறை அன்று தேசிகர் பூவங்கி போன்றவையும் நிகழ்த்தப்பெறும். நவராத்திரி விழா மிக விமரிசையாகக் கொண்டாடப்படும். பெருமாளை தாயார் சன்னதியில் சேர்த்து சேவை கொலு வைக்கப்படும். விஜயதசமியில் அம்புபோடுதலும், அவரோஹனமும் நடைபெறும். அன்று குதிரைவாகனத்தில் இறைவன் வருவார், தெப்பத்திருவிழாவும் நடைபெறும்.

## ஐப்பசித்திருவிழா

இம்மாதம் தீபாவளி கொண்டாடப்படும். முதல் ஆழ்வார்களுக்கு விழா பத்துநாட்கள் நடைபெறும். "பௌர்ணமி முதல் நான்கு நாட்கள் முறையே பெருமாள், ஸ்ரீராமர், தாயார், ஸ்ரீ தேசிகன் ஆகியோருக்கு டோலைஉற்சவம் (ஊஞ்சல் உற்சவம்) மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்படும்"[23]. பூராட நட்சத்திரத்தில் சேனை முதலியார் சாற்றுமுறை நடைபெறும்.

## கார்த்திகைத்திருவிழா

கார்த்திகைத்திங்களில் வரும் கிருத்திகைநாளன்று கார்த்திகை விளக்குத் திருவிழா பெருமாளுக்கு மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படும். "எம்பெருமான் ஒளியாக இருந்து நமது அஞ்ஞானமாகிய இருளைப்போக்கி நமக்கு வழிகாட்டும் தீபங்களின் திருவிழாவாக இது கருதப்படுகிறது"[24]. அன்று அகல் விளக்குகளில் நெய்விட்டு பஞ்சுத்திரிகளால் விளக்குகள் ஏற்றப்படும். இவ்விளக்குகளைச் சிற்றாலயங்கள், கோபுரங்கள் என்று அனைத்து இடங்களிலும் வரிசை வரிசையாக ஏற்றி வைப்பர். மெய்யன்பர்களும் விளக்குகளை ஏற்றி இறைவனை வழிபட்டு மகிழ்வர். "கார்த்திகைத் திங்களில் முழுமதியானது அறுமீனைச் சேர்ந்தநாளின் இராக்காலத்து நடுவிலே, ஊரிற் தெருவெங்கும், விளக்குகளை வரிசை வரிசையாக ஏற்றி வைத்து மலர்மாலைகளைத் தொங்கவிடுதல், முதலாகிய ஒப்பனைகளைச் செய்து ஒளிவடிவினனாகிய

எல்லாம்வல்ல இறைவனை வழிபடும் திருவிழா பண்டைக்காலந் தொட்டு இன்றைய வரையில் தென்தமிழ் நாட்டிலுள்ள தமிழ்மக்களால் கொண்டாடப்பட்டு வருகின்றது''[25]. என்று மறைமலையடிகள் குறிப்பிட்டுள்ளார். இப்படி கார்த்திகை தீபம் கொண்டாடுவது தொன்று தொட்டு நிகழ்ந்துள்ள ஒன்று என்பதை நன்கு அறியலாம். திருமங்கைமன்னன் பொருட்டு பத்து நாட்கள் விழாக் கொண்டாடப்படுகிறது. உரோகிணிநாள் அன்று திருப்பாணாழ்வார் சாற்றுமுறையைச் சிறப்பாகக் கொண்டாடுவர்.

## மார்கழித்திருவிழா

இத்திங்களில் ஹனுமத்ஜயந்திவிழா நடைபெறும். பகற்பத்து இராப்பத்து உற்சவம் மிகவும் சிறப்பு வாய்ந்தவையாகும். வைணவத் திருத்தலத்தில் ஸ்ரீவைகுண்ட ஏகாதசி மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். இதற்கு முன்னர் தசமி வரை பத்து நாட்கள் பகற்பத்து உற்சவம் நடைபெறும். இவ்விழாவின் போது காலையில் பெருமாள், தாயார், தேசிகன் போன்றோர் திருவீதி உலா நிகழ்த்தப்பெறும். அதன்பின்பு உலாவந்த தெய்வங்கள் நூற்றுக்கால் மண்டபத்தில் சேவைசாதிப்பார்கள். பகல்பத்தில் உலாவரும் திருமேனிகள் பகலில்தான் நூற்றுக்கால் மண்டபத்தில் காணப்படும். இரவு சன்னதியினுள் சென்று விளங்குவர். பத்தாவது நாள் பெருமாளுக்கும் தாயாருக்கும் சாற்றுமுறை நடைபெறும். ''ஆழ்வார்களை வரிசையாக எழுந்தருளச் செய்து தமிழ் வேதம் இரண்டாயிரம் பாசுரங்கள் ஓதப்படுவது மிகவும் சிறப்பான அம்சமாகும்''[26]. இவ்விழாவின் ஏழாம் நாள்

தலப்பாட்டு உற்சவம் பற்றி அறியலாம். பகற்பத்து முடிந்து அதற்கு அடுத்தநாள் வைகுண்ட ஏகாதசியாகும். அன்று அதிகாலை சொர்க்கவாசல் திறக்கப்படும். அனைவரும் பெருமாளைத் தரிசிப்பர்.

ஏகாதசியிலிருந்து பத்துநாட்கள் நடைபெறும் விழா இராப்பத்து உற்சவம் ஆகும். இதனை பெரிய தமிழ்திருவிழா எனவும் அழைப்பர். இந்நாட்களிலே ஆண்டாள் திருவிழாவும் கொண்டாடப்படும். இராப்பத்தின்போது திருவாய்மொழி மற்றும் வேதங்கள் ஓதப்படும். இவ்வுற்சவத்தின் ஆறாவதுநாள் பெரிய பெருமாள் சேவை நடைபெறும்.

ஏழாம் நாள் தைலக்காப்பு விழா நடைபெறும். இது மிகவும் சிறப்புப்பெற்ற விழாவாகும். பிரதி வருடம் தைலம் சமர்ப்பிப்பவர்கள் திருப்பாதிரிப்புலியூர் செட்டியார் வகையறாவினர் ஆவர். சந்தனக் கட்டையை ஊறவைத்து பதம் செய்து வாசனைத்திரவியங்கள் சேர்த்து பதமாகக் காய்ச்சி கொண்டு வந்து சமர்ப்பிக்கப்படும். அதனை யாகசாலையில் மார்கழிமாதம் பிரதிஷ்டை செய்து மூலவருக்குச் சமர்ப்பிப்பர். தைலம் சமர்ப்பிக்கப்படும் நாள்முதல் சித்திரை மாதம் முதல் திருவிழாவிற்கு ஒன்பது நாள் வரை வேஷ்டி மற்றும் ஆடை சமர்ப்பிப்பர். மற்ற ஆபரணங்கள் அணிவிப்பதில்லை. அதன் பின்பு தங்கக்கவசம் மற்றும் ஆபரணங்கள் அணிவிக்கப்படும். எட்டாம் நாள் அன்று வேடர்பரிவிழா கொண்டாடப்படும். இராப்பத்திற்குப் பிறகு இயற்பா, தேசிகப்பிரபந்த சாற்றுமுறை இருநாட்கள் நடைபெறும். கேட்டைக் கோளில் தொண்டரடிப்பொடி யாழ்வார் சாற்றுமுறை நடைபெறும்.

## தைமாதத்திருவிழா

இத்திங்களில் தாயாருக்கு பத்து நாட்கள் மகாஸங்கராந்தி உற்சவம் நடைபெறும். தாசசத்தியர் திருமஞ்சனம் வருடத்திற்கு ஒருமுறை நடைபெறும் ஆண்டாள் விரதமிருந்து கண்ணனைத் திருமணம் செய்து கொண்டதிருவிழா விமரிசையாக நடைபெறும். கண்ணனே பரமன்; அவனை அடைய வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் மனதில் சஞ்சலம் எதுவுமில்லாமல் விரதம் பூண்டு அவன் ஆண்டாளை ஏற்றுக் கொண்டதை உலகிற்குக்காட்டும் திருவிழா ஆண்டாள் திருக்கல்யாணம் ஆகும். இதனை போகித் திருக்கல்யாணம் எனவும் கூறுவர். கானும் பொங்கல் அன்று குதிரைவாகனத்தில் ஆற்றின் நடுவே மாடுமிரட்டும் நிகழ்ச்சி, பரிவேட்டை உற்சவம் நடத்தப்பெறும். இது தொன்றுதொட்டு நிகழும் வைபவம். மக்கள் அனைவரும் மகிழ்வுறும் நிகழ்ச்சியாகும்.

ஆற்றுத்திருவிழா அன்று தேவநாதன், தாயார், தேசிகன் ஆகியோருக்கு தீர்த்தவாரித்திருவிழா நடைபெறும் பெண்ணையாற்றில் நத்தப்பட்டுத் துறையில் இது நடைபெறும். ரதசப்தமி தைத்திங்களில் மிகவும் சிறப்பாக நடத்தப்பெறும். இது சப்தமிஓரையன்று நிகழும். இவ்விழாநடைபெறுவதன் நோக்கம் அன்று சூரியதேவன் ஏழு குதிரைகளையுடைய தேரின்மேல் ஏறி வடக்குமுகமாகப் பெருமாளைத் தொழவருவார் என்று கூறுவர். இதனையொட்டியே சப்தமி கொண்டாடப் படுகிறது. அன்று சூர்யப்பிரபையில் பெருமாள் உலா வருவார். மகக்கோளில் திருமழிசைப் பிரானுக்கு பத்து

நாட்கள் விழா நடைபெறும். தைப்பூசத்தன்று பௌர்ணமியில் நாகவாகன சேவையும், சந்திரகிரகணம் போன்ற விழாக்களும் நடைபெறும்.

## மாசித்திருவிழா

இம்மாதம் பத்துநாட்கள் விழாநடைபெறும். மிருகசீரிடக்கோளில் திருக்கச்சிநம்பிகளுக்கு சாற்றுமுறையும், புனர்பூசத்தில் குலசேகர ஆழ்வார் சாற்றுமுறையும் சிறப்பாக நடைபெறும். மாசிமகம் சிறப்பாக நடைபெறும். இதனை சமுத்திர தீர்த்தவாரித் திருவிழா என்பர். இவ்விழாவின்போது திருப்பாதிரிப் புலியூருக்கு அண்மையில் காணப்படும் தேவனாம் பட்டினச் சமுத்திரக்கரையில் தீர்த்தவாரிவிழா சிறப்பாக நடைபெறும். இதனை ஸ்ரீதேசிகன்,

> **"வாசித் தெழு மன்மதனார்நல்மணற்றோப்பில்**
> **மாசிக் கடலாடி மகிழ்ந்து வருவாரே"**[27].

என்று குறிப்பிட்டுள்ளார்.

## பங்குனித்திருவிழா

இத்திங்களில் ஸ்ரீராமநவமி விழா பத்து நாட்கள் நடைபெறும். அன்றையதினம் ஸ்ரீராமர் திருவீதிப் புறப்பாடுநிகழும். ஏழாம் நாள் பக்தராமதாஸ் சேவை விமரிசையாகக் கொண்டாடப்படும். பௌர்ணமி உத்திரக்கோளில் தாயார், பெருமாள், தேசிகன் போன்றோருக்குத் திருமஞ்சனம் நடைபெறும் அன்றே தாயாருக்கு திருப்பாவாடை சாற்றுமுறை நடைபெறும்.

இம்மாதத்திலே தாயாருக்கு வசந்த உற்சவம் ஐந்து நாட்களுக்கு நடைபெறும். இவைமட்டுமன்றி ஏகாதசி, அமாவாசை, பௌர்ணமி, மாதப்பிறப்பு, சனிக்கிழமை தோறும் பெருமாள் புறப்பாடு, வெள்ளிக்கிழமை தாயார் உள்புறப்பாடு, ஸ்ரீதேசிகன் திருவீதிபுறப்பாடு போன்றவை மாதந்தோறும் நடைபெறும் விழாக்கள் ஆகும். இவ்விழாக்களின் போது மெய்யன்பர்கள் கூட்டம் நிரம்பிவழியும் என்பது குறிப்பிடத்தக்கது.

## வேள்விவழிபாடு

இறைவனை மகிழ்ச்சியடைய வைப்பதற்காக வேள்விகள் செய்யப்படுகின்றன. இதனால் தீ வளர்த்து வேள்விகள் பலவற்றை மக்கள் செய்தனர். சில வேள்விகள் ஆண்டுக்கணக்கில் செய்யப்பட்டதாகக் கூறுவர். இவ்வேள்வியை அக்னி ஹோத்திரம் என்றும் அழைப்பர். அக்னிகுண்டம் அமைத்து அதனைச் சுற்றி அந்தணர்கள் அமர்ந்து தீ வளர்ப்பர். இதில் உணவுப் பொருள்கள், உடைகள் என்று பலவற்றைப் போடுவர். இதனை வேள்வி என்பர். இவ்வேள்வியில் போடும் பொருட்கள் தேவர்களுக்கு உணவாகும் என்று கூறப்படுகிறது. இதனால் தேவர்கள் மகிழ்வர். "செழுமை இவ்வுலகில் மக்கட்பேறு, இவ்வுலக வாழ்க்கைக்குப்பின் சுவர்க்க உலகம் என்னும் இவை வேள்வியின் குறிக்கோளாகப் பயன்படுகின்றன. உலகமாகிய கடலிலிருந்து கரையேறப் பயன்படும் தெப்பமாக வேள்வி பயன்படுகிறது"[28] என்பதன் மூலம் வேள்வியின் நோக்கத்தை அறியலாம். இவ்வேள்விகள் திருக்கோயில்களில் உலகநன்மைக்காகச் செய்யப்

படுகின்றன. திருவந்திபுரம் திருக்கோயிலில் சித்திரைப் பெருந்திருவிழாவாகிய பிரம்மோற்சவத்தின் போது பத்துநாட்களும் காலை மாலை என்று இருவேளையும், வேள்விகளை வேள்விச் சாலையில் தொடர்ந்து செய்வர். நாள்வழி பாட்டின் போது காலசந்திபூசையிலும் இரவு பூசையின்போதும் வேள்வி செய்வர். பெரிய அளவிலான வேள்விகள் பழங்கள், ஆடைகள் போன்றவற்றைப் போட்டு செய்பவை விழாக்காலங்களிலே நடைபெறும். மற்ற நாட்களில் சிறிய அளவில் செய்யப்படும்.

வேள்விச்சாலை அமைக்கும் போது வேள்வி மேடையின் மேல் நெல்லைப் பரப்புவர் பின்பு அதன்மேல் இலையை விரித்து அதன் மீது அரிசியைப் பரப்புவர். அவ்வரிசியின் மேல் கமலங்கள் வரையப்பட்டநூல் சுற்றிய ஒன்பது கலசங்கள் வைக்கப்படும். நடுவில் உள்ளது பெரியதாகவும் மற்றவை சிறியதாகவும் காணப்படும். இதன் மேல் எட்டு கமலங்கள் வடிவில் நூலினால் சுற்றப்பட்டிருக்கும். கலசத்தினுள் சந்தனம், மஞ்சள்தூள், குங்குமம் போன்ற மங்கலப் பொருட்களும் புதிய நீரும் ஊற்றப்படும். கலசத்தின் வாயில் மாவிலையுடன் தேங்காயினை வைத்து மேடையின் அருகில் முளைப்பாலிகை வைக்கப்படும். பின்பு தூப தீபம் காட்டி வேள்வி வழிபாட்டினை தொடங்குவர். இது வேள்வி வழி பாட்டினைச் செய்யும் முறையாகும்.

## வழிபாட்டுச் செயல்கள்

வழிபாட்டுச் செயல்கள் என்றால் இறைவனுக்கு அணியப்படும் அணிகலன்கள், ஆடைகள் மலரிடல், படையல், தீபாராதனை போன்றவற்றைக் குறிக்கும்.

## ஆடைகளணிதல்

இறைவனுக்குத் திருமுழுக்கு நிகழ்த்தியபிறகு ஆடைகளை அணிவிப்பர். இதற்குச் சில விதிமுறைகள் உண்டு. "பெருமாள் இன்னவேளையில் இன்னநிற ஆடைதான் அணியவேண்டும் என்பதில்லை. பச்சை, மஞ்சள், நீலம், வெள்ளை என்று எல்லாநிறத்திலும் ஆடை அணிவிக்கப்பெறும். ஆனால் கருப்பு நிற ஆடைகளை மட்டும் பெருமாளுக்கு அணிவிக்க மாட்டார்கள்"[29] என்ற செய்திகள் ஆடைகளைப் பற்றி அறிய உதவுகின்றன.

## அணிகலனணிதல்

ஆடைகளை அணிவித்தபிறகு அணிகலன்களை அணிவிப்பர். பெருமாள், தாயார், தேசிகன் என்று இவர்களுக்குத் தனித்தனி அணிகலன்கள் உள்ளன.

## மலரிடல்

அணிகலன்களை அணிவித்தபின்பு மலர்களை அணிவிப்பர். செண்பகம், செந்தாமரை, தாழம்பூ, துளசி, சாமந்தி, முல்லை, மல்லிகை, வெண்தாமரை, அலரி, சங்குபூ, சாதிமுல்லை, மருக்கொழுந்து, வில்வம், கசகரிணிகை, கோவிதாரம் போன்ற மலர்களால் கட்டிய மாலைகளை அணிவிப்பர். இன்னமலர்களைச் சூட்டவேண்டும் என்பதில்லை. எந்தெந்தக் காலத்தில் என்னென்ன பூக்கள் கிடைக்கின்றனவோ அவற்றையெல்லாம் அணிவிப்பர்.

## பெருமாளுக்கு உரிய அணிகலன்கள்

வைரக்கீரிடம், சங்குசக்கரம், அபயஹஸ்தம், கடிகஹஸ்தம், திருமார்புலக்ஷ்மி, கௌஸ்தூபபூமாலை, முத்தாரம் நாகாபரணம், ஒட்டியாணம், தண்டை, சலங்கை, அரைஞாண்கயிறு, வைஜெயந்தி மாலை, தங்கமுப்புரிநூல், வைரத்திலகம், காதணி, திருமுடி போன்றவை இறைவனுக்கு அணிவிக்கப்பெறும் அணிகலன்கள் ஆகும்.

## தாயாருக்கு உரிய அணிகலன்கள்

முடி, பத்மஹஸ்தம், அபயஹஸ்தம், பத்மம், திருமாங்கல்யம், பவழமாலை, ஒட்டியாணம், தங்கநகைகள், வைரத்தோடு, மூக்குத்தி, மாட்டல், புல்லாக்கு, வளையல், வங்கி, பதக்கம், திருவாபரணங்கள், காசுமாலை, மாங்காய்மாலை போன்றவற்றை அணிவிப்பர். இக்கோயிலில் தாயாருக்கு பின் அலங்காரம் செய்யப்படுவது சிறப்பான அம்சமாகும்.

## தேசிகருக்கு உரிய அணிகலன்கள்

ஸ்ரீகோசம், ஞானமுத்திரை, பதக்கம், வைரத்திருமண், ரத்தினஅங்கி போன்றவை தேசிகருக்கு உரியவையாகும். மற்ற தெய்வங்களுக்கு இறைவன் இறைவிக்கு அணிவிக்கப்பெறும் அணிகலன்களையே அணிவிப்பர்.

## படையல்கள்

வழிபாடு செய்யும் போது தேவநாதசுவாமிக்கும், செங்கமலத்தாயாருக்கும், மற்றும் உள்ள சிற்றாலயத் தெய்வங்களுக்கும் நாள்தோறும் படையல்கள் நிகழ்த்தப் படுகின்றன. சர்க்கரைப்பொங்கல், தயிர்சாதம், புளியோதரை, வெண்பொங்கல் போன்றவை நாள்வழிபாட்டின் போது படைக்கப்பெறுபவையாகும்.

''விழாக்காலங்களில் தோசை, வடை, சுண்டல், குடலைஇட்லி, கேசரி, தேன்குழல், பானகம், அப்பம், அமிர்தகலசம், பால்சாதம், அதிரசம், பஞ்சாமிர்தம், பால், பழம், வெண்ணெய் போன்றவற்றைப் படைப்பர்''[30]. கோயிலின் அக்னிமூலையில் காணப்படும் மடைப் பள்ளியிலோ அல்லது அர்ச்சகர் வீட்டிலோ செய்யும் உணவுப் பொருட்களையே இறைவனுக்குப் படைப்பர் என்று கூறப்படுகிறது.

## தீபாராதனை

இறைவழிபாட்டில் தீபாராதனை முக்கியப் பங்கு வகிக்கின்றது. இக்கோயிலில் நாள்தோறும் நடைபெறும் வழிபாட்டில் தூபம், தீபம் காட்டப்பெறுகின்றது. இறைவனுக்கு திருமுழுக்கு நடைபெற்ற பின்பு தீபாராதனை காண்பிப்பர். ''சிரசுமுதல் திருவடிவரை தீபாராதனை காட்டுவர். சிரசில் தீபம் காண்பிப்பது இராஜாக்களுக்காகவும், நிலாட்டம் கிராமத்தினருக் காகவும், திருவடி அர்ச்சகர்களுக்காகவும் காண்பிக்கப் படுகின்றது''[31]. பதினாறு வகை தீபங்கள் உள்ளன என்பர். இவற்றுள் ஒரு சிலதிருவிழாக்காலங்களில் காண்பிக்கப்

பெறும். தூபம், கருடதீபம், சேஷதீபம், பஞ்சமுகதீபம், துவாசதீபம், ரததீபம், கற்பூரதீபம் என்ற முறையில் காட்டப்படும் இவை முடிந்தவுடன் இறைவனுக்கு கொடை, சாமரம், மயில்விசிறி, மான்வால்விசிறி, கண்ணாடி போன்றவை காட்டி உபசரிப்பர். இவற்றின் இறுதியில் மங்களதீபம் காண்பிப்பர். இப்படியாகத் தீபாராதனை இக்கோயிலில் நடைபெறுகின்றது.

## வழிபாடும் திருவிழாவும்

வழிபாடும் திருவிழாவும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்துள்ளன. வழிபாடு என்பது மன அமைதியைத்தருவது. திருவிழா மனமகிழ்ச்சியை ஏற்படுத்துவது ஆகும். வழிபாட்டிலேயே மிகவும் சிறப்புப்பெற்றது கோயில் வழிபாடு ஆகும். இப்படிப்பட்ட கோயில்களில் திருவிழா என்று ஒன்று நடைபெறும். அப்படி நடைபெறாவிடில் அக்கோயில் சிறப்புப் பெறுவதில்லை. எனவே வழிபாடும் திருவிழாவும் ஒருசேர நடைபெறும் கோயில் சிறப்புப் பெறுகிறது. இக்கோயிலில் வழிபாட்டுடன் திருவிழாக்கள் பலவும் நடைபெறுகின்றன. இத்திருவிழாக்காலங்களில் மக்களின் பொருளாதாரம் உயருகிறது. ஏழைகள் சிறுசிறு கடைகள் வைத்து வணிகம் செய்கின்றனர். இதனால் நல்ல வருமானம் கிடைக்கின்றது. இதனால் திருவிழா வழிபடுதற்கு மட்டுமன்றி வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக் கொள்ளவும் வழிவகுக்கின்றது. திருவிழாக் காலங்களில் திவ்வியபிரபந்தம் போன்ற பக்திப்பாடல்கள் ஓதப்பெறுவதால் மக்கள் இசைப்பாடல்களைக் கேட்டு மகிழ்வர். இப்படி வழிபாடும் திருவிழாவும் மக்களிடையே களிப்பை ஏற்படுத்துகின்றன.

## வழிபாடும் அர்ச்சகரும்

அர்ச்சகர் காலைக்கடன்களை முடித்து நீராடியபின்பு பன்னிரண்டு திருமண்களை அணிந்து கொண்டு மணிமாலை, பவித்திர மாலை போன்றவற்றை அணிந்து கைவிளக்கு, கமண்டலத்தில் எண்ணெய் மற்றும் திறவுகோலை எடுத்துக்கொண்டு கோயிலுக்கு வருவார். பின்பு கோயிலைத் திறந்து சமஸ்கிருதமொழியில் சுப்ரபாதம் பாடுவார். அதற்குப்பிறகு துவாரபாலகரின் உத்தரவினைப்பெற்று விமான தேவதைகளை வணங்கி இறைவனை எழுந்தருளச் செய்து பசுவை இறைவன் பார்வையில் காட்டுவர். திருவிளக்கினை ஏற்றி தீபாராதனை காட்டுவர். அகண்ட விளக்கினைக் கொண்டு மற்ற விளக்குகளை ஏற்றுவர். காலை, நண்பகல், மாலை, இரவு வழிபாடு முடிந்ததும் பள்ளி கொள்ளச் செய்து ஆரத்தி காட்டி வழிபாட்டினை முடிப்பர். திறவுகோலால் ஆலயத்தைப் பூட்டி அர்ச்சகர் தம் இல்லம் செல்வார். இப்படியாக பாரதவாஜி பட்டர் பரம்பரையில் வந்த அர்ச்சகர் இறைவழிபாட்டினை வழிவழியாகச் செய்து வருகின்றனர். இப்பூசையினை இப்போதும் இவர்கள் தவறாது செய்து வருகின்றனர்.

## வழிபாடும் பக்தர்களும்

இறைவனை வழிபடுவதில் பக்தர்கள் அதிக அளவில் ஆர்வம் காட்டி வருகின்றனர். இவர்கள் தம் இறையுணர்வை வெளிப்படுத்த திருவிழாக்கள், வழிபாடுகள் போன்றவற்றில் கலந்து கொள்கின்றனர். இக்கோயிலுக்குப் பக்தர்கள் நீராடி உள்ளத்தூய்மையுடன்

பெருமாளின் அருளைப்பெற வருகின்றனர். இறைஅருள் பெறும்போது இறைவனைப் போற்றி, புனிதத்தீர்த்தம், சடாரி, மலர், தெய்வப்படையல் போன்றவற்றைப் பெறுகின்றனர்.

தாயார் சன்னதியில் புனிதத்தீர்த்தம், சடாரி சேவை, மலர், மஞ்சள், குங்குமம் போன்றவை கிடைக்கிறது. பரிமுகப்பெருமாள் கோயிலில் துளசி, சடாரி சேவை போன்றவை கிடைக்கின்றது. திருமுழுக்குக் காலங்களில் திருமுழுக்குச் செய்யப்பெற்ற சந்தனம், வாசனைப் பொருள், மஞ்சள் போன்றவை இவர்களுக்கு வழங்கப்படும். திருக்கல்யாண காலங்களில் பக்தர்களுக்கு மஞ்சள் அரிசியை வழங்குவர். இதனைத் தலையில் வைத்துக்கொண்டால் ஆணவம், கன்மம், மாயை போன்றவை நீங்கிவிடும் என்று இவர்கள் கருதுகின்றனர். இக்கோயில் பிரார்த்தனைக் கோயிலாகும். பக்தர்கள் திருமணம் நடைபெறவேண்டும், பிள்ளைப்பேறு கிட்டவேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டு இறைவனுக்கும் இறைவிக்கும் திருமுழுக்குச் செய்தல், புத்தாடை அணிவித்தல், திருக்கல்யாணம் நடத்துதல் போன்றவற்றைச் செய்விக்கின்றனர்.

## வழிபாடும் காணிக்கையும்

மக்கள் தம் வாழ்வு நலமுறவும், தொழிலில் முன்னேற்றமடையவும், திருமணபாக்கியம் கிட்டவும், குழந்தைவேண்டியும், அரசாங்கப்பணிகள் கிடைக்க வேண்டும் என வேண்டியும், தேர்வுகளில் வெற்றி பெறவும், என்று பல வேண்டுதல்களைப்

பெருமாளிடமும், தாயாரிடமும், பரிமுகப் பெருமாளிடமும் வைக்கின்றனர். இவை நல்லமுறையில் நடைபெற்றவுடன் அதன் வெளிப்பாடாக மகிழ்ச்சியுடன் இறைவனுக்குக் காணிக்கை செலுத்துகின்றனர். இக்கோயிலுக்கு மக்கள் பணம், தங்க நகைகள், நெல், கடிகாரம், குத்துவிளக்கு, மங்களநாண் போன்றவற்றைக் காணிக்கைப் பொருட்களாக இன்றும் செலுத்தி வருகின்றனர்.

## தொகுப்புரை

உடலுக்கு உணவு எவ்வளவு அவசியமோ அதேபோன்று உயிர்களுக்கு வழிபாடு மிகவும் அவசியமாகும். வழிபாடு என்பது வணக்கம், பூசனை, வணங்குதல் போன்ற பல பொருள்களில் வருகின்றது.

திருவந்திபுரம் திருக்கோயிலில் ஆறுகால பூசைகள் நிகழ்கின்றன.

இக்கோயிலில் சித்திரை, ஆடி, மார்கழி, தை, புர்ட்டாசி, பங்குனி போன்ற மாதங்களில் மிகுதியான விழாக்கள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு மாதவிழாவும் பத்து நாட்கள் நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

கருமைநிறத்தை தவிரமற்றநிற ஆடைகள் பெருமாளுக்கும் மற்ற தெய்வங்களுக்கும் அணிவிக்கப் பெறும். இறைவனுக்கு துளசி, செண்பகம், முல்லை, தாழம்பூ, மல்லிகை, மருக்கொழுந்து, சாதிமுல்லை போன்ற மலர்களை அணிவிக்கின்றனர். தங்கம், வெள்ளி, ரத்தினம், பவளம் போன்றவற்றால் செய்த அணிகலன்கள் அணிவிக்கப்பெறுகின்றன.

சர்க்கரைப்பொங்கல், தயிர்சாதம், புளியோதரை போன்றவை தினந்தோறும் செய்யப்படும் நைவேத்தியங்கள் ஆகும். விழாக்காலங்களில் வேறு வைநேத்தியங்கள் செய்யப்படுகின்றன.

கருடதீபம், சேஷதீபம், பஞ்சமுகதீபம், துவாசதீபம், ரததீபம் போன்ற தீபங்கள் இக்கோயில் திருவிழாக்காலங்களில் காட்டப்படுகின்றன.

பாரதவாஜிபட்டர் பரம்பரையினர் வழிவழியாக இறைவனுக்கு வழிபாடு செய்கின்றனர்.

வழிபடுவதற்காகப் பல பக்தர்கள் இக்கோயிலுக்கு வந்து புனிதத்தீர்த்தம், துளசி, சடாரிசேவை போன்றவற்றைப் பெற்றுக் கொள்கின்றனர்.

இக்கோயிலில் காணிக்கையாக நெல், தங்கநகைகள், குத்துவிளக்கு, கடிகாரம், மங்கள நாண் போன்றவற்றைப் பக்தர்கள் அளிக்கின்றனர்.

## சான்றெண் விளக்கம்

1. கழகப்புலவர்குழுவினர், (தொகு) கழகத்தமிழ் அகராதி, ப. 754

2. காந்திதாசன் .மா, தமிழகத்தில் முருகவழிபாடு, ப.12.

3. நாகப்பாநாச்சியப்பன், திருக்கோயில் வழிபாடு, ப.20.

4. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.415.

5. மேலது. நூ.109.

6. சிலப்பதிகாரம்; 9:40.

7. கங்காதரன்.சா, இராசாமணி. செ, இந்துசமயம் ஓர் அறிமுகம், ப.38.

8. இராமலிங்கம்.மு, நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள், ப.108.

9. மேலது. ப. 109.

10. சீனிவாசன் என், (சொல்லக்கேட்டவை) வேதபாராயணம் செய்பவர், திருவந்திபுரம்

11. முத்துசாமி பிள்ளை கோ.மு. கோயிற்களஞ்சியம் அறிமுகம், ப.130.

12. இராமநாதன் பி. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப. 351.

13. இராமலிங்கம் மு. நாரயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவரசுவாமி திருக்கோயில் திருவிழாக்கள், ப. 155.

14. மேலது. ப.155.

15. திருவள்ளுவர், திருக்குறள் - வான்சிறப்பு, குறள்.18.

16. பரிபாடல், பாடல்-70.

17. பரமசிவானந்தம் அ.மு. சமுதாயமும் பண்பாடும், ப.382.

18. முத்துசாமிபிள்ளை. கோ.மு. கோயிற்களஞ்சியம் அறிமுகம், ப.146.

19. நீலமேகப்பட்டர் (சொல்லக் கேட்டவை) தலைமைப்பட்டர் திருவந்திபுரம்.

20. ரங்காச்சாரி ஏ.வி. (சொல்லக்கேட்டவை) முன்னாள் பொருளாதாரத்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், திருச்சித்திரக்கூடம்.

சாற்றுமுறை என்றால் சாத்துதல் என்பதாகும். இறைவனின் திருமுன்பு நின்றுகொண்டு தமிழ்மறைகளை ஆரம்பிப்பது. பாசுரங்கள் நிறைவு பெறுகின்ற நிலையில் கடைசி இரண்டு பாசுரங்களைச் சாற்றுப்பாசுரங்கள் என்று கூறுவர். சாற்றுப் பாசுரங்களைப் பாடுவதற்கு முன்பு இறைவனுக்குச் சிறப்பு வழிபாடு செய்து திருபோனகம் இறைவனுக்குப் படைத்துப் பாடலை நிறைவு செய்வது சாற்று முறை எனப்படும்.

21. நீலமேகப்பட்டர் (சொல்லக்கேட்டவை) தலைமைப்பட்டர், திருவந்திபுரம்.

22. மேலது.

23. மாமரம் பூக்கும் காலத்தில் டோலோத்ஸவம் என்னும் மஹோத்ஸவத்தை மூன்று நாள் பரமாத்மாவுக்குச் செயயவேண்டும் உபவாஸமிருந்து புலனடக்கத்துடன் கூடியவனான தீக்ஷிதன், தன்னை அலங்கரித்துக் கொண்டு, அலங்கரிக்கப் பெற்றவனான ஸ்ரீய:பதியான ஹரி யென்னும் விஷ்ணுவை சத்ரம் (குடை) சாமரம், வாத்யம், கொடிகள் முதலானவற்றோடு கூடிய திருப்பல்லக்கிலே எழுந்தருளச் செய்து ஹரித்ராசூர்ணத்தைத் தூவிக் கொண்டு, பரமேஸ்வரனான அப்பெருமானைத் துதித்துக் கொண்டு, காலை வேளையில் ஸ்தீரீபுருஷர்கள் பலரோடு எங்கும்

மரங்கள் நிறைந்த தோட்டத்திற்குச் செல்ல வேண்டும் அங்கு மாமரத்தின் நிழலினுள்ள மேடையில் நறுமணம் மிக்க மாம்பூக்கள், குருக்கத்திப்பூக்கள், முல்லைப் பூக்கள் முதலானவற்றால் ஹரியை ஆராதிக்கவேண்டும். மிளகு கலந்த தயிரமுது, கொழுக்கட்டை ஆகியவற்றைச் ஸமர்ப்பிக்க வேண்டும். தேன்குழல் முதலான பக்ஷணங்களையும், பானகத்தையும், பாக்கோடும், கற்பூரத்தோடும் கூடிய தாம்பூலத்தையும் ஸமர்ப்பிக்க வேண்டும். ஆவரண தேவதைகளைப் பூஜித்து அதற்குப்பின் ஹோமத்தைச் செய்ய வேண்டும் எல்லாக் கர்மங்களையும் செய்து விஷ்ணுஸீக்தமந்திரங்களால் ஹவிஸ்ஸை ஹோமம் செய்ய வேண்டும். வைஷ்ணவோத்தமன் மாத வமந்திரத்தினால் ஸர்க்கரை கலந்த எள்ளை ஆயிரம் முறை பக்தியுடன் அக்னியில் ஹோமம் செய்யவேண்டும். வைகுண்ட பார்ஷதர்களுக்கு ஹோமம் செய்து ஹோமத்தை நிறைவடையச் செய்யவேண்டும். பவமாநஸீக்தருக்குகளில் ஒவ்வொன்றாலும் ஹரிக்குப் புஷ்பாஞ்சலி ஸமர்ப்பிக்க வேண்டும். அதற்குப்பின் அழகியதாய், அலங்கரிக்கப் பெற்றதாய் வைரம், வைடூர்யம், மாணிக்கம், முத்து, பவழம் முதலிய நவரத்னங்களாலும் பதிக்கப்பெற்றதான ஊஞ்சலை அந்த மாமரத்தில் கட்டி, அதில் ஸ்ரீதேவியோடு கூடத் தேவர் தலைவனை எழுந்தருளச் செய்து, கந்தகம், புஷ்பம், தூபம், தீபம், பழம், பக்ஷ்யங்கள், நிவேதனங்கள் ஆகியவற்றால் நன்கு பூஜிக்க வேண்டும். பூ அக்ஷதை, தர்ப்பைநுனி, எள், நெய், தேன், நீர், கடுகு ஆகியவற்றால் அஷ்டாங்க அர்க்யத்தை ஸமர்ப்பிக்க வேண்டும். ஊஞ்சலின் நான்கு பாதங்களிலும் நாலு வேதங்களையும், ஸாமகான மந்திரங்களை விரிப்பிலும், ஊஞ்சலில்

திருவனந்தாழ்வானையும், பீடத்தில் எல்லா ஸவரங்களையும் திருவாலவட்டமாகிற விசிறியில் வைநதேயனையும், சாமரத்தில் ஸாவித்திரியையும், திக்பாலகர்களை திக்குகளிலும், மேலே ப்ரஹ்மாவையும், ப்ருஹஸ்பதியையும், கீழே காளியையும், ருத்ரனையும், க்ஷேத்ரபாலனையும், விநாயகனையும் மேற்கட்டியில் சந்தரஸீர்யர்கள் நக்ஷத்ரங்கள், க்ரஹங்கள் ஆகியவற்றையும் அர்ச்சிக்க வேண்டியது. சுற்றிலும் இதிஹாசங்களோடு கூடிய வேதங்கள், புராணங்கள், தேவதாஸமுஹங்கள் மலைகள், கடல்கள் ஆகிய அனைத்தும் பூஜிக்கப்பட வேண்டும்.

கிருஷ்ண ஸ்வாமி, எஸ். ஸ்ரீ விஷ்ணுசித்த விஜயம் (பக்.422-423.)

24. நீலமேகப்பட்டர் (சொல்லக்கேட்டவை) தலைமைப்பட்டர், திருவந்திபுரம்.

25. மறைமலையடிகள், தமிழர்மதம், ப.178.

26. *சீனிவாசன்* என். (சொல்லக் கேட்டவை) வேதபாராயணம் செய்பவர், திருவந்திபுரம்.

27. தேசிகப்பிரபந்தம், நவமணிமாலை, பாடல் 4.

28. கங்காதரன் ச. இராசாமணி செ. இந்துசமயம் ஓர் அறிமுகம். ப. 116.

29. நீலமேகபட்டர் (சொல்லக்கேட்டவை) தலைமைப் பட்டர், திருவந்திபுரம்.

30. மேலது.

31. மேலது.

............... ...

# திருக்கோயில் நிருவாகம்

## முன்னுரை

முற்காலத்தில் மன்னர்கள் பல கோயில்களைக் கட்டினார்கள். அங்குள்ள இறைவனுக்கு வேண்டிய அணிகலன்கள், ஆடைகள், பூசைகள் நடைபெறுவதற்கு வேண்டிய பொருளுதவி போன்றவற்றை வழங்கினர். இவற்றை முறையாகவும், செம்மையாகவும் பராமரிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதனால் நிருவாகத்திற்கு நம்பிக்கையான நபரை நிர்வகித்தனர். இந்த நிருவாகம் பலரிடம் பரம்பரையாக இருந்து வந்தது. ''பழங்காலத்தில் ஊருக்கு அணித்தாகவுள்ள குன்றுகளிலும் காடுகளிலும் வழிபடுமிடமாக இருந்தவைகள், அரசர்கள் காலத்தில் கோயில்கள் என்ற பெயரில் வரன்முறையான நிருவாக அமைப்பின் கீழ் உருப்பெறத் தொடங்கின. இவ்வாறு உருப்பெற்ற காலத்தில் இவை மக்களின் வாழ்க்கையில் பின்னிப்பிணைந்த ஒன்றாக மாறின''[1]. அது மட்டுமன்றி மக்கள் பலர் கோயிலுக்கு பொன், வெள்ளி, நகைகள், நிலங்கள், தானியங்கள், தோட்டங்கள், மண்டபங்கள் போன்றவற்றை வழங்கினர். இவை கோயில் நிருவாகத்தின் கீழ்விடப்பட்டன. இவற்றில் கிடைக்கும் பொருட்கள் கோயிலுக்காகச் செலவிடப்பட்டன. இப்படிப்பட்ட நிருவாகத்தினை மக்கள் அறிவது மிகவும் அவசியமாகும்.

## நிருவாக வளர்ச்சி

திருவந்திபுரம் திருக்கோயில் ஆதிகாலத்திலிருந்து பாரதவாஜிபட்டர் பரம்பரையினரால் நிர்வகிக்கப்பட்டது. பின்பு இவர்களால் நிருவகிக்க இயலாமையினால் அறங்காவலர்களிடம் ஒப்படைத்தனர். "1882 ஆம் ஆண்டு அறநிலையத்துறைக்கட்டுப்பாட்டின் கீழ் இக்கோயில் வந்தது. அதன் பின்பு 1957 ஆம் ஆண்டு முதல் செயல்அலுவலர் இக்கோயிலை நிருவகித்து வருகிறார்"[2]. இப்படியாகப் பல செயல் அலுவலர்கள் இக்கோயிலை நன்கு நிர்வகித்துள்ளனர். "தமிழ்நாட்டில் முன்பிருந்த இந்துசமய அறநிலையச்சட்டங்கள் தொகுத்துத் திருத்தப்பட்டு 1959 ஆம் ஆண்டில் 22வது சட்டமாக சீரமைக்கப்பட்டன. அவை 1960 ஆம் ஆண்டு சனவரி மாதம் முதல் நாளிலிருந்து நடைமுறைக்கு வந்துள்ளன. தமிழ்நாட்டிலுள்ள இந்துசமயப் பொதுக் கோயில் களெல்லாம் இந்தச் சட்டத்தின் ஆட்சிக்கு உட்படுகின்றன. ஒவ்வொரு கோயிலின் மரபு, அதில் வழக்கமாக நடைபெற்று வரும் வழிபாட்டுமுறை, சடங்குமுறை ஆகியவற்றிற்கிணங்க கோயில்களின் நிருவாகம் நடைபெறுவதற்காக இச்சட்டத்தின் கீழ் விதிகள் இயற்றப்பெற்றுள்ளன. இச்சட்டத்திற்கேற்பத் திருக்கோயில்களுக்கு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை அலுவலர்கள் செயலாளர்களாகப் பணிபுரிந்து வருகிறார்கள்"[3]. இச்சட்டங்கள் கோயில்களை நிருவகிக்க உறுதுணையாக உள்ளன. இக்கோயில் படிப்படியாக பல முன்னேற்றங்களைப் பெற்று மிகவும் பொலிவுபெற்றுத்திகழ்கின்றது.

## பணியாளர்கள்

திருக்கோயில் நிருவாகத்தில் பணிகளைச் செய்வதற்கும், பூசைகளைச் செய்வதற்கும் பல பணியாளர்கள் இருக்கின்றனர். அவர்களில் நிருவாக அலுவலர்கள் மூன்று பேர் ஆவர். உள்துறை ஊழியம் செய்பவர்கள் பதினான்கு பேர் ஆவர். இவர்களுக்கு உரிய ஊதியத்தை தேவஸ்தானம் வழங்குகிறது. இவர்கள் இப்பணியினை மிகவும் சிறப்பாகச் செய்கின்றனர். கோயிலுக்கு வரும் பக்தர்களை நன்கு உபசரித்து கோயில் பற்றிய செய்திகளை இன்முகத்துடன் எடுத்துக் கூறுகின்றனர். இக்கோயில் பட்டர்கள், வேதபாராயணம் செய்வோர் போன்றோருக்குத் தனியாக ஊதியம் வழங்கப்படுவதில்லை.

கோயிலின் நிருவாகம் சம்பந்தமான அனைத்துப் பொறுப்புகளையும் கவனிப்பவர் செயல்அலுவலர். இப்பணிசெய்பவரைத் தமிழ்நாடு இந்து அறநிலையத் துறை நியமிக்கிறது. இவர் கோயில் விழாக்களை நடத்தும் உரிமைபெற்றவர் ஆவார். இவரின்றி உள்துறை இயங்கஇயலாது என்பர்.

## திருக்கோயில் பணியாளர்கள் விபரம்

| வ.எண். | பணியாளர்களின் பெயர் | பதவியின் பெயர் | சம்பள விகிதம் |
|---|---|---|---|
| 1. | வி. மாசிலாமணி | கணக்கர் | 900-30-1050 |
| 2. | எல். மகாலிங்கம் | எழுத்தர் | 900-30-1050 |
| 3. | எஸ்.கார்த்திகேயன் | மணியம் | 450-15-525 |
| 4. | ஆர். வரதராஜன் | பரிசாரகம் | 250-10-300 |

| | | | |
|---|---|---|---|
| 5. | எஸ். சேஷாத்திரிராகவன் | சுயம்பாகி | 320-10-370 |
| 6. | டி.எஸ்.சீனிவாசன் | மெய்க்காவலர் | 320-10-350 |
| 7. | ஆர். சீனிவாசன் | மெய்க்காவலர் | 300-10-350 |
| 8. | ஜி. ராமன் | காவலர் 1 | 300-10-350 |
| 9. | வி.குமார் | காவலர் 2 | 300-10-350 |
| 10. | எம்.ஐய்யனார் | சேவகர் | 300-10-350 |
| 11. | கே. செல்வராஜ் | காவலர் | 300-10-350 |
| 12. | டி.ஆர்.ராமச்சந்திரன் | நாதஸ்வரம் | 450-15-525 |
| 13. | ஜி. தேசிகன் | இரவு காவலர் | 300-10-350 |
| 14. | டி. அஞ்சலை | திருவலகு 1 | 170-07-205 |
| 15. | வி. மங்கைலட்சுமி | திருவலகு 2 | 170-07-205 |
| 16. | ஆர். ராமன் | மாலைகட்டி | 90% |

## கணக்கர்

கோயிலின் கணக்கு வழக்குகளைக் கவனிப்பவர். இவர் நிலங்களைக் கவனிப்பதுடன் அதன்மூலம் வரும் வருவாயையும் வசூல் செய்யும் உரிமை பெற்றவர்.

## எழுத்தர்

திருக்கோயில் வரவு செலவுகளைப் பராமரித்து நிர்வாக அலுவலருக்கு உதவியாக இருப்பவர்.

## மணியம்

கோயிலின் மேல் விசாரணை நடத்தும் தகுதிபெற்றவர் மணியம். உள்துறை பணிகளான அன்றாட பூசைகள் மற்றும் புறப்பாடு சமயங்களில் நடத்துனராக இருந்து பணிபுரியும் தன்மையுடையவர்.

## பரிசாரகர்

இக்கோயில் பரிசாரகர் ஒருவர் உள்ளார். இவர் பூசைசெய்யத் தேவையான பொருட்களைச் சேகரித்து வருவதுடன், பட்டருக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்.

## சுயம்பாகி

சுயம்பாகி என்பவர் இறைவனுக்கு நைவேத்தியப் பொருட்கள் செய்து தருபவர். இவர்கள் தங்களுக்கு வேண்டிய ஆட்களைத் துணைக்கு வைத்துக் கொள்ளலாம். திருக்கோயில் மடைப்பள்ளியின் முழுப் பொறுப்பையும் வகிக்கும் இயல்பினை உடையவர்.

## மெய்க்காவலர்

இங்கு மெய்க்காவலர் இருவர் உள்ளனர். இவர்கள் புறப்பாடு காலங்களில் தீவட்டி சமர்ப்பிப்பர். சுற்றுக் கோயில்களில் திருவிளக்கு ஏற்றுதல், சுற்றுக் கோயில்களில் பூசை முடிந்ததும் சன்னதி கதவுகளைப் பூட்டிப்பாதுகாப்பர்.

## காவலர்கள்

இத்திருக்கோயிலில் மூன்று காவலர்கள் உள்ளனர். இவர்களில் ஒருவர் இரவுக்காவலர் ஆவார். இக்காவலர்கள் இரவு நேரங்களிலும், பகல் நேரங்களிலும் கோயிலைக் காவல் கா[illegible]ர்.

## சேவகர்

சிப்பாய் என்னும் இவர் பாதுகாவலில் இருந்து சேவகம் செய்பவர். மணியம் கூறும் சில்லறைப் பணிகளைக் கவணிப்பவர் ஆவார்.

## நாதஸ்வரம் வாசிப்பவர்

இங்கு நாதஸ்வரம் வாசிக்க ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார். இவருக்கு கோயில் நிருவாகத்தின் பொறுப்பில் வீடு வழங்கப்பட்டுள்ளது. இவர் பூசை நேரங்களில் நாதஸ்வரம் வாசிப்பார்.

## திருவலகு

இப்பணியை இருபெண்கள் செய்து வருகின்றனர். இவர்கள் கோயிலைச் சுக்தி செய்வர். திருவிழாக் காலங்களில் இவர்கள் பணி மிகவும் முக்கியமான ஒன்றாகும்.

## மாலைகட்டி

இவரை பூத்தொடுப்பவர் என்றும் கூறுவர். இவர் நாள்தோறும் தெய்வங்களுக்கு மாலை தொடுப்பார்.

## பட்டர்கள்

இறைவனுக்குப் பூசைகளைச் செய்பவர்கள் இவர்கள். இவர்களில் தலைமைப்பட்டர் உதவிக்கு பல பட்டர்களை நியமித்துள்ளார். அர்ச்சனைச் சீட்டுகளில்

வரும் பங்கும், அர்ச்சனைத்தட்டுகளில் வரும் பணமுமே இவர்களுக்கு வருமானமாகும். இவர்களுக்கு நிர்வாகத்தில் சம்பளம் கொடுக்கப்படுவதில்லை. உண்டியல் பணம் வேண்டி இவர்கள் நிர்வாகத்தின் மீது வழக்குத் தொடுத்துள்ளனர். பிறபணியாளர்களைப் போலவே அவர்களையும் கருதி சம்பளம் கொடுக்கப்பட்டால், உண்டியல் பணம் கோயில் வளர்ச்சிக்குப் பயன்படும். கோயிலில் இன்றியமையாதது பூசையே, அதைச் செய்யும் பட்டர்களே இன்றியமையாதவர்கள். எனவே அவர்களையும் அறநிலையப் பணியாளர்களாகக் கருதி ஊதியம் வழங்கப்படவேண்டும்.

## வேதபாராயணர்

இவர்கள் இதனைத் தொண்டாக எண்ணி பரம்பரையாகப் பணி செய்துவருகின்றனர். இவர்கள் தம்முடைய பிள்ளைகளை இப்பணியில் ஈடுபடுத்துவதை பெருமையாக எண்ணுகின்றனர். இவர்களுக்கும் நிர்வாகம் சம்பளம் வழங்கவில்லை. இவர்கள் கோயிலில் கொடுக்கப்படும். உணவுகளையும், தட்டில் வரும் பணத்தையும் பெற்றுத் தங்கள் வாழ்வை நடத்துகின்றனர்.

இறைவன் அணியும் ஆடைகளைத் துவைக்கவும், திருவிழாக்காலங்களில் பல்லக்குத்தூக்கவும் தினக்கூலியாகச் சிலரை நியமித்துள்ளனர். இப்படிப் பணிபுரியும் அனைவரும் தம்பணியைச் செவ்வனே செய்து வருகின்றனர்.

## சொத்துக்கள்

திருவந்திபுரம் திருக்கோயிலுக்குச் சொந்தமாக மிகுதியான நிலங்கள் உள்ளன. இக்கோயிலுக்குப் பல மன்னர்களும், மக்களும் மிகுதியான நிலங்களை வழங்கியுள்ளனர். இவை இன்று நல்ல வருவாயை வழங்கிவருகின்றன. இந்நிலங்கள் பரவலாகப் பல ஊர்களில் காணப்படுகின்றன.

### சொத்துக்கள் பற்றிய விபரம்

| வ.எண். | சொத்துக்கள் | ஏக்கர் | சென்ட் |
|---|---|---|---|
| 1. | நன்செய் | 62 | 10 |
| 2. | புன் செய் | 139 | 58 |
| 3. | கட்டிடங்கள் | 3 | எண்ணிக்கை |
| 4. | மனைகள் | 6 | எண்ணிக்கை |

### சொத்துக்கள் உள்ள இடங்கள்

| வ.எண். | நிலங்கள் உள்ள ஊர்கள் | மனைகள் உள்ள ஊர்கள் | கட்டிடங்கள் உள்ள ஊர்கள் |
|---|---|---|---|
| 1. | திருவந்திபுரம் | திருவந்திபுரம் - 1 | திருவந்திபுரம் |
| 2. | ஓட்டேரி | புருகேஸ்பேட்டை 5 | |
| 3. | குமாரப்பேட்டை | | |
| 4. | பூண்டி | | |
| 5. | கண்டரக்கோட்டை | | |
| 6. | புலவனூர் | | |
| 7. | கூத்தப்பாக்கம் | | |
| 8. | பானாம்பட்டு | | |
| 9. | பைத்தாம்பாடி | | |

10. திருக்கண்டேஸ்வரம்
11. தராசு
12. பாதிரிக்குப்பம்
13. பில்லாளி
14. காராமணிக்குப்பம்
15. தோட்டப்பட்டு
16. மேல்பட்டாம்பாக்கம்
17. குடிதாங்கி
18. வடவாம்பலம்
19. பேரங்கியூர்
20. குழந்தியாப்பட்டு
21. ஆலப்பாக்கம்
22. ஆண்டிப்பாளையம்
23. சாலையகரம்

மேற்கூரிய அனைத்து ஊர்களிலும் திருவந்திபுரம் திருக்கோயிலுக்கு உரிய சொத்துக்கள் உள்ளன.

## மானியங்கள்

இக்கோயிலுக்கு மானியம் என்று எதுவும் பெரிய அளவில் வழங்கப்படவில்லை. ''தஸ்திக் என்னும் பெயரில் 1512 ரூபாய் வழங்கப்படுகிறது. இது ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திற்கு முன்பிருந்து வழங்கப்பட்டுவருகிறது''[4]. இது திருவந்திபுரம், வெளிசெம்மண்டலம், காரமணிக்குப்பம் என்னும் மூன்று ஊர்களுக்கு சேர்த்து வழங்கப்பட்டுவருகிறது.

அணிகலன்கள் இங்கு இறைவனுக்கு அணிவிக்க பொான், வெள்ளி நகைகள் அதிக அளவில் காணப்படுகின்றன. இவை திருவிழா நாட்களைத்தவிர மற்ற நாட்களில் கருவூலத்தில் வைத்துப்

பாதுகாக்கப்படுகின்றன. இவை அரசினால் மதிப்பீடு செய்யப்பட்டவையாகும். முதல் மதிப்பீடு செய்யப்பட்ட விபரம் - நி.மு. 32428/54 ஆகும். இறுதி மதிப்பீடு செய்யப்பட்ட விபரம் - நி.மு. 9/89, நாள் 16.02.1989 ஆகும். இங்கு உலோகத் திருமேனிகள் அதிக அளவில் காணப்படுகின்றன.

## அணிகலன்கள் பற்றிய விபரம்

| வ.எண். | உலோகம் | கிலோ | கிராம் | மில்லிகிராம் |
|---|---|---|---|---|
| 1. | பொன் இனம் | 32 | 341 | 183 |
| 2. | வெள்ளி இனம் | 254 | 509 | 102 |

## உலோகத் திருமேனிகள் விபரம்

| உலோகத்திருமேனிகள் | புகைப்படம் எடுக்கப்பட்டவை | தொல்பொருள் துறையினர் பதிவு செய்தவை |
|---|---|---|
| 51 | 51 | 51 |

இப்படிப் பல உலோகத்தால் செய்த பல அணிகலன்கள் இங்குக் காணப்படுகின்றன.

## வரவும் செலவும்

இக்கோயிலின் முக்கிய வருவாய் இனங்கள் நிலங்கள், அர்ச்சனைக் கட்டணம், முடிக்குத்தகை, பிரசாதக்கடை குத்தகை, தேங்காய் பழக்கடைக்குத்தகை, காலணிபாதுகாப்புக் குத்தகை போன்றவையாகும். இவை ஆண்டுக்கு ஒருமுறை வசூல் [illegible]படும்

## வரவு பற்றிய விபரம்

| வ.எண். | வருவாய் இனங்கள் | ரூபாய் |
|---|---|---|
| 1. | குத்தகை நிலங்கள் | 1,50,000 |
| 2. | தோப்புக்குத்தகை | 8,000 |
| 3. | தேங்காய்பழம் பிரசாத விற்பனை உரிமம் | |
| | காலணி பாதுகாக்கும் உரிமம் | 2,50,000 |
| | காதுகுத்தும் உரிமம் | |
| 4. | காணிக்கை, உபயம் நன்கொடை | 55,000 |
| 5. | பலவகைக் கட்டணசீட்டுகள் | 3,00,000 |
| | மொத்தம் வரவு | 7,63, 000 |

## செலவு பற்றிய விபரம்

"இங்கு ஆண்டுதோறும் செய்யும் செலவுகளேயன்றி பூசைகள், சிப்பந்திகள் சம்பளம், கட்டளைச் செலவு, மராமத்துச் செலவு என்று பல செலவுகள் செய்யப்படுகின்றன".[5]

| வ.எண். | செலவினங்கள் | ரூபாய் |
|---|---|---|
| 1. | சிப்பந்திகள் சம்பளம் | 2,50,000 |
| 2. | இலாக்காவிற்கு சகாயத்தொகை | |
| | தணிக்கைக் கட்டணம் | 1,00,000 |
| 3. | மின்கட்டணம் மின்சாதனம் | 60,000 |
| 4. | சாதாரண நாள் பூசை செலவுகள் | 60,000 |
| 5. | வருட உற்சவம் மற்றும் பிரமோற்சவம் | 1,75,000 |
| 6. | கட்டளைச்செலவு | 35,000 |

| | | |
|---|---|---|
| 7. | மராமத்து மற்றும் பழுது பார்த்தல் | 25,000 |
| | மொத்தச்செலவு | 7,05,000 |

இவையே இங்கு செய்யப்படும் பல வகையான செலவுகள் ஆகும்.

## மாதச் செலவுகள்

மாதந்தோறும் சுமார் 16000 ரூபாய் செலவு செய்யப்படுகிறது. ஆனால் சித்திரை மற்றும் புரட்டாசி மாதங்களில் மட்டும் அதிக அளவில் செலவு செய்யப்படுகிறது. நைவேத்தியத்திற்கு வேண்டிய பொருட்கள் வாங்கச் செலவு செய்யப்படுகிறது. அதுமட்டுமன்றி இதரச் செலவுகளும் இதிலேயே செய்யப்படுகின்றன.

## நாட்செலவுகள்

நாள் ஒன்றுக்கு ரூபாய் 600 செலவு செய்யப்படுகிறது. இது திருவிழா நாட்களில் அதிக அளவில் செய்யப்படுகின்றது.

## தொகுப்புரை

திருவந்திபுரம் திருக்கோயில் இந்து அறநிலையத் துறைக் கட்டுப்பாட்டின் கீழ் உள்ளது.

இக்கோயிலில் அறநிலையத்துறை மூலம் நியமிக்கப்பட்டு ஊதியம் பெறும்பணியாளர்கள் மொத்தம் பதினாறு பேர் உள்ளனர். அதுமட்டுமன்றி பரம்பரையாகக் கோயிலுக்குப் பணிசெய்யும் பட்டர்கள், வேதபாராயணம்

செய்பவர், தினக்கூலிகள் போன்றோரும் உள்ளனர். இவர்களையும் ஊதியம் பெறும் பணியாளர்களாக நியமிப்பதில் அறநிலையத்துறை கவனம் செலுத்த வேண்டும் என்பது ஆய்வாளர் கருத்து.

இதற்கு நன்செய், புன்செய், நிலங்கள், கட்டிடங்கள், மனைகள் போன்றவை உள்ளன.

இக்கோயிலுக்கு மானியம் என்று எதுவும் கொடுக்கப்படவில்லை.

பொன், வெள்ளி, அணிகலன்கள் அதிக அளவில் காணப்படுகின்றன.

இக்கோயிலில் செலவுகள் அதிகம் செய்யப் பட்டாலும் அதற்குமேல் வருவாய் வருவது குறிப்பிடத் தக்கது.

## சான்றெண்விளக்கம்

1. நாகப்பாநாச்சியப்பன், திருப்பரங்குன்றம் கோயில் வேற்கோட்டம், ப.158.

2. மகாலிங்கம். எல். (சொல்லக்கேட்டவை) எழுத்தர், திருவந்திபுரம் திருக்கோயில்.

3. முத்துசாமிபிள்ளை கோ.மு. கோயிற்களஞ்சியம் அறிமுகம். ப. 154.

4. கிருஷ்ணகுமார்.க. (சொல்லக் கேட்டவை) செயல்அலுவலர், திருவந்திபுரம் திருக்கோயில்.

5. மகாலிங்கம். எல். (சொல்லக் கேட்டவை) எழுத்தர், திருவந்திபுரம் திருக்கோயில்.

# முடிவுரை

அக்நீந்திரனால் நிறுவப்பட்ட நகரமாதலால் திருவகீந்திபுரம் என அழைக்கப்பட்டது. குலோத்துங்கச் சோழன், மூன்றாம் ராஜராஜன், விக்ரம பாண்டியன், சுந்தரபாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன் இவர்கள் காலத்திலேயே இவர்களால் இக்கோயில்பணி நடைபெற்றது. எனவே சோழர்களாலும், பாண்டியர்களாலும் இக்கோயில் பாதுகாக்கப்பட்டுள்ளது எனத் தெரிகிறது.

தீர்த்த யாத்திரையின்போது அர்ச்சுனன் இக்கோயிலுக்கு வந்தான் என்பதன் மூலமும், புராணங்களில் இக்கோயில் சிறப்பாகப் பேசப்படுவ தாலும் இக்கோயிலின் பழமையை அறியலாம். தேவர்கள் ரிஷிகளின் வேண்டுகோளுக்கு இணங்க இறைவன் இங்கு கோயில்கொண்டான் என்ற செய்தி கல்வெட்டுக்களிலும், புராணங்களிலும் ஒரேமாதிரியாகக் கூறப்பட்டுள்ளது. இப்பொழுது உள்ள கோயிலின் காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டாக இருக்கலாம். கல்வெட்டுக்கள் மூலம் தொடர்ந்து இக்கோயில் பராமரிக்கப்பட்டு குடமுழுக்குச் செய்யப்பட்டதை அறியமுடிகிறது.

இதன் தலவிருட்சம் வில்வம், பஞ்சதீர்த்தம் என்று அழைக்கப்படும் ஐந்து தீர்த்தங்கள் இத்தலத்திற்கே உரிய தனிச்சிறப்பு வாய்ந்தவை. இங்க அருள்புரியும் இறைவன் மும்மூர்த்திகளும் ஒருவடிவாய் அமைந்த சிறப்பினை உடையவன். எனவே மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற

மூன்றும் வேறு எங்கும் இல்லாத குறிப்பிடத்தக்க பெருமைக்கு உரியவை. கோயில் மலைக்கோயிலாய் கருங்கற்களால் கட்டப்பட்டது.

ஆழ்வார்களில் திருமங்கையாழ்வார் வழிபட்டுப் பாடிய சிறப்பிற்குரியது. கோயிலில் தேசிகர் தபோமண்டபம் உள்ளது. இது வேதாந்த தேசிகர் தவம் செய்து வழிபடுவதற்காக ஏற்படுத்தப்பட்ட மண்டபம், இங்கு நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக அவர் தவம் செய்து வாழ்ந்ததாகக் கருதப்படுகிறது.

அறநிலையத்துறையினரால் நிருவாகம் ஏற்றுக் கொள்ளப்பட்டப்பின் திருப்பணிகள் அதிகமாக நடைபெறவில்லை என்பது சுட்டிக்காட்டத்தக்கது. போதுமான அளவு சொத்துக்கள், அணிகலன்கள் உள்ளன. போதுமான அளவு பணியாளர்களும் பணியாற்றுகின்றனர். எல்லோரும் அரசுப்பணியாளர்களாகக் கருதப்பட்டு ஊதியம் பெறுகின்ற நிலையில் பூசை செய்வோரும், வேதபாராயணம் செய்பவரும், மாதச் சம்பளம் பெறாதது குறிப்பிடத்தக்கது.

பலபுராணங்களில் பேசப்பட்ட இத்தலம் பெரியதிருமொழி மூன்றாம் பத்தில் திருமங்கையாழ் வாரால் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளது. நூற்றெட்டுத் திருப்பதிக்கோவை, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதி திருப்புகழ், மதுரகவி சேரநாட்டுத் திருப்புகழ், திருப்பாதிரிப்புலியூர்புராணம், தண்டபாணிவிஜயம் ஆகியவற்றில் இத்தலம் பாடப்பட்டுள்ளது. வேதாந்த தேசிகரால் இயற்றப்பட்ட மும்மணிக்கோவை, நவமணிமாலை என்பன இத்தலத்திற்காகவே இயற்றப்பட்டன. பிறஇலக்கியங்கள்

அனைத்திலும் இத்தலத்திற்கென ஒருசில பாடல்கள் மட்டுமே பாடப்பட்டுள்ளன. சைவ சமயக் கடவுளை அதிகமாகப் பாடிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இத்தலத்திற்கென தனித்தோத்திரப் பாமாலை பாடப்பட்டுள்ளது என்பது வியக்கத்தக்கது. தில்லையில் ஒரே சன்னதியில் இருசமயக் கடவுள்களும் இருப்பது போல் மும்மூர்த்திகளும் ஒருவடிவாய் அமைந்து மத ஒற்றுமையைக் காட்டக்கூடியதாக இத்தலம் அமைந்துள்ளது. இங்கு கொடுக்கப்பட்ட சொத்துக்கள், வருவாய் இனங்கள் எல்லாம் தோராயமாகக் கொடுக்கப்பட்டவையாகும்.

நூற்றியெட்டு திவ்விய தேசங்களில் ஏனைய திருத்தலங்களையும் இதுபோன்று ஆராய்வதற்கும், வைணவ ஆராய்ச்சியில் ஈடுபடுவோர் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற நிலையில் ஆராய்வதற்கும் இந்த ஆய்வேடு வழிகாட்டியாக அமையும்.

................

# துணை நூற்பட்டியல்

1. அறவாணன்.க.ப. — மரவழிபாடு திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, பாரிநிலையம், சென்னை. 1984.

அமிர்தலிங்கம் த. — திருக்கோயில் இதழ், செப்டம்பர் 1987.

அறிவொளி அ. — பஞ்சபூதத்தலவரலாறு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம். 1985.

4. இந்திராபார்த்தசாரதி — தமிழ் இலக்கியங்களில் வைணவம், க. வெங்கடராமன் (தமிழாக்கம்), தமிழ்ப்புத்தகாலயம், சென்னை 1992.

5. இராமநாதன் பீ. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி இன்ஸ்டியூட் ஆப்சவுத் இண்டியன் ஸ்டடீஸ், சென்னை, 1991.

6. இராமலிங்கம் மு. நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவரசுவாமி திருக்கோயில் திருவிழாக்கள், 7-117 ஈஸ்வரன் கோயில் தெரு, புத்தூர் (அஞ்சல்) 517 503. சித்தூர் மாவட்டம் - ஆந்திர மாநிலம், 1991.

7. எதிராஜன் ஆ. 108 வைணவதிவ்யதேச ஸ்தல வரலாறு, ஸ்ரீ வைணவ சித்தாந்தநூற் பதிப்புக்கழகம், காரைக்குடி 1995.

8. கங்காதரன் ச.
இராசாமணி செ.
இந்துசமயம் ஓர் அறிமுகம்,
மதுரை,
1994.

9. கணபதி கோ. (பதி)
"திருவகீந்திரபுரம்
தோத்திரப்பாமாலை"
திருவகீந்திரபுரம்
8வது ஆண்டுபடிவிழா மலர்,
முண்டியம்பாக்கம்,
1969.

10. கணபதி வை.
சிற்பச்செந்நூல்,
தொழில் நுட்பக்கல்வி,
இயக்கம் தமிழ்நாடு,
சென்னை,
1978.

11. கமலக்கண்ணன் வ.
தொண்டைநாடும்
வைணவமும்,
திருவேங்கடவன்
பதிப்பகம்,
கீழ்ப்புத்தூர்,
1994.

12. கழகப் புலவர் குழுவினர் (தொ.ஆ)
கழகத்தமிழ் அகராதி,
சைவசித்தாந்த நூற்பதிப்பு
கழகம், சென்னை,
1969.

13. காந்திதாசன் மா. தமிழகத்தில் முருகவழிபாடு, என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், உடுமலைப்பேட்டை, 1992.

14. கிருஷ்ணஸ்வாமி எஸ். ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம் I, திருச்சி, 1980.

15. சண்முகம்பிள்ளை மு. (பதி) அஷ்டப்பிரபந்தம் தெளிவுரையுடன், நாராயணவேலுப்பிள்ளை (உரை), முல்லை நிலையம், சென்னை, 1995.

16. சாமிநாதையர் உ.வே. (பதி) பரிபாடல், பரிமேலழகர் (உரை) உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, 1918.

17. சாமிநாதையர் உ.வே. (பதி) சிலப்பதிகாரம், அடியார்க்குநல்லார் (உரை) உ.வே.சா பதிப்பு, சென்னை, 1968.

18. சாமிநாதையர் உ.வே. பட்டினப்பாலை,
உ.வே.சா (உரை)
சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
சென்னை - 1,
1968.

19. சீனிவாசன் மதி. பெரியதிருமொழி
நாலாயிரத் திவ்வியப்
பிரபந்தம்,
வராகிபிரிண்டர்ஸ்,
பதிப்பகத்தார்,
144, ஆழ்வார் பேட்டை தெரு,
ஆழ்வார்பேட்டை,
சென்னை,
1998.

20. சுந்தரசண்முகனார் கெடிலக்கரைநாகரிகம்,
திருநெல்வேலி
தென்னிந்திய
சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
1975.

21. சுப்பிரமணியன் பெ. பழனிமுருகன் கோவிலும் தீர்த்தமும், ராம்குமார் பதிப்பகம், பழனி, 1994.

22. செந்தினாயகம்பிள்ளை தி.மு. தண்டபாணி விஜயம், பி.ஆர்.ராம அய்யர் அண்டு கம்பெனி, திருவண்ணாமலை, உருத்திரோற்காரி வருஷம்.

23. தொல்காப்பியர் தொல்காப்பியம் (பொருள்), இளம்பூரணர் (உரை). சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969.

24. நாகப்பா நாச்சியப்பன் திருப்பரங்குன்றம் கோயில்-வேற்கோட்டம், தமயந்தி பதிப்பகம், சென்னை, 1989.

25. நாகப்பா நாச்சியப்பன் திருக்கோயில் வழிபாடு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
1991.

26. நாராயணவேலுப்பிள்ளை எம்.
தெய்வீகக் கதைகளும் -
கலைகளும்,
செந்தில் பதிப்பகம்,
சென்னை,
1985.

27. நீலகண்டசாஸ்திரி கே.ஏ. சோழர்கள் I
இந்தியன் கவுன்ஸில்
ஆப் ஹிஸ்டாரிகல்ரிசர்ச்,
நியூதில்லி,
1989.

28. பரமசிவானந்தம் அ.மு. சமுதாயமும் பண்பாடும்,
தமிழ்க்கலைப்பதிப்பகம்,
சென்னை,
1970.

29. புலியூர்க்கேசிகன் திருக்குறள்,
பரிமேலழகர் (உரை),
பூம்புகார் பிரசுரம்,
சென்னை,
1976.

30. மதுரகவிஸ்ரீநிவாச அய்யங்கார்

மதுரகவிஸ்ரீகண்ணன்
அவதாரம்,
சென்னை,
1991.

31. மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார்

மதுரகவிசேரநாட்டுத்
திருப்புகழ்,
வேதாபப்ளிகேஷன்ஸ்,
சென்னை ,
1994.

32. மறைமலையடிகள் தமிழர்மதம்
சைவசித்தாந்தநூற்
பதிப்புக்கழகம், சென்னை,
1958.

33. மாதவன் வே. இரா. தமிழில் தலபுராணங்கள்,
தஞ்சாவூர்,
1995.

34. முத்துசாமிபிள்ளை கோ.மு.

கோயிற்களஞ்சியம்
அறிமுகம்,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1991.

35. ராஜகோபாலன் டி.எஸ். வைணவ ஆசாரியர்கள்-III
ஸ்டார் பிரசுரம்,
சென்னை,
1973.

36. வெங்கட்ராமன் ஆர்.
இந்திய கோயில் கட்டிடக்
கலை வரலாறு,
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்,
மதுரை,
1983.

37. வேதாந்த தேசிகர் அச்யுதசதகம்,
ஈ.டி. ஸ்ரீனிவாசாச்சாரியார்
(உரை)
ஸ்ரீவேதாந்ததேசிககைங்கர்ய
கமிட்டி,
திருவஹீந்திரபுரம்,
1992.

38. வேதாந்ததேசிகர் ஸ்ரீ ஹயக்ரீவ
ஸ்தோத்திரம்
ஸ்ரீராமதேசிகாசார்யார்,
(உரை)
தி லிட்டில் ப்ளவர்
கம்பெனி, சென்னை,
1998.

39. வேதாந்ததேசிகர் ஸ்ரீதேசிகப்பிரபந்தம்,
ஸ்ரீராமதேசிகாசார்யன்
வ.ந. (பதி),
வத்தலக்குண்டு,
1944.

40. வேற்பிள்ளை க. (பதி) வில்லிபாரதம்
விவேகாநந்தயந்திரசாலை,
கலியுகம் ரு.000

41. கலைக்களஞ்சியம்,
தமிழ் வளர்ச்சிக்கழகம்,
சென்னை,
1959.

42. திருவயிந்திரபுரத்து
திருக்கோயில்
கல்வெட்டுக்களும்
ஸ்தலபுராணச்
சுருக்கங்களும்,
ஸ்ரீதேவ நாதகைங்கர்ய
சபை,
திருவகீந்திரபுரம்,
1982.

43. ஸ்ரீலக்ஷ்மி
ஹயக்ரீவகைங்கரியஸபா
பத்தாவது ஆண்டுவிழாமலர்,
திருவஹீந்திரபுரம்,
1983.

44. அருள்மிகு தேவநாதசுவாமி
திருக்கோயில்
திருத்தலவரலாறு,
அ/மி தேவநாதசுவாமி
திருக்கோயில்,
திருவந்திபுரம்,
1998.

...............

# பின்னிணைப்பு

## பெரிய திருமொழி - மூன்றாம் பத்து

## திருவயிந்திரபுரம்

இருந்தண் மா நிலம் ஏனம் அது ஆய், வளை
மருப்பினில் அகத்து ஒடுக்கி,
கருந்தண்மா கடல்கண் துயின்றவன் இடம் -
கமலநல் மலர்த்தேறல்
அருந்தி இன் இசை முரன்றுஎழும் அளிகுலம்
பொதுளி அம் பொழிலூடே
செருந்தி நாள்மலர் சென்று அணைந்து உழிதரு
திருவயிந்திரபுரமே.

மின்னும் ஆழி அங்கையவன், செய்யவன்
உறை தரு திரு மார்பன்,
பன்னு நாள்மறைப் பல் பொருள் ஆகிய
பரன் இடம்-வரைச் சாரல்
பின்னும் மாதவிப் பந்தலில் பெடை வர,
பிணி அவிழ் கமலத்துத்
தென்ன என்று வண்டு இன் இசை முரல்தரு
திருவயிந்திரபுரமே.

வையம் ஏழும் உண்டு ஆல் இலை வைகிய
மாயவன், அடியவர்க்கு
மெய்யன் ஆகிய தெய்வநாயகன் இடம் -
மெய்தகு வரைச் சாரல்
மொய் கொள் மாதவி சண்பகம் முயங்கிய
முல்லை அம் கொடி ஆட,
செய்ய தாமரைச் செழும் பணை திகழ்தரு
திருவயிந்திரபுரமே. 3

மாறு கொண்டு உடன்று எதிர்த்த வல் அவுணன் தன்
மார்பு அகம் இரு பிளவாக்
கூறு கொண்டு அவன் குலமகற்கு இன் அருள்
கொடுத்தவன் இடம் மிடைந்து
சாறு கொண்ட மென் கரும்பு இளங்கழை தகை
விசும்பு உற மணி நீழல்
சேறு கொண்ட தண் பழனம் அது எழில் திகழ்
திருவயிந்திரபுரமே. 4

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று
அகல் இடம் அளந்து, ஆயர்
பூங்கொடிக்கு இன விடை பொருதவன் இடம் -
பொன் மலர் திகழ் வேங்கை,
கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு
குரக்கினம் இரைத்து ஓடி
தேன் கலந்த தண் பலங்கனி நுகர்தரு
திருவயிந்திரபுரமே. 5

கூன் உலாவிய மடந்தை தன் கொடுஞ் சொலின்
திறத்து இளங் கொடியோடும்
கான் உலாவிய கரு முகில் திரு திறந்தவன்
இடம் கவின் ஆரும்
வான் உலாவிய மதி தவழ் மால் வரை
மா மதிள் புடை சூழ
தேன் உலாவிய செழும் பொழில் தழுவிய
திருவயிந்திரபுரமே. 6

மின்னின் நுண்இடை மடக்கொடி காரணம்,
        விலங்கலின்மிசை இலங்கை
மன்னன் நீள் முடி பொடி செய்த மைந்தனது
        இடம் - மணி வரை நீழல்
அன்னம் மாமலர் அரவிந்தத்து அமளியில்
        பெடையொடும் இனிது அமர
செந்நெல்ஆர் கவரிக் குலைவீசு தண்
        திருவயிந்திரபுரமே. 7

விரைகமழ்ந்த மென்கருங்குழல் காரணம்
        வில் இறுத்து, அடல் மழைக்கு
நிரைகலங்கிட வரைகுடை எடுத்தவன்
        நிலவிய இடம் - தடம் ஆர்
வரைவளம் திகழ் மதகரி மருப்பொடு
        மலை வளர் அகில் உந்தித்
திறைகொணர்ந்து அணை செழுநதி வயல்புகு
        திருவயிந்திரபுரமே. 8

வேல்கொள் கைத்தலத்து அரசர் வெம் போரினில்
விசயனுக்கு ஆய், மணித்தேர்க்
கோல்கொள் கைத் தலத்து எந்தை பெம்மான் இடம் -
குலவு தண் வரைச் சாரல்
கால்கொள்கண் கொடிகைஎழக் கமுகு இளம்
பாளைகள் கமழ் சாரல்
சேல்கள் பாய்தரு செழு நதிவயல் புகு
திருவயிந்திரபுரமே. 9

மூவர் ஆகிய ஒருவனை, மூவுலகு
உண்டு உமிழ்ந்து அளந்தானை,
தேவர் தானவர் சென்று சென்று இறைஞ்ச, தண்
திருவயிந்திரபுரத்து
மேவு சோதியை வேல் வலவன் கலி
கன்றி விரித்து உரைத்த
பாவு தண் தமிழ்ப் பத்து இவை பாடிடப்
பாவங்கள் பயிலாவே. 10

....................

